# 1. உயர்வோம்

ஒருத்தர் ஒரு தவறு செஞ்சுடறார்ன்னு வச்சுக்குங்க.

உடனே 'நீ செய்தது தவறு' ன்னு சொல்றது ஒருவகை. அதுக்குப் பதிலா, 'எதுசரின்னு அவர் புரிந்துகொள்ள உதவி செய்றது' இன்னொரு வகை.

இந்த இரண்டாவது வகை இருக்கு பாருங்க.... நிர்வாக இயல்-லே இது ரொம்ப முக்கியம்.

அலுவலகத்திலே வேலை பார்க்கிற ஒருத்தர் முக்கியமா தெரிஞ்சிருக்க வேண்டியது என்ன தெரியுமா?

சக ஊழியர்கள்கிட்டே எப்படிப் பழகணும்? மேலதிகாரிகள்கிட்டே எப்படிப் பழகணும்? தனக்குக் கீழே வேலை செய்கிறவர்கள்கிட்டே எப்படிப் பழகணும்? வாடிக்கையாளர்கள்கிட்டே எப்படிப் பழகணும்?

இவங்க எல்லோரிடமும் செம்மையான உறவை ஏற்படுத்திக்கிறது எப்படி? இதையெல்லாம் சொல்லிக் கொடுக்கிற பாடம்தான் (Inter Personal Skills) திறமையான உறவு என்பது.

எந்த வேலையிலே இருந்தாலும் சரி... இந்த... ''உறவுகளை வளர்க்கும் திறன்'' உள்ளவங்க சீக்கிரம் முன்னுக்கு வந்துடறாங்க.

மற்றவர்களிடம் உறவை பலப்படுத்திக்கிறது எப்படி- ன்னு தெரிஞ்சுக்கிட்டோம்ன்னா எந்தவொரு

தடையையும் சுலபமா தாண்டி... செய்யிற தொழில்லே முன்னுக்கு வந்துடலாம்.

ஹார்வர்ட் பல்கலைக் கழகத்துலே ஒரு கணக்கெடுப்பு பண்ணிப் பார்த்தாங்களாம். 'பார்க்கிற வேலையிலே எதுமாதிரி குணாதிசயம் உள்ளவங்க வேகமா முன்னுக்கு வர்றாங்க'- ன்னு தெரிஞ்சுக்கறதுக்காக இந்த கணக்கெடுப்பு.

வெவ்வேறு துறையிலே வேகமா முன்னுக்கு வந்திருக்கிற பலபேரை சந்திச்சு இந்த 'சர்வே'யை நடத்தியிருக்காங்க. அவங்க கண்டுபிடிச்சு சொல்லியிருக்கிற உண்மை என்ன தெரியுமா?

ஒருத்தர் ஒரு வேலையிலே இருந்தா... அது சம்பந்தப்பட்ட 'சப்ஜெக்ட்' பற்றிய அறிவு 35 சதவீதம் இருந்தா போதும்.

ஆனா 'உறவுகளை வளர்க்கும் திறன்'- Inter Personal Skills - 65 சதவீதம் வேணும். இப்படி உள்ளவங்க சீக்கிரம் முன்னுக்கு வந்துடறாங்க.

அதனாலே ஒருத்தருக்கு வேலை சரியா புரியலேன்னா கூட விவரமா மத்தவங்ககிட்டே பழகறது எப்படிங்கறது புரிஞ்சா போதும்... அவரு முன்னுக்கு வந்துடலாம். அலுவலகங்களிலே மட்டும் இல்லே... எல்லா இடங்கள்லேயும் இது ரொம்ப முக்கியம். வீட்டுக்குள்ளேயும் இது முக்கியம். வீட்டுக்கு வெளியேயும் இது முக்கியம்.

அடுத்தவர்கள்கிட்டே பழகறது எப்படிங்கறதை தெரிஞ்சிக்காதவன் வாழ்க்கையிலே முன்னேற முடியாது.

இன்றைக்கு ஆயுதங்களாலே காயப்படுத்திக் கொள்கிறவர்களை விட, வார்த்தைகளாலே காயப் படுத்திக் கொள்கிறவர்கள் தாம் அதிகம்.

பெரியவர்கள் (தலாய்லாமா) என்ன சொல்றாங்க தெரியுமா?

''நீங்கள் இந்தப் பூமியில் பிறந்ததன் அர்த்தம் பூர்த்தியாக வேண்டும் என்றால், அடுத்தவருக்கு உதவி செய்யுங்கள். அடுத்தவருக்கு உதவி செய்ய முடியாவிட்டால் கூடப் பரவாயில்லை. ஆனால் யாரையும் புண்படுத்தி விடாதீர்கள்!'' அப்படின்னு சொல்றாங்க.

எனக்குத் தெரிந்த ஒருத்தர் ஓர் அலுவலகத்திலே வேலை பார்க்கறார். அவர் சொல்லுவார்...

''எனக்கு இந்த Interpersonal Skill ரொம்ப அதிகம் சார். சக ஊழியர்கள்கிட்டே ரொம்ப சுமுகமா நடந்துக்குவேன்.

என்கூட வேலை பார்க்கிற ஒருத்தருக்கு ஏதாவது ஒரு கஷ்டம்ன்னா... அந்த சமயத்துலே அவர் செய்ய வேண்டிய வேலையை நான் செஞ்சுடுவேன் சார்!''- அப்படிம்பார்.

நான் அவர்கிட்டே ''சமீபத்துலே அப்படி ஏதாவது செஞ்சிருக்கீங்களா?''ன்னு கேட்டேன்.

''செஞ்சிருக்கேன் சார்! போன வாரம் புதன்கிழமை ஆபீஸ்லே என் பக்கத்து சீட் காரருக்கு வயித்துவலி.... உடனே நான் 'மெடிக்கல் லீவு போட்டுட்டு எங்க வீட்டுக்கு போய்ட்டேன் சார்!''

அப்படின்னார்.



## 2. அறிவால் வரும் ஆபத்து!

ஒரு குரு.

இளம் சீடர்கள் எதிர்லே உட்கார்ந்திருக்காங்க. குரு, பாட்டம் நடத்திக்கிட்டிருக்கார்.

சீடர்களுக்கு ஒரு ஆசை.

அதாவது ஒரு முக்கியமான மந்திரத்தை நம்ம குருநாதர்கிட்டேயிருந்து கத்துக்கணும்ங்கறது அவங்க ஆசை.

அது என்ன மந்திரம் - ன்னா... இறந்தவரை உயிர்ப்பிக்கும் புனித மந்திரம்.

அதாவது செத்தவங்களுக்கு மீண்டும் உயிர் உண்டாக்குகிற மந்திரம்.

"குருவே! தயவு பண்ணி அந்த மந்திரத்தை எங்களுக்கு உபதேசிக்கணும்!" - ன்னு கேட்டாங்க.

"அது ரொம்ப ஆபத்தானது... அது என்னத்துக்கு உங்களுக்கு? வேண்டாமே!" - ன்னார் குரு.

"எங்களுடைய நம்பிக்கை உறுதிப்படறதுக் காகத்தான் கேட்கிறோம்... வேறே ஒண்ணுமில்லே!"- ன்னாங்க சீடர்கள்.

"பக்குவப்படாத அறிவு ஆபத்தானது!" - ன்னார் குரு. இது சீடர்களுக்குப் புரியலே!

"அது எப்படிங்க... பக்குவப்படாத அறிவு ஆபத்தானது- ன்னு சொல்றீங்க - அப்படின்னா என்ன?" - ன்னு கேட்டாங்க சீடர்கள்.

குரு அதுக்கு விளக்கம் கொடுத்தார்.

அந்த மந்திரத்தை எப்போ பயன்படுத்தணும்ங் கறதை அறியக் கூடிய ஞானம் ஏற்படுகிற வரைக்கும் அதைத் தெரிஞ்சிக்காமே இருக்கிறதுதான் நல்லது... இல்லேன்னா ஆபத்து!" - ன்னார்.

ஆனா அந்த சீடர்கள் அதைக் கேட்கிற மாதிரி இல்லே! ரொம்ப பிடிவாதம் பண்ண ஆரம்பிச் சுட்டாங்க.

"சரி... வாங்க சொல்றேன்!" ன்னார் குரு.

எல்லாரும் வந்தாங்க.

அந்தப் புனித மந்திரத்தை அவங்களுக்கு ரகசியமா உபதேசம் பண்ணினார். உபதேசம் பண்ணி விட்டு அவங்களுக்கு எச்சரிக்கையும் கொடுத்தார்.

"இந்த மந்திரத்தை நல்லா ஆராய்ந்து பார்த்ததுக்கு அப்புறம்தான் உச்சரிக்கணும் ... அவசரப்பட்டு ஏதும் செய்திடக் கூடாது...!" அப்படின்னு ஒரு தடவைக்குப் பலதடவை எச்சரிக்கை செய்தார்.

சரி-ன்னு சொல்லிபுட்டு அவங்கள்லாம் மந்திரத்தைக் கத்துக்கிட்டு எழுந்திரிச்சுப் போய்ட் டாங்க.

ஒருநாள் அந்த சீடர்கள் எல்லாம் மணற்பாங்கான இடத்துலே நடந்து போய்க்கிட்டிருந்தாங்க. ஒரு

இடத்துலே எலும்புகள் குவியலா கிடந்தது. உடனே இந்த சீடர்கள் முன்னே பின்னே யோசிக்காமே தியானமும் செய்யாமே மந்திரத்தின் பயனைச் சோதித்துப் பார்க்க எண்ணி... அந்த மந்திரத்தை உச்சரிச்சாங்க. அவ்வளவுதான்.

உடனே என்ன ஆச்சு தெரியுமா?

அந்த எலும்புகள் எல்லாம் ஓநாய்களாக மாறி... அவங்களை துரத்த ஆரம்பிச்சுது.

சீடர்கள் எல்லாம் தலை தெரிக்க ஓட ஆரம்பிச்சுட்டாங்க. ஓநாய்களும் விடலே... அவங்களைத் துரத்திப் பிடிச்சிக் கடித்துக் குதற ஆரம்பிச்சுட்டுது.

'அப்பத்தான் அந்த சீடர்களுக்கு ... குரு சொன்ன அறிவுரையின் அர்த்தம் புரிஞ்சுது.

'பக்குவப்படாத அறிவு ஆபத்தானது'- அப்படிங்கறது!

அதனாலே ... இதுலேயிருந்து நாம தெரிஞ்சிக்க வேண்டியது என்னன்னா ...

நாம் நம்ம அறிவை வளர்த்துக்கிட்டா மட்டும் போதாது... அந்த அறிவை எப்போ எப்படி பயன்படுத்தணும்ங்கற பக்குவமும் நமக்கு வரணும்.

அப்பத்தான் வாழ்க்கை நல்லபடியா அமையும். இல்லேன்னா இடைஞ்சல்தான்.

இந்தக் காலத்திலே சில சின்ன பிள்ளைங்களுக்கே அறிவு ரொம்பப் பக்குவப்பட்டிருக்குங்கறதை உணர முடியுது.

ஒரு சின்ன பையன். பள்ளிக் கூடத்துலே 'மார்க் லிஸ்ட்' கொடுத்தாங்க. வாங்கிக்கிட்டு அவசரமா வீட்டுக்கு ஓடினான். எதிர்லே வந்த ஒருத்தர் கேட்டார்.

"என்ன அவசரம் ... ஏன் இப்படி வேகமா ஓடறே?" -ன்னார்.

"எங்க அம்மாகிட்டே அடிவாங்கணும்... அதுக்காகத்தான் ஓடறேன்!" -னான்

"அடி வாங்கறதுக்கா இவ்வளவு அவசரம்?" ன்னார் அவர்.

"அப்படி இல்லீங்க ... நான் போறதுக்குள்ளே எங்க அப்பா வீட்டுக்கு வந்துட்டார்ன்னா அவர்கிட்டே அடி வாங்க வேண்டியிருக்கும். அதை 'அவாய்ட்' பண்றதுக்காகத்தான் இப்படி ஓடறேன்!" அப்படின்னான் அந்தப் பையன்.



# 3. புகைப் பழக்கம்

ஒருத்தர் சிகரெட்டும் கையுமா வந்தார்...

" சார் ... இந்த புகைப் பிடிக்கிற பழக்கத்தை நிறுத்திடணும்ன்னுதான் பார்க்கறேன்! முடியலே!" -ன்னார்.

"புகைப் பிடிக்கிறதை நிறுத்தறது ரொம்ப சுலபம் சார்...!" -ன்னார் இன்னொருத்தர்.

"எப்படி சொல்றீங்க?"- ன்னு கேட்டார் அவர்.

"நான்கூட ஏற்கனவே பத்துத்தடவை அந்தப் பழக்கத்தை நிறுத்தியிருக்கேன் சார்!"- அப்படின்னார் இவர்.

இதுலேயிருந்து என்ன தெரியிது?

புகைப் பழக்கத்தை திடீர்ன்னு விட்டுடறது கஷ்டம்தான்னு தெரியுது!

இருந்தாலும் இது சம்பந்தமான ஆராய்ச்சி- அனுபவம் - இது இரண்டையும் அடிப்படையாகக் கொண்டு ... சில வழிமுறைகளைச் சொல்றாங்க.

அதாவது புகைப்பிடிக்கிறதை நிறுத்த பத்து வழிகள் உண்டுன்னு சொல்றாங்க.

அது என்னென்னங்கறதைத் தெரிஞ்சுக்கிட்டா உபயோகப்படுதான்னு பார்க்கலாமே!

முதல் கருத்து என்னன்னா...

கொஞ்ச நாளைக்கு புகைப் பிடிக்கிற நண்பர்களை விட்டு விலகியிருக்கணும். இதனாலே புகை பிடிக்கிற ஆசை குறையும்! அந்தப் பழக்கத்தை மறுபடியும் ஆரம்பிக்கக் கூடாதுங்கற எண்ணம் உறுதிப்படும்.

இரண்டாவது கருத்து: புகைப்பிடிக்கறதை எதிர்த்து தீவிரமா பிரச்சாரம் செய்ய ஆரம்பித்து விடவேண்டும்... அது அடுத்தவங்களுக்கும் பயன்படும். உங்களுக்கும் உபயோகப்படும். உங்க உள்ளுணர்வை அது தூண்டும் ... உங்களை உறுதி கொள்ள வைக்கும்!

மூன்றாவது கருத்து: தினமும் ரெண்டு தடவை குளிக்கணும் எப்படி தெரியுமா? முதல்லே வெது வெதுப்பான தண்ணீர். அப்புறம் குளிர்ந்த நீர் - இப்படி மாற்றி மாற்றிக் குளிக்கணும்.

நாலாவது கருத்து: உடற்பயிற்சிகள் செய்யணும்.

மூச்சு வாங்கற மாதிரியான பயிற்சிகள் நல்லது. பிராணயாமம்-ங்கற மூச்சுப் பயிற்சி ரொம்ப நல்லது.

ஐந்தாவது கருத்து: சாப்பாடு மிதமா இருக்கணும். சீரா இருக்கணும் பச்சைக் காய் கறிகள் - பழங்கள்- சாப்பாட்டுலே சேர்த்துக்கலாம். அடிக்கடி கொஞ்சம் கொஞ்சமா சாப்பிட்டு ரத்தத்துலே சர்க்கரையின் அளவை பராமரிக்கணும். இது நரம்புகளை அமைதிப்படுத்தும்.

ஆறாவது கருத்து: ரொம்ப நேரம் பசியோடு இருக்கக் கூடாது. புகைப் பிடிக்கறதை நிறுத்த முயற்சி செய்யும் போது எடைக் குறைப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளக் கூடாது.

ஏழாவது கருத்து: காபி, தேநீர், மதுபானம் - அப்புறம் போதைப் பொருள்கள் கலந்த உணவுகள்- இதெல்லாம் வேணாம். புகைப் பிடிக்கறதை அதெல்லாம் ஊக்கப்படுத்தும். கடுகு - மிளகு - அப்புறம் காரமான பொருள்களை தவிர்க்கணும்.

உப்பு அளவை குறைக்கணும். தினமும் பத்து குவளை தண்ணீராவது குடிக்கணும். வெறும் நீர் - புகை பிடிக்கிற ஆவலைத் தணிக்கும்!

எட்டாவது கருத்து: கையிலே சிகரெட், புகையிலை ஏதாவது இருந்தா உடனே தூக்கி எறிஞ்சுடுங்க. அது கையிலே இருக்கிற வரைக்கும் புகைப்பிடிக்கிற ஆசை வந்துக்கிட்டே இருக்கும்!

ஒன்பதாவது கருத்து: இறை நம்பிக்கை உள்ளவங்க... புகைப் பிடிக்கிற எண்ணம் வர்றப்போ எல்லாம் பிரார்த்தனை செய்ய ஆரம்பிச்சுடலாம்.

பத்தாவது கருத்து: உங்களுக்கு ரொம்பவும் வேண்டியவங்க யாரோ... அவங்ககிட்டே எல்லாம் நீங்க புகைப் பிடிக்கிறதை நிறுத்திட்டதா சொல்லிடுங்க.

இந்த பத்து வழிகளையும் கடைப்பிடிக்க ஆரம்பிச்சுட்டா புகைப்பிடிக்கும் பழக்கத்தை நிறுத்திபுடலாம்ன்னு சொல்றாங்க அனுபவப் பட்டவங்க!

முயற்சி பண்ணிப் பார்க்கலாம்.

ஒரு முக்கியமான இடத்துலே நின்னுக்கிட்டு இருந்தார் ஒருத்தர். அங்கே வந்த இன்னொருத்தர் "ஏன் சார் இந்த இடத்துலே சிகரெட் பிடிக்கலாமா?" ன்னு அனுமதி கேட்டார்.

"இந்த இடத்துலே சிகரெட் பிடிக்கக் கூடாதுங்க!" - ன்னார் இவர்.

"நீங்க இப்படி சொல்றீங்க ... ஆனா இந்த இடத்துலே கீழே நிறைய சிகரெட் துண்டுகள் கிடக்கே ... அவங்கள்லாம் யாரு?" -ன்னார் அவர்.

"அவங்கள்லாம் உங்க மாதிரி என்கிட்டே அனுமதி கேட்காதவங்க!" அப்படின்னார் இவர்.



# 4. பேராசை

அள்ள அள்ளக் குறையாதது அட்சய பாத்திரம் அது நமக்குத் தெரியும். கேள்விப்பட்டிருக்கோம்.

ஆனா போடப் போட நிரம்பாத ஒரு பாத்திரம் உண்டு. அது என்ன தெரியுமா?

நம்மள்லே, பலபேர்கிட்டே அந்த பாத்திரம் உண்டு. அதுதான் 'பேராசை' என்கிற பாத்திரம், அதை நிறைவு செய்யவே முடியாது.

பேராசையைப் பற்றி சூஃபி இலக்கியத்திலே ஒரு பிரபலமான கதை உண்டாம். அதை ஒரு பெரியவர் (சுவாமி சுகபோதானந்தா) எடுத்துச் சொல்லியிருக்கார்.

ஒரு மன்னர் நகர்வலம் போய்க்கிட்டிருக்கார்.

ஒரு பிச்சைக்காரன் மன்னர் எதிர்லே வந்தான். "பிச்சை கொடுங்க!"- ன்னான்.

"என்னுடைய அமைதியைக் கெடுக்காதே... போ!"-ன்னார் மன்னர்.

அவன் சிரிச்சான்.

"அரசே! உங்கள் அமைதி கெடக்கூடிய நிலையிலே இருந்தால் அதற்குப் பெயர் அமைதியே கிடையாது!"-ன்னான்.

எதிர்லே நிற்கிறது வெறும் பிச்சைக்காரன் இல்லே... யோகி! -ங்கறதை மன்னர் புரிஞ்சிக் கிட்டார்.

"துறவியே! உங்களுக்கு என்ன வேணும்ன் னாலும் கேளுங்க... கொடுக்கறேன்!"- ன்னார்.

அந்தத் துறவி மறுபடியும் சிரிக்கிறார்.

"அரசே! உங்களாலே முடியாததை எல்லாம் கொடுக்க முடியும்ன்னு சத்தியம் செய்யாதீங்க!" -ன்னார்.

மன்னருக்கு கோபம் வந்துட்டுது. என்ன இவர் இப்படி சொல்றார்ன்னு நினைச்சார்.

நகர்வலத்தை பாதியிலே நிறுத்தினார்.

'வாங்க அரண்மனைக்கு!'- ன்னார். துறவியை அழைச்சிக்கிட்டு அரண்மனைக்கு வந்தார்.

துறவி தன்கிட்டே இருந்த பிச்சைப் பாத்திரத்தை நீட்டினார். "இது நிறைய எனக்குப் பொற்காசுகள் வேணும்!"-ன்னார்.

'பூ! இவ்வளவுதானா'-ன்னு சொல்லிக்கிட்டே கையைத் தட்டினார் மன்னர்.

ஒரு பெரிய தாம்பாளம் நிறைய பொற்காசுகள் வந்து சேர்ந்துது. அதை அள்ளிப் போட்டார். போடப் போட அந்தப் பிச்சைப் பாத்திரம், பொற்காசுகள் அத்தனையையும் உள்ளே வாங்கிக்கிட்டே இருக்கு.

அரசாங்க கஜானாவே காலியாயிட்டுது. மூட்டை மூட்டையா பொற்காசுகளை கொட்டியாச்சு. அது விழுங்கிக்கிட்டே இருக்கு. கடைசி வரை அந்த பிச்சைப் பாத்திரம் நிரம்பவே இல்லை. அரசர்கிட்டே இருந்த கர்வம் போய் விட்டது.

அப்படியே 'பொத்'துன்னு துறவி கால்லே விழுந்தார். அப்போ அந்தத் துறவி சொன்னாராம்:

"மன்னா! இந்தப் பிச்சைப் பாத்திரத்தை உங்களாலே மட்டுமில்லே ... வேறு யாராலேயும் நிரப்ப முடியாது. அதுக்கு என்ன காரணம்ன்னா... இது சாதாரண பிச்சைப் பாத்திரம் அல்ல...

பேராசைகளுடன் வாழ்ந்து செத்துப்போன ஒரு மனிதனின் மண்டை ஓடு இது!'' அப்படின்னாராம்.

பாருங்க...இதுதான் அந்த சூஃபி இலக்கியக் கதை.

செத்த பிறகும் நிறைவு இல்லேன்னா அது எப்பேற்பட்ட பேராசையா இருக்கும்ன்னு யோசிச்சுப் பார்த்துக்குங்க.

நம்ம ஆளு ஒருத்தர் கல்யாணம் பண்ணிக்க பொண்ணு பார்த்துக்கிட்டிருந்தார்.

அழகு-அறிவு-படிப்பு எதுவும் தேவை இல்லே... பணம் மட்டும் இருந்தா போதும்ன்னு பார்க்கிறவங்ககிட்டேயெல்லாம் சொல்லி வச்சார்.

ரொம்ப நாளைக்கப்புறம் ஒரு பணக்காரர் கிடைச்சார். அவரு சொன்னார்.

''இதோ பாருங்க... எனக்கு 20 வயசுலே ஒரு மகள்... அவளை நீங்க கல்யாணம் பண்ணிக்கிட்டா 2 லட்சம் பணம் கொடுப்பேன்.

25 வயசுலே ஒரு பெண்ணு இருக்கா... அவளைக் கல்யாணம் பண்ணிக்கிட்டா $2^1/_2$லட்சம் தருவேன்.

30 வயசுலே ஒருத்தி இருக்கா அவளைக் கல்யாணம் பண்ணிக்கிட்டா 3 லட்சம் தருவேன்! என்ன சொல்றே?''-ன்னார்

இவன் கொஞ்ச நேரம் யோசித்தான். அதுக்கப்புறம் அவரை நிமிர்ந்து பார்த்தான்.

''ஏன் சார்... உங்ககிட்டே 50 வயசுலே ஏதாவது பொண்ணு இருக்கா?'' -அப்படின்னான்.



# 5. தேக அபிமானம்

"அந்த ஆளு என்னை கன்னாபின்னான்னு திட்டி விட்டான் சார்! அதை நினைச்சா ரொம்ப வருத்தமாயிருக்கு சார்!" அப்படின்னு சொல்லி கவலைப்பட்டார் ஒருத்தர்.

"இதுலே கவலைப்படறதுக்கு என்ன இருக்கு?" ன்னார் ஒரு பெரியவர். அவரு ஒரு மகான்.

"என்ன சார் இப்படி சொல்றீங்க? ஒருத்தர் நம்மைப் பார்த்துத் திட்டினா வருத்தமா இருக்காதா?" -ன்னார் இவர்.

"அது எப்படி வருத்தமா இருக்கும்? திட்டறதுங்கறது என்ன? அது வெறும் சப்தம் தானே!" -ன்னார் அந்தப் பெரியவர்.

நம்ம ஆளுக்குத் தலையைப் பிச்சிக்கணும் போல இருந்தது. இருக்காதா பின்னே? நமக்கே அப்படித்தானே தோணுது!

அந்தப் பெரியவர் சொல்றது ரொம்பப் பெரிய விஷயம். அதை நாம புரிந்துகொள்ள முயற்சி பண்ணலாம்ன்னா, நடைமுறை வாழ்க்கைக்கு அது ஒத்து வர்ற மாதிரி தெரியமாட்டேங்குது. இருந்தாலும் அந்தப் பெரியவர் அதுக்கு என்னதான் விளக்கம் கொடுக்கிறார்ன்னு பார்ப்போமே!

ஒரு ரயில் போய்க்கிட்டிருக்கு! அதிலே ஒரு சாது போய்க்கிட்டிருக்கார். அந்த ரயில்லே ஹரித்துவாரம் போய்க்கிட்டிருக்கார் அவர்.

ரயில்லே ஏகப்பட்ட கூட்டம். நம்ம ஊர் ரயில்...! கேட்கவா வேணும்! டிக்கட் வாங்கிக்கிட்டு பாதிப்பேர்...!

'அது என்னத்துக்கு அனாவசியமா டிக்கெட்' -ங்கற நினைப்பிலே பாதிப்பேர்! இந்த கூட்டத்துக்கு மத்தியிலே அந்த சாதுவும் போய்க்கிட்டிருக்கார்.

உட்கார்றதுக்காக இருந்த இடத்திலே ஒரு ஆள் படுத்திருந்தான். கொஞ்சம் முரட்டு ஆசாமி. அவன் கால் பக்கத்திலே கொஞ்சம் இடம் பாக்கி இருந்தது.

அந்த இடத்திலே இந்த சாது உட்கார்ந்தார்.

ஆனா அந்த ஆள் ராத்திரி முழுவதும் இவரை காலாலே உதைச்சிக்கிட்டே இருந்தான்.

அது இவருக்கு ரொம்ப அவமானமா பட்டுது. அதனாலே துக்கம் ஏற்பட்டுது.

இருந்தாலும் அதை ஒரு மாதிரியா சகிச்சிக்கிட்டே இவர் வந்து சேர்ந்தார்.

பொழுது விடிஞ்சிது.

அந்த சாது ஹரித்துவார் வந்து சேர்ந்தார். அங்கே ஒரு பெரிய ஞானியை அவர் சந்திச்சார்.

இராத்திரி ரயில்லே அந்த ஆள் உதைச்சதையும் - அதனாலே தனக்கு ஏற்பட்ட துக்கத்தையும் இந்த சாது அந்த ஞானிகிட்டே சொன்னார். சொல்லிட்டு... "ஏன் சுவாமி? எனக்குத் துக்கம் ஏற்பட்டதே, அது தவறா?" -ன்னு கேட்டார்.

"தவறுதான்..." -ன்னார் அந்த ஞானி.

"உனக்கு இன்னமும் தேக அபிமானம் போகலைங்கறதைத்தான் இது காட்டுது. அஷ்டாவக்கிரர் என்ன சொல்றார் தெரியுமா?

உண்மையான ஞானி, யாராவது தன்னை வந்தனை செய்தால் அதற்காக சந்தோஷப்பட மாட்டார். யாராவது நிந்தனை செய்தால் அதற்காக வருத்தப்படமாட்டார் - அப்படின்னு சொல்றார்.

நிந்தனை - ங்கறது ஒரு ஒலிதான். தேகாபிமானம் இருக்கிறவரைக்கும் இந்த ஒலி நம்மை வேதனைப் படுத்தும். நான் தேகம் இல்லை, ஆத்மா - ங்கற நினைவு இருந்தா இந்த ஒலி நம்மைப் பாதிக்காது.

மனு என்ன சொல்றார் தெரியுமா?

ஒரு சாதகன் பாராட்டுதலை விஷம் -ன்னு நினைத்து பயப்பட வேண்டும்; அவமானத்தை அமிர்தம்ன்னு நினைச்சி சந்தோஷப்படணும் -ங்கறார்.

அவமானப்பட்டா, கவலைப்படாமே எப்படி, இருக்க முடியும்? -ன்னுதான் நமக்குத் தோணுது.

அதனாலேதான் நம்மள்லே யாரையும் இதுக்கு உதாரணம் காட்ட முடியலே!

புத்தரையும் கபீரையும் உதாரணமா காட்டறாங்க. அவங்களுக்கெல்லாம் அவமானம் ஏற்பட்டப்போ கவலையே படலையாம்.

புத்தரை அவமானப் படுத்தணும்ங்கறதுக்காக, கௌசாம்பி ராணி, ஓர் இளம் பெண்ணை கொலை பண்ணி சடலத்தை புத்தர் குடிசைக்கு முன்னாலே போடச் சொன்னார். போட்டாங்க.

புத்தர்தான் அந்த பெண்ணைக் கெடுத்துக் கொலை பண்ணிட்டார்ன்னு எல்லாரும் நினைச்சாங்க. ஆனா புத்தர் இதைப்பத்தி கவலையே படலே. அப்புறமா உண்மை தெரிஞ்சதும் புத்தர் புகழ் இன்னமும் அதிகமாச்சு.

ஒரு பெரிய சபையிலே ஒரு மோசமான பொண்ணு நுழைஞ்சு தனக்கும் கபீருக்கும் சம்பந்தம் உண்டுன்னு சொன்னாள்! கபீர் கவலைப்படலை!

அவங்க மாதிரியெல்லாம் நாமளும் இருக்கக் கத்துக்கணும். நிந்தனை - அபகீர்த்தி - அவமானம் எல்லாம் ஆண்டவன் கொடுக்கிற பிரசாதம்ன்னு நினைக்கணும்'' -ன்னு சொல்றார் அந்த ஞானி.

இதைக் கேட்ட இந்தக் காலத்து ஆசாமி ஒருத்தர், "நான் கூட அப்படித்தான் சார். யாராவது அவமானப்படுத்தினா கவலைப்படமாட்டேன்.

நேத்துக்கூட ஒருத்தர் என்னை 'பளார்'ன்னு அறைஞ்சுட்டார். நான் கொஞ்சம் கூட கவலைப்படலே... பேசாமே வந்துட்டேன்!'' -னார்.

"ஏன் அப்படி வந்துட்டீங்க?'' -ன்னேன்.

"அவர் அறைஞ்சதுலேயும் ஒரு அர்த்தம் இருந்துது! அதனாலே அப்படி வந்துட்டேன்!'' -னார்.

"ஏன் அறைஞ்சார்?'' -ன்னு கேட்டேன்!

"10 வருஷத்துக்கு முன்னாடி ஒரு 15 ரூபா அவருகிட்டே கடன் வாங்கினேன். அதைக் கேட்டுப் பார்த்துட்டு... கடைசியாதான் அறைஞ்சார்!'' -ன்னார்.

ஆண்டவனுடைய பிரசாதம் இவருக்கு அடிக்கடி கிடைக்கும் போலேயிருக்கு!



# 6. நுண்ணறிவு

ஓர் அரசன் - சேவகன் - இரண்டு பேரும் குதிரையிலே வந்துகிட்டிருக்காங்க.

ரொம்ப தூரம் வந்துட்டாங்க...

அரசனுக்குத் தாகம் எடுத்துது....

தண்ணீர் எங்கே கிடைக்கும்ன்னு பார்த்தாங்க. பக்கத்திலே வீடுகள் எதுவும் இல்லே.

கொஞ்ச தூரத்துலே வேலியிலே ஒரு வெள்ளரிப் பழம் தெரிஞ்சிது.

“அதோ ஒரு வெள்ளரிப்பழம் தெரியுது. அதையாவது பறிச்சி சாப்பிடலாம்!” -ன்னான் மன்னன்.

“இதோ பறிச்சிக்கிட்டு வாரேன்”- ன்னு புறப்பட்டான் சேவகன்.

“அது வெள்ளரிப் பழம் இல்லே...!” - அப்படின்னு ஒரு குரல்.

“யார் அது?” - ன்னு அவங்க இரண்டு பேரும் திரும்பிப் பார்த்தாங்க.

ஒரு பார்வையில்லாத பிச்சைக்காரன். பக்கத்திலே ஒரு மரத்தடியிலே உட்கார்ந்திருந்தான். அவன்தான் அப்படிக் குரல் கொடுத்தது.

அரசன் பார்த்தான். “இவனுக்கோ பார்வை இல்லை. இவனுக்கு எப்படி அது வெள்ளரிப் பழமா இல்லையா -ங்கறது தெரியும்?

நீ போய் பறிச்சிக்கிட்டு வா... இவன் ஏதோ தெரியாமே சொல்றான்! -ன்னான்.

சேவகன் போய் பறிச்சிக்கிட்டு வந்தான். மன்னன் அதை வாங்கி சாப்பிட்டான். வாயிலே வைக்க் முடியலே. ஒரே கசப்பு!

அவனுக்கு ஆச்சரியம். பிச்சைக்காரன்கிட்டே கேட்டான்: “அது எப்படி... இது வெள்ளரிப் பழம் இல்லேங்கறது உனக்குத் தெரிஞ்சிது?” -ன்னான்.

அவன் சொன்னான்: “ஐயா... இது நாலு பேரு வந்து போற இடம்... அது வெள்ளரிப்பழமா இருந்திருந்தா... வர்றவங்க இவ்வளவு காலம் அதை விட்டு வச்சிருக்கமாட்டாங்க! அதனாலேதான் அது வெள்ளரிப்பழமா இருக்க முடியாதுன்னு நினைச்சேன்!” -அப்படின்னான்.

அடுத்தபடியா தண்ணீருக்கு என்ன செய்யலாம்ன்னு யோசித்தான் மன்னன்.

சேவகன் சொன்னான்: அரசே! இங்கேயிருந்து நாலு பக்கமும் சாலை போகுது... நான் இப்படியே... கிழக்கே போற இந்த பாதை வழியா போய் பார்க்கிறேன். அங்கே ஏதாவது நீர் நிலைகள் இருக்கும்... தண்ணீர் எடுத்து வர்றேன்னு புறப்பட்டான்.

இப்பவும் அந்த பார்வையில்லாத பிச்சைக்காரன் சொன்னான்: "ஐயா... கிழக்கே போனீங்கன்னா தண்ணீர் கிடைக்காது... தெற்கே போற பாதையிலே போனீங்கன்னா தண்ணீர் கிடைக்கும்!" -ன்னான்.

அவன் சொன்னது மாதிரியே தெற்கே கொஞ்ச தூரம் போனா... ஒரு பெரிய குளம்!

"இது எப்படித் தெரியும் உனக்கு?" -ன்னு கேட்டான் மன்னன்.

"ஐயா... எனக்குப் பாருங்க உடம்பிலே சட்டை இல்லே... தெற்கே இருந்து வருகிற காற்று குளிர்ச்சியா இருந்தது... அதனாலே அங்கே தண்ணீர் இருக்கும்ன்னு நினைச்சேன்!" - அப்படின்னான்.

அரசன் பார்த்தான். இப்படிப்பட்ட ஒரு ஆள் அரண்மனையிலே எப்பவும் இருந்தால் ரொம்ப உபயோகப்படுவான்னு நினைச்சான். அப்படியே அவனைத் தூக்கி குதிரையிலே வச்சு அரண்மனைக்குக் கொண்டுகிட்டுப் போயிட்டான்.

தினமும் ஒரு பொட்டலம் சாம்பார் சாதம் அவனுக்குக் கொடுக்கும்படியா உத்தரவு போட்டுட்டான் அரசன். அப்படியே நடந்துது.

அந்த அரண்மனைக்கு ஒரு நாள் ஒரு வைர வியாபாரி வந்தான். மன்னன் அவன் கொண்டு வந்த வைரத்தையெல்லாம் வாங்கி இவன்கிட்டே கொடுத்து சோதிக்கச் சொன்னான். இவன் வாங்கி... கையாலேயே சோதிச்சிப் பார்த்து அதையெல்லாம் ரெண்டு பிரிவா பிரிச்சி வச்சுட்டான்.

இடதுபக்கம் இருக்கிறது எல்லாம் வைரம். வலது பக்கம் இருக்கிறது எல்லாம் கண்ணாடிக்கல்.... -அப்படின்னுட்டான்.

“எப்படி கண்டுபிடிச்சே?” -ன்னு கேட்டான் மன்னன்.

“ஒவ்வொரு கல்லையும் எடுத்து கையிலே மூடிவச்சிருந்து பார்த்தேன். நம்ம உடம்பு சூடு கல்லிலே ஏறிச்சின்னா அது வைரம். ஏறலேன்னா அது கண்ணாடி... அப்படித்தான் அதைக் கண்டு பிடிச்சேன்!” -ன்னான்.

அரசனுக்கு ஆச்சரியம்!

“சரி... இன்னையிலேருந்து இவனுக்கு தினமும் ஒரு பொட்டலம் தயிர் சாதமும் கொடுங்க!” -ன்னு உத்தரவு போட்டான். அப்படியே நடந்துது.

ஒருநாள் அந்த மன்னன்... அவன்கிட்டே கேட்டான்: “என்னை எல்லோரும் பிச்சைக்கார ராஜாங்கறாங்களே...!” -ன்னான்.

“அது உண்மைதான். நீ நிஜமாவே அப்படித்தான் இருக்கணும்!” -ன்னான் இவன்.

“எப்படி சொல்றே?” -ன்னான் மன்னன்.

“நீ நிஜமாவே பரம்பரை ராஜ வம்சமா இருந்திருந்தா ஆரம்பத்திலே... அது வெள்ளரிப் பழம் இல்லேன்னு சொன்னப்பவே என் திறமையைப் பாராட்டி... உன் கழுத்திலே உள்ள மணிமாலையை கழட்டி பரிசா கொடுத்திருப்பே...

அதுமட்டுமில்லே... ஒரு பொட்டலம் சாம்பார் சாதம்... ஒரு பொட்டலம் தயிர் சாதம்... இப்படி எந்த ராஜாவும் கொடுக்க மாட்டாங்க!'' - அப்படின்னான்.

அதுக்கப்புறம்தான் அந்த ராஜா உண்மையைச் சொன்னான்: ''ஐயா! நான் பரம்பரை ராஜா இல்லே... உன்னை மாதிரி பிச்சை எடுத்துக்கிட்டிருந்தவன் தான்... இந்த நாட்டு வழக்கப்படி அரண்மனை யானை என் கழுத்திலே மாலையை போட்டுட்டுது... அதனாலே ராஜாவாயிட்டேன்! அவ்வளவுதான்!'' -னான்.

இந்தக் கதையை என்னுடைய நண்பர் ஒருத்தர் (எஸ்.மோட்டூர் கே. சுகுமார்) என்கிட்டே சொன்னார்.

பார்வை இல்லேன்னாலும் நுண்ணறிவு எந்த அளவுக்குப் பார்வையா பயன்படுதுங்கறதை இதுலேயிருந்து புரிஞ்சிக்க முடியுது.

குடும்பத்துலேயும் இந்த நுண்ணறிவு உபயோகப்படும். பெட்டியிலே 10 ரூபாய் பணம் இருந்துது... திடீர்ன்னு 5 ரூபா காணாமே போயிட்டுது. மீதி 5 ரூபாய் மட்டும் இருந்துது!

''நம்ம பையன்தான் எடுத்திருப்பான்!'' -னாங்க அம்மா.

''நிச்சயமா இது நம்ம பையன் வேலையா இருக்காது. அவன் எடுத்திருக்க மாட்டான்!'' -ன்னார் அப்பா.

''எப்படி சொல்றீங்க?'' -ன்னாங்க, அம்மா.

''அவனா இருந்தா பெட்டியிலே மிச்சம் வச்சிருக்கமாட்டான்!'' அப்படின்னார் அப்பா!



# 7. மன நிறைவு

ஒரு பெரிய அரசன் இருந்தான்.

யயாதி-ன்னு பேரு! கேள்விப் பட்டிருப்பீங்க!

அவனுக்கு நூறு வயசு ஆச்சு!

வாழ்க்கையிலே அனுபவிக்க வேண்டியதை எல்லாம் அனுபவிச்சுட்டான்.

ஒரு நாள் மரணம் அவனைத் தேடி வந்தது.

"இதோ பாருப்பா... உனக்கு நேரம் வந்து விட்டது... உன்னை அழைச்சிக்கிட்டுப் போகத்தான் வந்திருக்கேன். புறப்படு!" - ன்னுது.

இவன் பெரிய ராஜாதான்... போர்கள்லே வீரத்தையெல்லாம் காட்டியிருக்கான்.... இருந்தாலும் இப்ப நடுங்க ஆரம்பிச்சான்.

"என்னது... இவ்வளவு சீக்கிரமா வந்துட்டே.... நான் ஒரு நூறு வருஷம் தானே வாழ்ந்து முடிச்சிருக்கேன்.... அதுக்குள்ளே வந்துட்டியே அழைச்சிக்கிட்டுப் போறதுக்கு...!" -ன்னான்.

"என்னப்பா இப்படி சொல்றே... உன் பிள்ளைங்க எல்லாம் தாத்தாவாயிட்டாங்க... இன்னும் உனக்கு என்ன வேண்டியிருக்கு இந்த உலகத்துலே...?" அப்படின்னுது அந்த மரணம்.

அந்த ராஜாவுக்கு நூறு மனைவிகள் - நூறு பிள்ளைகள். அதனாலே ஒரு யோசனை பண்ணினான்... அப்புறம் சொன்னான்:

“இதோ பாரு... நீ வந்துட்டே... வெறுங்கையோட திரும்பிப் போக மாட்டே-ன்னு எனக்குத் தெரியும். என் பிள்ளைங்க நூறு பேர் இருக்காங்க... அவங்கள்லே யாரையாவது கேட்டுப் பார்க்கறேன். எனக்குப் பதிலா நீங்க யாராவது போறீங்களா -ன்னு

யாரையாவது ஒருத்தரை சம்மதிக்க வச்சி அனுப்பறேன்... என்னை இன்னும் ஒரு நூறு வருஷம் வாழ விட்டுடேன்!” அப்படின்னான்.

மரணம் சொல்லிச்சு: “உனக்குப் பதிலா யாராவது ஒருத்தர் என் கூட வந்தா போதும்.... இருந்தாலும் நீ எல்லாருக்கும் அப்பா...

எல்லாரையும் விட நீதான் அதிக நாள் வாழ்ந்திருக்கே... எல்லாத்தையும் அனுபவிச்சு இருக்கே... - அப்படி இருக்கறப்போ... நீயே இப்படி இருந்தா உன் பிள்ளைங்க எப்படி என்கூட வர சம்மதிக்கும்?” அப்படின்னுது.

இருந்தாலும் அந்த ராஜாவுக்கு நம்பிக்கை இருந்துது. பிள்ளைங்களை ஒவ்வொருத்தரா கூப்பிட்டான். கேட்டுப் பார்த்தான். மூத்த பிள்ளைங்க எல்லாம் ஒண்ணுமே பேசலே... பேசாமே நழுவிப் போக ஆரம்பிச்சாங்க.

கடைசி மகன் ஒருத்தன்... அவனுக்கு 16 வயசுதான் ஆவுது. அவன் முன்னாடி வந்தான். “நான் தயார்... என்னை அழைச்சிக்கிட்டுப் போ!” -ன்னான்.

இவனைப் பார்த்ததும் மரணமே இரக்கப்பட ஆரம்பிச்சுது. “என்னப்பா இது, ஒண்ணும் தெரியாதவனா இருக்கியே... உன்னை விட பல

மடங்கு வயசு அதிகமான உன்னுடைய மூத்த சகோதரர்கள் 99 பேர்... அவங்கள்லாம் இன்னும் இந்த உலகத்திலே வாழணும்ன்னு ஆசைப் படறாங்க... நீ இப்படி சொல்றீயே... நல்லா யோசிச்சு சொல்லு!'' அப்படின்னுது.

''நான் நல்லா யோசிச்சுதான் சொல்றேன்... எங்க அப்பா நூறு வருஷம் வாழ்ந்திருக்கார். அப்படியும் திருப்தியடையலே! என் சகோதரர்கள் எல்லாம் என்னை விட அதிக காலம் இந்த உலகத்திலே வாழ்ந்திருக்காங்க... அவங்களுக்கும் திருப்தி ஏற்படலே!

இதைப் பார்க்கறப்போ எனக்கு ஒரு விஷயம் நல்லா புரியுது... அதாவது நான் நூறு வருஷம் வாழ்ந்தாக்கூட எனக்கும் திருப்தி ஏற்படப் போறதில்லே... அப்படி இருக்கறப்போ நான் இப்ப போனா என்ன... இன்னும் 90 வருஷம் கழிச்சுப் போனா என்ன... பேசாம என்னை அழைச்சிக்கிட்டுப் போ!'' அப்படின்னான்.

மரணம் அந்தப் பையனை அழைச்சிக்கிட்டுப் போயிட்டுது.

அதுக்கப்புறம் ஒரு நூறு வருஷம் கழிச்சு அந்த மரணம் மறுபடியும் திரும்பி வந்துது. அந்த ராஜாவைப் பார்த்துது.

இப்பவும் அந்த ராஜா அதே நிலைமையிலேதான் இருந்தான்.... இப்ப அவன் என்ன சொல்றான் தெரியுமா?

இந்த நூறு வருஷம் போனதே தெரியலே... அவ்வளவு வேகமா போயிட்டுது... என்னாலே

நிதானமா அனுபவிக்க முடியலே... என்னோட வயசான பிள்ளைகள் எல்லாம் ஏற்கனவே செத்துப் போயிட்டாங்க. இப்ப எனக்கு இன்னொரு தலைமுறை வந்துட்டுது.

இப்ப எனக்குப் பதிலா இன்னொருத்தனை அனுப்பறேன்... அவனை அழைச்சிக்கிட்டு என்னை இன்னும் ஒரு நூறு வருஷம் வாழவிடேன்!'' அப்படின்னு கேட்டுக்கிட்டான்.

மரணம் சரின்னு சொல்லி வேற ஒருத்தனை அழைச்சிக்கிட்டுப் போயிட்டுது. இப்படியே ஒன்பது தடவை ஆயிட்டுது...

இப்படியே அந்த ராஜா தொள்ளாயிரம் வருஷம் அதிகமா வாழ்ந்தான். பத்தாவது தடவையா மரணம் வந்து நின்னுது; இப்ப அவன் சொன்னான்:

நீ முதல் தடவை வந்தப்போ நான் எப்படி திருப்தி அடையாதவனா இருந்தேனோ அதே நிலைமையிலேதான் இப்பவும் இருக்கிறேன்.

இப்பவும் எனக்கு உன் கூட வர விருப்பம் இல்லை. இருந்தாலும் வர்றேன்... ஏன்னா திருப்பி திருப்பித் எத்தனை தடவைதான் உன்கிட்டே சலுகை கேக்கறது? கேட்டதே ரொம்ப அதிகம்.

இருந்தாலும் ஒரு விஷயத்தை இப்ப தெளிவா புரிஞ்சிக்கிட்டேன். ஒரு ஆயிரம் வருஷத்துலே என்னாலே திருப்தியடைய முடியலேன்னா பத்தாயிரம் வருஷம் இந்த உலகத்திலே வாழ்ந்தா கூட என்னால திருப்தியடைய முடியாது! புறப்படு போகலாம்!'' -ன்னான்.

இதுதான் சார்... நாம இப்ப வாழ்ந்துகிட்டிருக்கிற உலக வாழ்க்கை! இதை நாம புரிஞ்சிக்கணும்ங்கறதுக்காகத்தான் ஒரு பெரியவர் (ரஜனீஷ்) இந்தக் கதையை நமக்கு எடுத்துச் சொல்லியிருக்கார்.

இந்தக் காலத்து குடும்பஸ்தர் ஒருத்தர்...

அவரைத் தேடிக்கிட்டு ஒருநாள் 'மரணம்' வந்துது. வந்து அவர் முன்னாடி நின்னுது -

"நான்தான் மரணம் வந்திருக்கேன். உன்னை அழைச்சிக்கிட்டுப் போக...!" -அப்படின்னுது.

இவருக்குக் கோபம் வந்துட்டுது... உடனே பளார்ன்னு அது கன்னத்துலே அறைஞ்சுட்டார்.

மரணம் கன்னத்தைத் தடவிக்கிட்டே "ஏன் என்னை அறைஞ்சுட்டே!" -ன்னுது.

"பின்னே என்ன... எவ்வளவு காலமா உனக்காகக் காத்துக்கிட்டு இருக்கிறது? ஏன் இவ்வளவு லேட்!" அப்படின்னார் அந்த ஆளு!



# 8. புகழ்ச்சி - ஒரு மருந்து!

ஒரு பள்ளிக் கூடத்துக் குழந்தைகள்கிட்டே விஞ்ஞானப் பூர்வமா ஒரு சோதனை நடத்திப் பார்த்திருக்காங்க!

அதாவது அவங்களுக்கு ஒரு பரீட்சை வைத்தாங்க. பரீட்சை வைப்பதற்கு முன்னாடி அவங்களைப் பார்த்து...

நீங்கள்லாம் ரொம்பப் புத்திசாலிகள்... ரொம்பக் கெட்டிக்கார பிள்ளைங்க... உங்ககிட்டே நல்ல திறமை இருக்கு...

இந்தப் பரீட்சை உங்களுக்கு ரொம்பச் சுலபமா இருக்கும்!'' அப்படின்னு சொல்லிப் பரீட்சை எழுத அனுப்பினாங்க.

இந்தப் புகழ் உரையைக் கேட்டுட்டு அவங்க பரீட்சை எழுதப் போனாங்க... எழுதினாங்க!

சராசரிக்கும் மேலா இருந்துது அவங்க எழுதினது! எல்லாருக்கும் நல்ல மார்க்!

அதே பள்ளிக் குழந்தைகள்கிட்டே இன்னொரு பரீட்சை வச்சாங்க. அதுவும் முதல்லே வச்சது மாதிரியே ரொம்பச் சுலபமான பரீட்சைதான்! இருந்தாலும் பரீட்சை எழுதப் போற பிள்ளைங்களைப் பார்த்து...

'இந்தப் பரீட்சை ரொம்பக் கஷ்டமா இருக்கும்... இதை திறமையா எழுதற அளவுக்கு உங்களுக்குப்

புத்திசாலித்தனம் போதாது!' அப்படின்னு ஆரம்பிச்சி அவங்க குறைகளையே சுட்டிக் காட்டி பேசிவிட்டு அதுக்கப்புறம் பரீட்சை எழுத அனுப்பி வச்சாங்களாம். இவங்க பரீட்சையை சரியாவே எழுதலையாம்... மார்க்கும் ரொம்பக் குறைந்துப் போச்சாம்!

இந்த வித்தியாசத்துக்கு என்ன காரணம்?

புகழ்ச்சிதான். அவங்களை புகழ்ச்சியா பேசி அனுப்பினாங்க. அதிக மார்க்!

இவங்களை... குறைகளை சுட்டிக் காட்டி இகழ்ச்சியா பேசி அனுப்பினாங்க ... குறைச்சல் மார்க்!

'புகழ்ச்சி-ங்கறது ஒரு அற்புதமான மருந்து'- அப்படிங்கறாங்க நிபுணர்கள்.

'இந்த புகழ்ச்சி மருந்தை நாம சுலபமா தயார் பண்ணலாம்... தாராளமா மத்தவங்களுக்குக் கொடுக்கலாம்- ங்கறாங்க அவங்க!' இதுக்குக் காசு பணம் செலவில்லே ... ஆனா பலன் அதிகம்!

பள்ளிக் கூடத்துக் குழந்தைகள் கிட்டே இந்த மருந்தைக் கொடுங்க ... அவங்க நல்லா படிப்பாங்க... நிறைய மார்க் வாங்குவாங்க!

வியாபாரத்திலே உங்க கூட்டாளிக்கு இந்த மருந்தை நீங்க கொடுங்க... நல்லா ஒத்துழைப்பாங்க... பணம் சம்பாதிக்க உங்களுக்கு உறுதுணையா இருப்பாங்க.

உங்க குடும்பத்திலே உள்ளவங்களுக்கும் சொந்தக்காரங்களுக்கும் இந்த மருந்தைக் கொடுங்க... சந்தோஷப்படுவாங்க... பாசமா இருப்பாங்க...

இந்த மருந்து உங்க கைவசம் இருந்தா நீங்க எங்கே போனாலும் மகிழ்ச்சியைப் பரப்ப முடியும்...

இந்த மருந்தை நீங்க இன்னொருத்தர்கிட்டே கொடுக்கும் போது... உங்களுக்கும் அது போதுமான அளவுக்குக் கிடைக்குது. உங்களை சந்தோஷப் படுத்துது... புகழும்-பணமும் சேர அது உதவுது.

இப்படியெல்லாம் சொல்றார் ஓர் . உளவியல் நிபுணர் (எம்.ஆர்.காப்மேயர்) புகழ்ச்சி -ங்கற மருந்துக்கு அவ்வளவு சக்தி இருக்குது.

ஆல்ஃபிரெட் ஆட்லர்-ன்னு ஒரு மனவியல் நிபுணர். அவர் ஒரு டாக்டர். அவர் என்ன பண்ணுவாராம்... கவலை, பயம், கலக்கம்... இதுகளுக்கெல்லாம் இரையான தன்னுடைய நோயாளிகள்கிட்டே போவாராம்... அவங்களைப் பார்த்து சொல்வாராம்.

“நீங்கள்லாம் என்ன செய்யணும்ன்னா... யாரையாவது திருப்தி செய்யணும்... அல்லது யாருக்காவது மன மகிழ்ச்சியை உண்டாக்கணும்... அப்படின்னு தொடர்ந்து நினைச்சுக்கிட்டு இருங்க...

அப்படி இருந்தா 14 நாள்லே உங்க குறைபாடுகள்லாம் நீங்கிவிடும்!”-ன்னு சொல்வாராம். அதே மாதிரியும் ஆயிடுமாம்.

அடுத்தவங்களைத் திருப்திபடுத்தறதுக்கு என்ன வழி? பொதுவா அடுத்தவங்க நம்மகிட்டே இருந்து என்னத்தை எதிர்பார்க்கிறாங்க...?

நமது புகழ்ச்சியைத்தான் எதிர்பார்க்கிறாங்க... பாராட்டைத்தான் எதிர்பார்க்கிறாங்க.

வில்லியம் ஜேம்ஸ்-அமெரிக்க தத்துவஞானி-மனோதத்துவ நிபுணர். அவர் என்ன சொல்றார் தெரியுமா?

“மனித இயல்பின் ஆழமான தத்துவம் என்னவென்றால் பாராட்டைப் பெறுவதற்காக ஏங்குவதுதான்!”- அப்படிங்கறார்.

இந்த ரகசியத்தைப் நாம் புரிஞ்சிக்கிட்டா போதும். வாழ்க்கையிலே வெற்றியடையறது சுலபம்.

இந்த விவரங்களை யெல்லாம் எனக்கு வேண்டியபட்ட ஒருத்தர்கிட்டே சொல்லிக் கிட்டிருந்தேன்.

உடனே அவர்... “சார்...நீங்க சொல்ற பிரகாரம் நடந்துக்கறதுக்கு இப்பவே ஆரம்பிச்சுடறேன்...!”-னு சொல்லிட்டு ஒரு பேப்பரையும் பேனாவையும் எடுத்து வச்சிக்கிட்டு எழுத ஆரம்பிச்சுட்டார்.

“என்ன எழுதறீங்க?”ன்னேன்.

“பாராட்டுக் கடிதம் எழுதறேன்...

போன வாரம் இந்தப் பத்திரிகையிலே வந்த சிறுகதையை பாராட்டி எழுதறேன்... கதாசிரியரைப் புகழ்ந்து நாலு வார்த்தை எழுதப் போறேன்!” -னார்.

“கதாசிரியர் யாரு?” -ன்னு கேட்டேன்.

அவர் மெதுவா கிட்டே வந்து என் காதோட காதா...

“நான்தான் சார் அது!” அப்படின்னார்.



# 9. இயேசுவின் இருப்பிடம்!

அது ஒரு சின்ன கிராமம்.

அங்கே ஒரு பள்ளிக்கூடம். அதிலே நிறைய பிள்ளைகள் படித்துக் கொண்டிருக்காங்க.

ஒவ்வொரு வருஷமும் கிறிஸ்துமஸ் விடுமுறை வரும் இல்லே. அதுக்கு முன்னாடி கிறிஸ்து பிறப்பு விழாவை கொண்டாடுறது வழக்கம்.

அது எப்படின்னா... பிள்ளைங்கள்லாம் ஒவ்வொரு வேஷம் போட்டுக்கிட்டு... நாடகம் மாதிரி நடிச்சிக் காட்டறது வழக்கம்.

மாதா, சூசையப்பர், ஆடுமேய்ப்பவர்கள், மூன்று ராஜாக்கள், காபிரியேல் தூதர் இப்படி எல்லாரும் அதிலே வருவாங்க.

காபிரியேல் தூதர் வானத்திலே தோன்றுவார்...

உங்களுக்காக இறைவன் மனுவாக அவதரித்துள்ளார் அப்படின்னு சொல்லுவார்.

வானத்திலே வால் நட்சத்திரம் தோன்றும். மூன்று ராஜாக்கள் பின் தொடர்ந்து வருவாங்க.

இந்த நிகழ்ச்சிகளையெல்லாம் மாணவர்கள் மேடையிலே நடிச்சிக் காட்டுவாங்க.

இப்படி ஒவ்வொரு வருஷமும் கிறிஸ்து பிறப்பு விழாவைக் கொண்டாடுறது வழக்கம்.

அதுமாதிரி கொண்டாடுறதுக்கு வேண்டிய முன்னேற்பாடுகள் எல்லாம் நடந்துக்கிட்டிருக்கு!

யார் . யாருக்கு என்னென்ன வேஷம் அப்படிங்கறதை எல்லாம் ஆசிரியர்கள் முன்கூட்டியே முடிவு பண்ணினாங்க.

ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு 'ரோல்' கொடுத்தாச்சு! அந்த வகுப்புலேயே மக்குப் பையன் ஒருத்தன் இருந்தான். விளையாட்டுலே கூட மற்ற பையன்கள் அவனை சேர்த்துக்கறதில்லே. அப்படிப்பட்ட பையன்.

அவனுக்கும் ஒரு வேஷம் கொடுத்தாகணும்... என்ன வேஷம் கொடுக்கறது அவனுக்கு?

எல்லோரும் யோசனை பண்ணினாங்க... கடைசியா ஆசிரியர் சொன்னார்:

"இதோ பார்... நீ என்ன பண்றே... சூசையப்பரும் மாதாவும் ஒவ்வொரு விடுதியா இடம் கேட்டுக்கிட்டு உன்கிட்டே வர்றாங்க...

நீ விடுதிக்குள்ளேயிருந்து வெளியே வந்து "இங்கே இடமில்லை!"ன்னு சொல்லணும். அவ்வளவுதான் உன் வேலை!" அப்படின்னார்.

"சரி"ன்னு தலையாட்டினான் அந்தப் பையன்.

தினமும் தவறாமல் ஒத்திகை நடந்துது... எல்லாம் முறையா நடந்துது.

விழா நாள் வந்து சேர்ந்தது. கூட்டத்திலே இருக்கிற எல்லாரும் மேடையை ஆர்வமாய் பார்த்துக்கிட்டிருக்காங்க...

நிறைமாத கர்ப்பிணியான தேவமாதாவை அழைச்சிக்கிட்டு வந்து சூசையப்பர் ஒவ்வொரு விடுதியிலேயும் இடம் கேட்கிறார். நம்ம மக்குப்

பையன்கிட்டேயும் வர்றார். இடம் கேட்கிறார். இவன் பதில் சொல்லணும் இல்லே... 'இடம் இல்லே'-ன்னு! சொல்லலே... பேசாமே - அவங்களைப் பார்த்துக்கிட்டே நிக்கிறான்.

மேடைக்குப் பின்னாடி நின்னுக்கிட்டிருந்த ஆசிரியர்... இவன் பேச வேண்டிய வசனத்தை எடுத்துக் கொடுக்கிறார்...

இங்கே இடமில்லை... சொல்லு... இங்கே இடமில்லை... அப்படின்னு மெதுவா சொல்றார்.

இவன் அப்பவும் ஒண்ணும் சொல்லாமே நிக்கிறான். கூட்டத்திலே சலசலப்பு. எல்லாரும் சிரிக்கிறாங்க...

மாதாவுக்கும் சூசையப்பருக்கும் என்ன செய்யறதுன்னு புரியலே... தவிக்கிறாங்க.

கடைசியா பையன் வாயைத் திறந்தான்.

"ஐயா...! இங்கே இடமில்லை. ஆனா எங்க வீட்டுக்கு வாங்க... அங்கே நிறைய இடம் இருக்கு...!" அப்படின்னான் கண்ணைத் துடைச்சிக்கிட்டே!

பார்த்தா... அவன் கண்கள் கலங்கியிருக்கு. நிஜமாவே அழுதுட்டான்! அதனாலேதான் அவனுக்கு வார்த்தை வரலே! கூட்டத்திலே சிரிச்சவங்கள்லாம் அப்படியே மௌனமாயிட்டாங்க!

தன்னையே மனுவாகத் தந்த இயேசு கிறிஸ்துவுக்கு உண்மையான பிறப்பிடம் இது மாதிரி கள்ளமில்லாத உள்ளங்கள்தான்!

இது உண்மையா நடந்த ஒரு நிகழ்ச்சி... அப்படின்னு என்கிட்டே ஒரு சகோதரி சொன்னாங்க!

அவங்களே ஒரு வேடிக்கை கதையையும் சொன்னாங்க... அது என்னன்னா...

ஒரு பத்து பசங்க... ஒரு... ஃபாதர்கிட்டே பாவமன்னிப்புக்காக வந்தாங்களாம்! அவர் ஒவ்வொருத்தரா கூப்பிட்டு பாவ சங்கீர்த்தனம் (Confession) கேட்டுக் கொண்டிருக்கிறார்.

முதல்லே ஒரு பையன் வந்தான். "ஃபாதர்... நான் ஒரு மட்டையைத் தூக்கி கிணற்றிலே போட்டுட்டேன்... என் பாவத்தை மன்னியும்!" அப்படின்னான்.

அடுத்தவன் வந்தான்... "நானும் அந்த மட்டையைத் தூக்கி ஒருதரம் கிணற்றிலே போட்டேன்! என்னை மன்னியும்!" -ன்னான்.

அடுத்தவன் வந்தான். அவனும் இதையே சொன்னான். 9 பேரும் வரிசையா வந்து இதே விஷயத்தைச் சொல்லி மன்னிப்பு கேட்டாங்க.

கடைசியா பத்தாவது பையன் ஃபாதர் முன்னாடி வந்து நின்னான். ஃபாதர் பார்த்தார். "ஏம்பா... நீயும் மட்டையைத் தூக்கிக் கிணற்றிலே போட்டியா?" -னார்.

"இல்லே ஃபாதர்... மட்டையே நான்தான். என்னைத்தான் அந்த 9 பேரும் கிணற்றிலே தூக்கிப் போட்டாங்க!" அப்படின்னான்!



# 10. மூன்று நண்பர்கள்!

ஒரு ஊர்லே ஒரு ஆள் இருந்தான்.

அவன் பேர்லே ஏதோ ஒரு குற்றச்சாட்டு.

அதனாலே அரண்மனையிலிருந்து அழைப்பு வந்துது.

"உன்னை விசாரிக்க வேண்டியிருக்கு... அதனாலே அரண்மனை விசாரணை மண்டபத்துக்கு வந்து சேர்!" அப்படிங்கறது அரண்மனை ஆணை!

"நம்ம பேர்லே எந்தத் தப்பும் இல்லையே... நாம எந்தத் தவறும் செய்யலையே!"ன்னு நினைச்சான். இருந்தாலும் அரசாங்க உத்தரவு. அதை அலட்சியம் செய்ய முடியுமா? போய்தான் தீரணும்.

தனியா போறதுக்கு அவனுக்குத் தயக்கமா இருந்துது.

தன் கூட யாராவது வந்து தனக்காகக் கொஞ்சம் வாதாடினா தேவலைன்னு நினைச்சான்.

வக்கீல் மாதிரி ஒருத்தர் தேவைப்பட்டார்.

யாரை அழைச்சிக்கிட்டுப் போகலாம்..?

யோசனை பண்ணினான்.

அவனுக்கு மூன்று நண்பர்கள் இருந்தாங்க. அதனாலே அவங்கள்லே ஒருத்தரை அழைச்சிக்கிட்டுப் போகலாம்ன்னு முடிவு பண்ணிக்கிட்டு... ரொம்பவும் நெருக்கமான ஒரு நண்பன் வீட்டுக்குப் போனான்.

“என்னை விசாரிக்கறதுக்காக அரண்மனைக்கு வரச் சொல்லி ஆணை வந்திருக்கு. நீ கொஞ்சம் எனக்காக அங்கே வந்து வாதாடணும்!” -ன்னு கேட்டுக்கிட்டான்.

“என்னாலே வர முடியாது!” -ன்னு சொல்லி புட்டான் அவன்.

“ரொம்பவும் நெருக்கமா நம்ம கிட்டே பழகிக்கிட்டிருந்த இவனே இப்படி சொல்லி விட்டானே..!” -ன்னு நினைச்சு கொஞ்சம் வருத்தப்பட்டான்.

சரி பரவாயில்லே... இன்னொரு நண்பன்கிட்டே போவோம்ன்னு அவன் கிட்டே போனான். விவரத்தைச் சொன்னான்.

அவன் என்ன சொன்னான் தெரியுமா?

“வர முடியாது” -ன்னு சொல்லலே. “வர்றேன்... ஆனா... அரண்மனை வாசல் வரைக்கும் தான் வருவேன். அங்கேயே நின்னுக்குவேன். அதுக்கு மேலே வரமாட்டேன்” -னுட்டான்.

“அப்படி அதுவரைக்கும் வந்து என்ன பிரயோஜனம்? கடைசி வரைக்கும் நம்ம கூட வந்து நமக்காக வாதாடணுமே... அதுதானே முக்கியம்!” -ன்னு நினைச்சான்.

சரின்னு சொல்லி மூணாவது நண்பன்கிட்டே போனான். அதிக நெருக்கம் இல்லே... இருந்தாலும் போனான். விவரத்தைச் சொன்னான்.

அவன் என்ன சொன்னான் தெரியுமா?

ஒண்ணுமே சொல்லலை... உடனே புறப்பட்டுட் டான். ‘வா... போகலாம்!’- ன்னு.

கூடவே வந்தான். கடைசி வரைக்கும் வந்தான். ராஜா முன்னாடி நின்னான். இவனுக்காக அவன் வாதாடினான். பரிந்து பேசினான். விடுதலை வாங்கிக் கொடுத்தான்.

இது ஒரு யூதக் கதை. நண்பர் ஒருத்தர் என்கிட்டே சொன்னார். இதிலே உள்ள உள் கருத்து என்னன்னா...

ஒவ்வொரு மனிதனுக்கும் மூன்று நண்பர்கள் உண்டு.

முதல் நண்பனுக்கு என்ன பேர் தெரியுமா? - பணம்!

இரண்டாவது நண்பன் யார் தெரியுமா? - சொந்தம்!

மூணாவது நண்பன் - அவன் செய்த நற்செயல்கள்!

கடைசியிலே - பணம் கூட வராது.

சொந்தம் - கல்லறை வரைக்கும் வரும்.

நற்செயல்கள்தான் கூடவே வரும்.

அதாவது நமக்குப் பின்னாலும் நம்மைப் பற்றி சொல்லிக்கிட்டே இருக்கும்!

மனிதன் என்பவன் நல்ல செயல்களைச் செய்யணும்ங்கற கருத்தை வலியுறுத்தறதுக்காக சொல்லப்பட்ட கதை இது.

நம்ம ஆள் ஒருத்தன் ஒரு சிக்கலில் மாட்டிக்கிட்டான்.

ஒரு சைக்கிளைத் திருடிட்டதாக அவன் பேர்ல வழக்கு!

ஒரு நண்பனைத் தேடிப் போனான்.

'எனக்கு சாதகமா சாட்சி சொல்ல வரணும்'ன்னு கூப்பிட்டான்.

அவன் மறுத்துட்டான்.

"இதோ பாருப்பா... உனக்கு சாதகமா சாட்சி சொல்ல முடியாத நிலையிலே நான் இருக்கேன்.

அதுக்கு மூணு காரணங்கள்...

முதல் காரணம்: இதுவரைக்கும் சாட்சி சொல்லி எனக்குப் பழக்கம் இல்லே!

இரண்டாவது காரணம்: பொய் சாட்சி சொல்றது தப்புன்னு பெரியவங்கள்லாம் சொல்லியிருக்காங்க!

மூணாவது காரணம்: நீ திருடிக்கிட்டு போனாயே சைக்கிள்... அந்த சைக்கிளே என்னோடதுதான்!" அப்படின்னான்.



# 11. புதையலைப் புரிந்து கொள்!

ஓர் இளைஞன்.

ஒரு சாலை ஓரமா அழுதுக்கிட்டு உட்கார்ந்து இருந்தான்.

அந்தப் பக்கமா பிச்சை எடுத்துச் சாப்பிடுற ஒருத்தன் வந்தான்.

“ஏன் அழுதுக்கிட்டு உட்கார்ந்திருக்கே?” -ன்னு கேட்டான்.

“என்கிட்டே ஒண்ணுமே இல்லே. இந்த உலகத்துலே நான் இருந்து என்ன பிரயோஜனம்...? அதுதான் அழறேன்!” -ன்னான் அவன்.

“உன்கிட்டே மறைஞ்சிருக்கிற புதையல் என் கண்ணுக்குத் தெரியுது... அதை விற்கறதுக்கு நீ தயாரா?” ன்னு கேட்டான் இவன்.

இளைஞனுக்கு ஆச்சரியம்.

“என்கிட்டே ஒரு காசு கூட இல்லையே... அப்படி இருக்கறப்போ புதையல் எங்கேயிருந்து வந்துது?” -ன்னான்.

பிச்சைக்காரன் சிரிச்சான்.

“இப்படித்தான் எல்லாரும் சொல்றாங்க... நீ என் கூட வா... நம்ம ஊர் அரசன்கிட்டே போவோம்... உன் கிட்டே இருக்கிற புதையலை அவன் நல்ல விலைக்கு எடுத்துக்குவான்!” -னான்.

“அது எப்படி உனக்குத் தெரியும்?” -ன்னான்.

இதுக்கு முன்னாடியும் இதுமாதிரி பல பேரை அரசன் கிட்டே அழைச்சிக்கிட்டுப் போயிருக்கேன்... அதனாலேதான் உன்னையும் கூப்பிடறேன்!'' -ன்னான்.

இவனுக்கு ஒண்ணும் புரியலே... நம்ம கிட்டே என்ன இருக்கு? இவனே பிச்சை எடுத்து சாப்பிடறான்... இவன் நம்மளை ராஜா கிட்டே அழைச்சிக்கிட்டுப் போறேங்கறான்... யோசிச்சான்!

''என்ன யோசிக்கிறே... உனக்குப் பணம் வேணும்ன்னா என்னோட வா'' -ன்னான் அவன்.

சரி.. இங்கே உட்கார்ந்துக்கிட்டிருக்கறதை விட அங்கேயாவது போய்ப் பார்ப்போம்ன்னு புறப்பட்டான்!

அந்த இளைஞனும், பிச்சைக்காரனும், அரண்மனையை நோக்கி நடந்து போய்க் கிட்டிருக்காங்க...

வழியிலே அந்தப் பிச்சைக்காரன் சொன்னான்:

''இதோ பாரு.. முன்னாடியே சில விஷயங்களை நாம் பேசிக்க வேண்டியிருக்கு... சரியா... தெளிவா... முடிவு — எடுத்துக்கிட்டு அதுக்கப்புறம் ராஜாகிட்டே போகணும்.

ஏன்னா அங்கே போய் அது முடியாது... இது முடியாதுன்னு சண்டை போட்டுக்கிட்டிருக்கக் கூடாது...

ராஜாவுக்கு விலையைப் பற்றி கவலையே இல்லை... எவ்வளவு சொன்னாலும் நமக்கு பணம் கிடைக்கும்... ஆனா அதுக்கப்புறம் நான் இதை விற்கறதுக்குத் தயாரா இல்லைன்னு சொல்லக் கூடாது.

அதனால புதையலை விற்கறதா இல்லையாங் கறதை இங்கேயே தெளிவா முடிவு செஞ்சுக்கணும்...!''

இளைஞனுக்கு ஒண்ணுமே புரியலே... என்னடேயா... புதையலா... ன்னு குழம்பினான்.

இப்ப அந்தப் பிச்சைக்காரன் சொன்னான்:

''ஆமாம்! இப்ப உதாரணத்துக்கு உன்னுடைய கண்களை எடுத்துக்கோ... அதுக்கு நீ என்ன விலை கேட்டுடப் போறே...''

நான் அதுக்கு அரசன்கிட்டேயிருந்து 50,000 ரூபாய் வாங்கித் தர முடியும்.

இதயத்தைக் கொடுக்கறீயா... இருபது லட்சம் வாங்கித் தர்றேன்...

மூளையைக் கொடுக்கறீயா... முப்பது லட்சம் வாங்கித் தர்றேன்..!'' -ன்னான். இளைஞனுக்குக் கோபம் வந்துட்டுது.

''என்ன உளர்றே? உனக்கு என்ன பைத்தியமா? கண்ணையும் - இருதயத்தையும் - மூளையையுமா விற்பாங்க?

என்ன விலை கொடுத்தாலும் அதையெல்லாம் நான் விற்க மாட்டேன் நான் மட்டுமில்லை. யாருமே விற்க மாட்டாங்க!'' -ன்னான்.

இப்ப அந்தப் பிச்சைக்காரன் வாய்விட்டு சிரிச்சான்.

''இப்ப பைத்தியமானது நானா? நீயா? இலட்சக்கணக்கான... கோடிக்கணக்கான ரூபாய் பெறுமானமுள்ள பொருள்களை உன்கிட்டேயே வச்சிக்கிட்டு விற்க முடியாது -ன்னு சொல்ற நீ...

நான் ஏழை.. என்கிட்டே ஒண்ணுமே இல்லைன்னு மரத்தடியிலே உட்கார்ந்து அழுதுகிட்டிருக்கியே!'' - ன்னான்.

இன்றைக்குப் பலபேர் தன்கிட்டே புதைஞ்சிருக்கிற ஆற்றலைப் புரிஞ்சிக்க முடியாமே அவதிப்பட்டுக்கிட்டு இருக்காங்க.. புதையலை நாமதான் தோண்டி எடுக்கணும்!

இதைப் புரிய வைக்கிறதுக்காக ஒரு பெரியவர் (ஓஷோ) சொன்ன கதை இது.

நம்ம ஆளுங்கள்லாம் புதையலை உள்ளே தேடறது இல்லே. வெளியே எங்கேயாவது கிடைக்குமான்னுதான் தேடறது வழக்கம்.

ரயில்வே ஸ்டேஷன் பக்கம் வெளியிலே ஒரு டாக்சி நின்னுக்கிட்டிருந்துது.

அந்தப் பக்கமா வந்த ஒருத்தர் டாக்சி டிரைவரைப் பார்த்து, "ஐயா... உங்க வண்டியின் பின் சீட்டிலே ஒரு மணிப் பர்ஸ் கிடக்குது... யாரோ மறந்து விட்டுவிட்டுப் போயிருக்காங்க...!'' -ன்னார்.

"இல்லை... இல்லை... அது காலி பர்ஸ் நான்தான் அதை அங்கே போட்டு வச்சிருக்கேன்!'' ன்னார் டிரைவர்.

"ஏன்?'' -ன்னு கேட்டார் இவர்.

"அதைப் பார்க்கிற யாராவது... அதை எடுத்துக்கலாம்ன்னு நினைச்சி சவாரிக்கு வருவாங்க... அதுக்காகத்தான்.. அது!'' அப்படின்னார்.



# 12. உள்ளே இருக்கிற உண்மை!

ஒரு காடு. அங்கே ஒரு குரங்கும் கழுதையும் நண்பர்கள்.

இது ரெண்டும் ஒரு நாள் பேசிக்கிட்டிருந்துது.

அப்போ அந்த கழுதை சொல்லிச்சு..

அதோ தெரியுது பாரு ஒரு புதர்... அங்கே ஒரு சிங்கம் இருக்கு... அந்தப் பக்கமா போறப்போ வர்றப்போ எல்லாம் அது என்கிட்டே வம்பு வளர்க்குது... என்மேலே பாயுது... என்னைத் தாக்குது...

ஏன் அப்படி பண்ணுதுன்னு தெரியலே...!'' - அப்படின்னு ரொம்பக் கவலையா சொல்லிச்சு அந்தக் கழுதை.

இதைக் கேட்டதும் அந்தக் குரங்கு—

''இனிமே கவலைப்படாதே...! இந்தத் தடவை நான் உன்னைக் காப்பாத்தறேன்!'' - னுது.

அதுக்கப்புறம் ஒருநாள் அந்தக் குரங்கும் கழுதையும் அந்தப் புதர் பக்கமா போய்க்கிட்டிருந்தது.

எதிர்பார்த்தது மாதிரியே அந்த சிங்கம் எதிரே வந்துது. கழுதையைப் பார்த்துது... அது மேலே பாய்ஞ்சி அதைத் தாக்க ஆரம்பிச்சுது.

இதைப் பார்த்த உடனே அந்தக் குரங்கு என்ன பண்ணிச்சு தெரியுமா?

கிடுகிடு-ன்னு ஒரு மரத்து மேலே ஏறி உட்கார்ந்துகிட்டுது. அப்படி உட்கார்ந்துக்கிட்டு அந்தக் கழுதையும் சிங்கமும் சண்டை போடறதை வேடிக்கை பார்க்குது.

கொஞ்சம் நேரம் கழித்து அடிபட்ட காயத்தோட அந்தக் கழுதை மெதுவா நடந்து வந்துது. குரங்கும் மரத்தை விட்டுக் கீழே இறங்கி வந்துது.

கழுதை கேட்டுது... "என்னைக் காப்பாத்துவேன் -ன்னு சொன்னியே... ஆனா நீ பாட்டுக்கு மரத்து மேலே ஏறி உட்கார்ந்துகிட்டியே.." அப்படின்னுது!.

இதுக்கு அந்தக் குரங்கு சொல்லிச்சு...

"நான் மரத்து மேலேயிருந்து நீங்க ரெண்டு பேரும் சண்டை போட்டதைப் பார்த்துக்கிட்டுதான் இருந்தேன்.

உன்னோட சத்தம்தான் அதிகமா இருந்துது... அது நீ சிரிக்கிற மாதிரி எனக்குக் கேட்டுது.. அதனாலே நீ ஜெயிச்சிக்கிட்டு இருக்கேன்னு நான் நினைச்சேன்!" அப்படின்னுதாம் அந்தக் குரங்கு!

இன்றைக்கு உள்ள மனுஷன் இப்படித்தான் இருக்கான். எவன் ஜெயிச்சிக்கிட்டிருக்கான்... அல்லது எவன் தோற்றுக் கொண்டிருக்கான்... ங்ககிறதை அவன் முகத்தைப் பார்த்தும் கண்டுபிடிக்க முடியலே... அவன் பேசுகிற பேச்சை வைத்தும் கண்டுபிடிக்க முடியலே!

தோக்கறவன் கூட சிரிக்கிற மாதிரி முகத்தை வச்சிக்கிறான். அவன் கிட்டே ஏகப்பட்ட முரண்பாடுகள்.

கடவுள் இந்த உலகத்தைப் படைச்சுட்டு இங்கேயே கொஞ்ச நாள் தங்கியிருந்தாராம். அப்பத்தான் அது எவ்வளவு இடைஞ்சல் -ங்கறது அவருக்குப் புரிஞ்சிதாம்.

தினமும் மனிதர்கள் தேடி வந்து ஏதாவது புகார் சொல்லிக் கொண்டே இருந்தாங்களாம்... எனக்கு அது வேணும் இது வேணும்னு கேட்டுக்கிட்டே இருந்தாங்களாம்.

சில பேர் வந்து... “நாங்க விவசாயம் பண்றோம்... தண்ணி இல்லாமே பயிர் காயுது... எங்களுக்கு மழை வேணும்!” -ன்னாங்க.

அவங்க போனதும் வேறே சில பேர் வந்தாங்க...

“நாங்க மண் பானை செய்யறவங்க... நிறைய பானை செஞ்சு வச்சிருக்கிறோம்... மழை பெய்ஞ்சா... எல்லாம் கரைஞ்சு வீணா போய்டும்... அதனாலே இன்னைக்கு மழை இல்லாமே பார்த்துக்க!” -ன்னாங்க.

கடவுளுக்கு ஏகப்பட்ட குழப்பம் - சிக்கல்...

கிட்டத்தட்ட பைத்தியம் பிடிக்கிற அளவுக்கு ஆயிட்டுது.

எல்லாருடைய ஆசைகளையும் அவராலே நிறைவேற்ற முடியலே... ஒண்ணுக்கு ஒண்ணு முரணா இருந்துது.

ஒருநாள் தன்னுடைய அமைச்சரவையைக் கூட்டி ஆலோசனை கேட்டார், ‘என்ன செய்யலாம்?’ -ன்னு.

"இதென்ன பிரமாதம்? பேசாமே இமய மலைக்குப் போய் உட்கார்ந்துக்குங்க யாரும் தொந்தரவு செய்ய மாட்டாங்க!" -ன்னாங்க.

அங்கேயும் மனிதர்கள் வர ஆரம்பிச்சுடுவாங்க - ன்னார் கடவுள்.

"சரி.. அப்படின்னா சந்திரன்லே போய் இருந்துக்கலாம்!" -ன்னாங்க.

"அங்கேயும் மனுஷன் வரப் போறான்!" ன்னார் கடவுள்.

"தூரமா உள்ள நட்சத்திர மண்டலத்துக்குப் போயிடலாம்!" -ன்னாங்க.

"இதெல்லாம் நிரந்தரத் தீர்வு ஆகாது... நிரந்தரமா இந்த மனிதனுடைய தொல்லையிலிருந்து நான் விடுபடணும்... அதுக்கு வழி சொல்லுங்க!" ன்னார் கடவுள்.

ஒரு வயசான ஆள் வந்தான்... கடவுள் காதோடு காதா ஒரு வழியைச் சொன்னான். கடவுள் முகம் மலர்ந்தது... அதுதான் சரி... அப்படியே செய்யலாம் - ன்னார்.

அந்த ஆள் சொன்ன ரகசியம் என்ன தெரியுமா?

"மனிதனாலே அடைய முடியாத ஒரு இடம் இருக்குது! அது வேறே எங்கேயும் இல்லை. அவனுக்குள்ளேயே இருக்கு! அங்கே போய் மறைஞ்சிக்குங்க... மனுஷனாலே உங்களுக்கு இடைஞ்சல் இருக்காது!" அப்படின்னார்.

மனிதன் நினைக்காத இடம் அதுதான்...

உள்ளுக்குள்ளே இருக்கிற உண்மையைப் புரிஞ்சிக்காமே வெளியிலே எங்கேயோ அது இருக்கிறதா நினைச்சி விரட்டிக்கிட்டு அலையறான் மனுஷன்!

ஒரு அம்மா... அப்பா கிட்டே சொல்றாங்க...

"இதோ பாருங்க... நம்ம பையன் எங்கே பணம் வைத்தாலும் எடுத்துடறான்... என்ன பண்றது?" -ன்னாங்க.

அப்பா யோசனை பண்ணினார். அப்புறம் சொன்னார்:

"அவன் கண்ணிலே படாத இடம்... நம்ம வீட்டுலே ஒரே இடம்தான். அங்கே பணத்தை வை ... திருட்டுப் போகாது!" ன்னார்.

"அது எந்த இடம்?" -ன்னாங்க அந்த அம்மா.

"அதுதான்... அவனுடைய பாடப் புத்தகம்! அதுலே வை! அதைத் தொடவே மாட்டான்!"

அப்படின்னார் அப்பா!



# 13. சாப்பிடுவது எப்படி?

ஒருத்தர் வந்தார்.

"உங்ககிட்டே ஒரு விவரம் கேட்டுத் தெரிஞ்சிக்கணும் -ன்னு வந்திருக்கேன். உங்களுக்குத்தான் அது நல்லா தெரிஞ்சிருக்கும்ங்கறது என்னோட நம்பிக்கை" அப்படின்னார்.

எனக்கு ரொம்பப் பெருமையா இருந்துது.

"சரி... கேளுங்க!" -ன்னேன்.

"சாப்பிடுவது எப்படி?" - ன்னார்.

நான் ஒரு மாதிரியா ஆயிட்டேன்.

"ஏன் சார்... இதைக் கேட்கறதுக்கா இவ்வளவு தூரம் மெனக்கெட்டு வந்தீங்க?" ன்னேன்.

"ஆமாங்க... நீங்க அதைப்பத்தி எங்கேயாவது படிச்சிருப்பீங்க... அல்லது கேள்விப்பட்டு இருப்பீங்க... அதனாலே உங்களுக்குத் தெரிஞ்சிருக்கும் -ன்னு நினைச்சேன்" - னார்.

சரி... இப்படி வந்து உட்காருங்க... நம்ம முன்னோர்கள் சில முறைகளைச் சொல்லி வச்சிருக்காங்க... அதைச் சொல்றேன்னு ஆரம்பிச்சேன்.

விஞ்ஞானிகள் சொல்ற செய்தின்னா அது காரண காரியத்தோட இருக்கும். ஏன் எதுச்குன்னு கேட்டா அதுக்குப் பதில் இருக்கும்.

இது முன்னோர்கள் சொன்னதுங்கறதுனாலே... இதிலே ஏன் அப்படி, எதுக்காக இப்படின்னுலாம் கேட்டுக்கிட்டு இருக்கக் கூடாது. அதெல்லாம் அனுபவத்திலே சொல்றது.... அதனாலே பேசாமே கேட்டுக்கறதுதான் நல்லது.

சரி அவங்க என்ன சொல்றாங்க?

சாப்பிடறதுக்கு முன்னாடி கை - கால் - முகம்லாம் கழுவணும்.

இன்னைக்கு நம்மலே எத்தனை பேர் இதைச் செய்யறோம்?

நின்று கொண்டு சாப்பிடக் கூடாது.

கட்டில் மேலே உக்கார்ந்துகிட்டு சாப்பிடக் கூடாது.

படுத்துக் கொண்டு சாப்பிடக் கூடாது.

படுத்துக்கிட்டு கூட சாப்பிடுவாங்களான்னு கேட்காதீங்க... சில பேர் அப்படியும் சாப்பிடுறது உண்டு.

சாப்பிடும்போது முதல்லே இனிப்பை சாப்பிடுங்க... கடைசியிலே கசப்பை சாப்பிடுங்க... மற்ற சுவைகளை எல்லாம் நடுவிலே சாப்பிடுங்க.

சாப்பிடும்போது தண்ணீர் குடிக்க வேண்டாம். விக்கல் எடுத்தா மட்டும் தண்ணீர் குடிக்கலாம். சாப்பாடு சூடா இருக்கும் போதே சாப்பிடுங்க. நம்ம உடம்புக்கு எது ஒத்துக்குதோ அதைச் சாப்பிடணும்.

நம்ம உடம்புக்கு ஒத்துக்காத எதையும் சாப்பிடக் கூடாது.

சாப்பிடும்போது அனுபவித்து, சுவைத்துச் சாப்பிடணும். சில பேர் சாப்பிட ஆரம்பிக்கும்

போதுதான் பேசவும் ஆரம்பிப்பாங்க... அது ரொம்பத் தப்பு. சாப்பிடும்போது பேசப்புடாது... அரட்டை அடிக்கக் கூடாது.

சில ஆசாமிகள் எப்படின்னா...

சாப்பிட்டுக்கிட்டு இருக்கும் போதே சாப்பாட்டைப் பற்றி குறை சொல்லாமே அவங்களாலே சாப்பிட முடியாது.

"இதை என்ன... மனுஷன் சாப்பிடுவானா.." அப்படின்னு சொல்லிக்கிட்டே அவ்வளவையும் சாப்பிட்டு முடிச்சுருவாங்க.

அதுசரியில்லே... இது சரியில்லேன்னு சொல்லிக்கிட்டேதான் சில பேர் சாப்பிடுவாங்க.

'ஆகா எவ்வளவு நல்லா இருக்கு'-ன்னு சொல்லிக்கிட்டே சாப்பிடறவங்க ரொம்பக் குறைச்சல்!

சாப்பிடும்போது சாப்பாட்டை குறை சொல்லாமே சாப்பிடறது ஒரு நல்ல பண்பு.

ரொம்ப கோபத்திலே இருக்கீங்களா? அல்லது ரொம்ப வருத்தத்திலே, கவலையிலே இருக்கீங்களா? துக்கத்திலே இருக்கீங்களா?

அது மாதிரி சமயத்தில் சாப்பிடக் கூடாது.

எப்ப சாப்பிட்டாலும் பாதி வயிறு சாப்பாடு... கால் பாகம் தண்ணீர்... மீதி கால் பாகம் காலியாகவே இருக்கணும். வயிறு முட்ட சாப்பிடுறேன்னு சொல்றது தப்பு.

இரவிலே சாப்பிட்டதற்கு அப்புறம் உடனே படுத்துடப்புடாது. கொஞ்ச தூரம் நடக்கலாம்.

இல்லேன்னா உட்கார்ந்திருக்கலாம். அப்பத்தான் உணவு செரிக்கும்.

சாப்பிட உட்கார்றீங்களா... அதுக்கு முன்னாடி உங்களுக்குப் பசிக்கிறதான்னு யோசிச்சுப் பாருங்க...

“பசி எடுத்த பிறகு கையை வாய்க்குக் கொண்டு போகிறவனும், பசி அடங்குவதற்குள் கையை வாயிலிருந்து விலக்கிக் கொள்கிறவனும் நோய் வாய்ப்பட மாட்டான்” அப்படிங்கறது பெரியோர் வாக்கு.

“சாப்பிட்டது செச்சுட்டுதா? அதுக்கப்புறம் சாப்பிடு! - உனக்கு நோயே வராது!” -ங்கறார் வள்ளுவர்.

“மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின்”

இவ்வளவும் கவனத்திலே வச்சுக்கிட்டு சாப்பிட்டா எப்பவும் கவலையே இல்லாம வாழலாம்.

ஆனால் பல பேர் அப்படி இல்லே.

சாப்பிடும் போது அடிப்படை விஷயம் கையைக் கழுவிக் கொண்டு சாப்பிட உட்காரணும். இதைக் கூட பலபேர் செய்யறதில்லே. அதுதான்...

ஒரு அம்மா கவலையோட சொன்னாங்க. “என் பையன் சாப்பிடறதுக்கு முன்னாடி கையைக் கழுவ மாட்டேங்கறான்!” -னாங்க.

அதுக்கு இன்னொரு அம்மா, “அது பரவாயில்லீங்க... என் பையன் சாப்பிட்டதுக்கு அப்புறமும் கையைக் கழுவ மாட்டேங்கறான்!” அப்படின்னாங்க!



# 14. எது என்னுடையது?

ஒரு காட்டுலே ஒரு குரு இருந்தார். அவருகிட்டே சந்நியாசிகள் நிறையபேர் இருந்தாங்க.

ஒருநாள் இரவு ஒரு சந்நியாசியைக் கூப்பிட்டார்.

"நீ உடனே அரண்மனைக்குப் புறப்பட்டுப் போ... அரசனின் அவையிலிருந்து அறிவைப் பெற்றுக் கொண்டு வா!" அப்படின்னார்.

"குருவே! இந்த ஆசிரமத்துலே கற்றுக் கொள்ள முடியாததையா அரண்மனையிலே போய் கற்றுக் கொள்ளப் போறேன்....!" -ன்னார் அவர்.

"பேசாமே நான் சொல்றதைக் கேள்... மற்றதெல்லாம் அங்கே போய் அரசனைக் கேட்டுக் கொள்!" - அப்படின்னார் குரு.

வேற வழியே இல்லே.

அந்த சந்நியாசி அரண்மனைக்குப் போய் சேர்ந்தார். அங்கே போய் பார்த்தா இவருக்கு அதிர்ச்சி. ஏன்னா அங்கே எல்லாரும் மது மயக்கத்துலே நடனமாடிக்கிட்டிருந்தாங்க.

இந்த சந்நியாசிக்கு ரொம்ப சங்கடமாப் போச்சு...

நம்ம குரு இப்படி நம்மளை அவமானப் படும்படியா ஆக்கிவிட்டுட்டாரே... ன்னு நினைச்சார்.

இருந்தாலும் அரசன் இவரை வரவேற்று உபசரிச்சான்.

"நீங்க கண்டிப்பா இன்னைக்கு ராத்திரி இங்கே தங்கணும்...!" -ன்னு கேட்டுக்கிட்டான்.

"இன்றைக்கு ராத்திரி இங்கே நான் தங்கறது அர்த்தமில்லாத செயல்!" - அப்படின்னார் சந்நியாசி.

இருந்தாலும் அரசன் விடற மாதிரித் தெரியலே...!

"நீங்க, நாளைக்குக் காலையிலே குளிச்சுட்டு சாப்பிட்டுட்டுப் போகலாமே!" - ன்னான்.

'சரி' -ன்னு சொல்லி சந்நியாசி அங்கேயே தங்கினார்.

அன்றைக்கு ராத்திரி அவருக்குத் தூக்கமே வரலே!

"இந்த இடத்துலே நான் எப்படி ஞானத்தைப் பெற முடியும்?" ன்னு ஆச்சரியமா யோசிச்சிப் பார்த்தார்.

காலையிலே எழுந்திரிச்சவுடனே அரசன் அவர்கிட்டே வந்தான்.

"அரண்மனைக்குப் பின்னாலே உள்ள நதியிலே குளிச்சிட்டு வரலாம்... வாங்க!" -ன்னு கூப்பிட்டான். இரண்டு பேரும் போய் அங்கே குளிச்சிக்கிட்டு இருக்காங்க.

அந்த சமயத்துலே திடீர்ன்னு பயங்கர கூச்சல். என்னான்னு பார்த்தா.... அரண்மனை தீப்பற்றி எரிஞ்சிக்கிட்டிருக்கு!

அரசன் சந்நியாசியைப் பார்த்து....

"அதோ பார்த்தீங்களா...!" -ன்னு காட்டினான்.

சந்நியாசி நிமிர்ந்துப் பார்த்தார்... வானளாவிய தீப்பிழம்புகள்! அவ்வளவுதான்.... உடனே அந்த அரண்மனையை நோக்கி ஓட ஆரம்பித்தார்.

“எதுக்காக அங்கே ஓடறீங்க?” -ன்னு கேட்டான் மன்னன். அங்கே அரண்மனையிலே என்னோட துணி ஒண்ணு கிடக்கு... அது எரிஞ்சுடப் போவுதுங்கற அவசரத்துலே ஓடறேன்னு சொல்லிக்கிட்டே ஓடினார்.

அப்படி அவர் ஓடிக்கிட்டிருக்கும்போதே அவருக்குள்ளே ஒரு யோசனை!

“ராஜாவோட அரண்மனையே தீப்பிடிச்சி எரியுது... ஆனா அவரு அங்கே நதியிலே நின்னுக்கிட்டிருக்கார். ஆனால் நான்...?

என்னோட சின்ன துணி ஒண்ணு எரிஞ்சுடப் போவுதேங்கறதுக்காக ஓடிக்கிட்டிருக்கேன்.” இப்படி நினைச்சார். உடனே திரும்பி வந்தார்.

அங்கே தண்ணீர்லே நின்னுக்கிட்டே சிரிச்சிக் கிட்டிருந்தான் மன்னன். அவன் கால்லே விழுந்தார் சந்நியாசி.

அப்புறம் கேட்டார்: “அங்கே உங்க அரண்மனையே தீப்பற்றி எரியுது... நீங்க இப்படி நிக்கிறீங்களே... இதை என்னாலே புரிஞ்சிக்க முடியலையே” -ன்னார்.

இப்போ அந்த அரசன் சொன்னான்: “நான் அந்த அரண்மனையை என்னுடையதாகக் கருதியிருந்தால் இந்நேரம் இங்கே நின்னுக்கிட்டிருக்க மாட்டேன்.

அரண்மனை என்பது அரண்மனை. நான் என்பது நான்.

நான் பிறக்கறதுக்கு முன்னாடியும் அரண்மனை இருந்தது. நான் இல்லாமல் போன பிறகும் அரண்மனை இருக்கும். அப்புறம் அது எப்படி என்னுடையதாக இருக்க முடியும்?

நீங்க அந்தத் துணியை உங்களுடையதாகவும் அரண்மனையை என்னுடையதாகவும் நினைச்சீங்க... அதனாலே அதன் பின்னாலே ஓடுறீங்க!'' - அப்படின்னான். சந்நியாசிக்குத் தெளிவு ஏற்பட்டுது.

மனிதன் தன்னுடைய நோக்கத்தினாலேயே அடிமையாகிறான் என்பது ஓஷோவின் கருத்து. அந்த நோக்கத்தை மாற்றணும். இல்லேன்னா தகர்க்கணும்... அப்படி செஞ்சா விடுதலை பெறமுடியும் - ங்கறார் அவர்.

நம்ம ஆளு ஒருத்தனைக் கேட்டேன்.

“ஏம்பா... உங்க பக்கத்து வீடு தீப்பிடிச்சி எரியிதுன்னு சேதி வந்தா... உடனே நீ என்ன பண்ணுவே?'' -ன்னு கேட்டேன்.

“உடனே அடுத்த தெருவுக்கு ஓடுவேன்... அங்கே இருக்கிற என் மச்சானைக் கூப்பிட்டுக்கிட்டு ஓடிவருவேன்!'' -னான்.

“ஏன்?'' -னு கேட்டேன்.

“அவன் இதுவரைக்கும் தீ விபத்தையே பார்த்ததில்லையாம்... அதனாலே!''

அப்படின்னான்.



# 15. நிறைவு

ஒரே ஒரு ஊர்லே ஒரு மகாராஜா இருந்தார்.

ரொம்ப நல்லவர். தருமசிந்தனை உள்ளவர். எல்லாருக்கும் எல்லா உதவியும் செய்வார். யாருக்கும் 'இல்லை' -ன்னு சொல்லமாட்டார்.

ஒருசமயம் அவர் ஒரு பெரிய காட்சி சாலையைத் திறந்து வச்சார். அதுலே ஏகப்பட்ட பொருள்கள். எல்லாமும் இலவசமா கொடுக்கறதுக்காக. யார் வேணும்ன்னாலும் வரலாம். எந்தப் பொருளை வேணும் -ன்னாலும் எடுத்துக்கிட்டுப் போகலாம். காசு கிடையாது. ஆண் - பெண் எல்லாரும் வந்து அவங்க அவங்க பிரியப்படி தங்களுக்குப் பிடித்தமானதை எடுத்துக்கிட்டுப் போகலாம். அது மாதிரி ஏற்பாடு.

இந்தக் காட்சி சாலைக்கு நிறையபேர் வந்தாங்க. அவங்க அவங்களுக்கு வேண்டியதை எடுத்துக் கிட்டுப் போனாங்க.

சிலபேர் அவங்களுக்குத் தேவையான வேட்டி - சட்டைகளை எடுத்துக்கிட்டுப் போனாங்க.

சிலபேர் வந்தாங்க... அங்கேயிருந்த விலை உயர்ந்த நகைகளை எடுத்துக்கிட்டுப் போனாங்க.

சிலபேர் அங்கேயிருந்த நல்ல புத்தகங்களை எடுத்துக்கிட்டுப் போனாங்க.

சிலபேர் இரும்புப் பெட்டிகளை எடுத்துக்கிட்டுப் போனாங்க. சிலபேர் நல்ல பழவகைகளை எடுத்துக்கிட்டாங்க. எல்லாருக்கும் முழுமனநிறைவு. நிறைவோட திரும்பிப் போனாங்க.

ஒரே ஒரு வயசான அம்மா... அவங்க மட்டும் அங்கே வந்தாங்க. ஆனா எதையுமே தொடலே. மனநிறைவு இல்லே.

எல்லாரும் ஆச்சரியமா அந்தம்மாவைப் பார்த்தாங்க. ஊர்மக்கள் எல்லாருக்கும் மனநிறைவு... இந்தம்மாவுக்கு மட்டும் மனநிறைவு இல்லையா? என்ன காரணமா இருக்கும்.

"உங்களுக்குப் பிடிச்சதை எடுத்துக்க வேண்டியது தானே...!" -ன்னாங்க.

"இங்கே இருக்கிற எந்தப் பொருளும் எனக்குத் திருப்தி அளிக்கலே! நான் மகாராஜாவைப் பார்க்கணும்" -ன்னாங்க.

அங்கே இருந்த திவான் ஓடிப் போய் மகாராஜாகிட்டே சொன்னார்.

உடனே மகாராஜா ஒரு யானை மேலே ஏறிக்கிட்டு அந்த அம்மாவைப் பார்க்க வந்துட்டார்.

அந்த அம்மா மன்னரைப் பார்த்து, "மகாராஜா! கீழே இறங்கி வாங்க... ஒரு முக்கியமான விஷயம் பற்றி உங்ககிட்டே பேசணும்!" -ன்னாங்க.

அரசர் யானையிலேயிருந்து கீழே இறங்கினார்.

அந்த அம்மா ராஜாவோட வலது கையைப் பிடிச்சிக்கிட்டு, "மகாராஜா! இப்ப நீங்க எனக்குச் சொந்தமாயிட்டீங்க. காட்சிச் சாலையிலே உள்ள சின்னச்சின்ன பொருள்களையும்... விளையாட்டுப் பொம்மைகளையும் நான் விரும்பலே. உங்களைப் பெறவே நான் விரும்புகிறேன். நீங்க எனக்குச் சொந்தமாயிட்டதுனாலே இந்த ராஜ்யத்தின் செல்வம் எல்லாம் இப்ப எனக்குச் சொந்தமாயிட்டுது!" -அப்படின்னாங்க.

மகாராஜா மலைச்சுப்போய் நின்னார். அந்த அம்மாவைக் கடைசிவரைக்கும் தன் அரண்

மனையிலேயே வச்சு தாய்மாதிரி கவனிச்சிக்கிட்டார்.

நமக்குப் பலவிதமான ஆசைகள். அதனாலே அந்தந்த ஆசைக்குரிய பொருள்களைத் தேடிச் செல்கிறோம். இப்படிச் செய்யறதுனாலே திருப்தியே உண்டாகறதில்லை.

ஆசைக்கு அடிமையாகிறவர்கள் பிச்சைக் காரர்களுக்கும் பிச்சைக்காரர்களாக ஆகிவிடுகிறார்கள்.

"உலக இச்சைகளையும் பொருள்களையும் துறந்து இப்பரந்த பிரபஞ்சத்தின் மூலம் பரம் பொருளைப் பெற்று விட்டால் உங்களுடைய எல்லா ஆசைகளும் பூர்த்தியாகிவிடும்!" -ங்கறார் சுவாமி சிவானந்தர்.

எப்படி ஞானமுள்ள அந்த வயசான அம்மா மகாராஜாவைச் சொந்தமாகப் பாராட்டி அவருடைய செல்வத்துக்கெல்லாம் அதிபதியா ஆனாங்களோ, அப்படியே எல்லா சவுகரியங்களும் உங்களைத் தேடிக்கிட்டு வரும் - அப்படிங்கறார் அவர்.

இந்தக் காலத்துலே யெல்லாம் அதுமாதிரி உள்ளவங்களைப் பார்க்கறது ரொம்ப அபூர்வம்.

ஒரு நண்பரைப் பார்த்துக் கேட்டேன்.

"ஏன் சார்... அந்த மகாராஜா மாதிரியே இப்ப ஒருத்தர் தன்னுடைய பங்களாவுக்கு உங்களைக் கூப்பிட்டு 'எதை வேணும்ன்னாலும் எடுத்துக்கிட்டுப் போ' -ன்னு சொன்னா முதல்லே எதை எடுப்பீங்க?" -ன்னு கேட்டேன்.

"முதல்லே அவரைத்தான் எடுப்பேன்! அவரை எடுத்துக் கொண்டு போய் எங்கேயாவது காட்டுலே விட்டுட்டு வந்து... அதுக்கப்புறம் அந்த பங்களாவுலே நான் இருப்பேன்!" அப்படின்னார்.



# 16. இருக்கும் வரையில்...

ஓர் அலுவலகம்.

அதுலே ஒரு தலைமை அதிகாரி.

அவர் ரொம்பவும் உண்மையானவர்... நேர்மையானவர். அலுவலகத்துலே உள்ள ஒவ்வொரு பொருளையும் ரொம்பவும் பத்திரமா பாதுகாத்து வந்தார்.

மேஜை... நாற்காலி... குப்பைக்கூடை எல்லாம் அந்தந்த இடத்துலே இருக்கான்னு பார்த்துக்குவார்.

நாற்காலியிலே ஒரு கால் உடைஞ்சிருந்தாலும் அதை உடனே பழுதுபார்த்து சரி செஞ்சுடுவார்.

அதாவது அவர் எப்படின்னா... அந்த அலுவலகத்துலே உள்ள ஒவ்வொரு பொருளையும் தன்னுடையதா நினைச்சி பாதுகாத்து வந்தார்.

அந்த அதிகாரிக்கு ஒருநாள் திடீர்ன்னு மாற்றல் உத்தரவு வந்தது - Transfer Order.

உடனே என்ன பண்றார்? தன்னுடைய பெட்டி படுக்கையைக் கட்டிக்கிட்டுப் புறப்பட்டுடறார்.

இப்ப அந்த அலுவலகத்துலே உள்ள மேஜையைப் பற்றியோ, நாற்காலியைப் பற்றியோ அவரு கவலைப்படலே.

அந்த அலுவலகத்துலே இருந்த வரைக்கும் அங்கே இருந்த எல்லா பொருள்களுக்கும் அவரே பொறுப்பு.

அதேவிதமா... அவர் எல்லாத்தையும் தன்னுடையதா பாவித்து அக்கறையா கவனிச்சுக்கறார்.

இதை 'மாரகம்' - அப்படின்னு சொல்றாங்க.

அவரை அடுத்த ஊருக்கு மாற்றிய உடனே இது எல்லாம் தன்னுடையதில்லே... சமுதாயத்தைச் சேர்ந்தது... அப்படிங்கற எண்ணம் வந்துடுது.

தான் வெறும் 'பொறுப்பாளி' மட்டுமே (Custodian) என்கிற எண்ணம் உருவாகுது. இதைக் காப்பாற்றுவது மட்டும்தான் என்னுடைய கடமை - என்கிற எண்ணத்தோடு செயல்படறார்.

இதுவும் 'மாரகம்' - தான்.

ஆனா.... 'தாரகம்' -ங்கறது வேறே.

அதே அலுவலர் மாற்றலாகிப் போகும்போது வீட்டிலே உள்ள எல்லாத்தையும் கட்டி லாரியிலே ஏத்தறார். பழைய செருப்பு - துடைப்பம்... எதையும் விட்டு வைக்கலே...! என்ன காரணம்?

எல்லாம் என்னுடையது - ங்கற எண்ணம்.

ஆக...

எல்லாம் என்னுடையது -ங்கற எண்ணம் தாரகம்.

என்னுடையதில்லை -ங்கற எண்ணம் மாரகம்.

இந்தத் 'தாரகம்', 'மாரகம்' - இரண்டிற்கும் இடையிலே தான் மனித வாழ்க்கை ஊசலாடுகிறது -ங்கறது பெரியவர்கள் (சாயிபாபா) கருத்து.

எல்லாவற்றையும் நாம் அனுபவிக்கலாம். ஆனா எதுவும் என்னுடையதில்லை -ங்கற எண்ணம் நமக்கு வரணும்.

இருக்கிறதெல்லாம் இயற்கை கொடுத்திருக்கிற பிரசாதம்.

அரசாங்கம் கொடுத்திருந்ததை அந்த அதிகாரி காப்பாற்றினார். பொறுப்புலே இருக்கிற வரைக்கும் இதையெல்லாம் காப்பாற்ற வேண்டியது தனது கடமைன்னு நினைச்சார் அவர்.

அடுத்த ஊருக்குப் போ-ன்னு சொன்னதும் அங்கே இருக்கிற எல்லாத்தையும் உதறிபுட்டுக் கிளம்பிட்டார்.

இந்த உலகியல் கடமையை ஒரு யோகமாகச் செய்யணும். இந்த உலகத்துலே இருக்கிறவரைக்கும்... என் வீடு... என் மனைவி... என் மக்கள்... இது எல்லாமே இயற்கை அல்லது இறைவன் நமக்குக் கொடுத்திருக்கிற பிரசாதம் -ன்னு உணரணும். அப்படிப் புரிஞ்சிக்கிட்டு நம்முடைய கடமைகளைச் செய்யணும்.

எல்லாம் என்னுடையது என்கிற 'மமகாரம்' வந்துடப்புடாது.

ஒரு மனிதனுக்கு எது நிரந்தரம்?

எதுவரை இருக்கப் போகிறான்? யாருக்கும் தெரியாது. அதனாலே வாழும்வரை கடமையாற்றிக் கொண்டே காலம் கழிக்க வேண்டும். எல்லாம் இயற்கை தந்த வரப்பிரசாதம் என்கிற பாவனையோடு வாழக் கற்றுக் கொள்ள வேண்டும்.

இந்தக் காலத்து அதிகாரி ஒருத்தர். ஒரு லாரியிலே ஏறிக்கிட்டிருந்தார்.

"என்ன சார் விவரம்?" -ன்னு கேட்டார் அவருடைய நண்பர் ஒருத்தர்.

"எல்லாம் என்னுடையது-ன்னு நினைச்சேன். அதோட விளைவு இது!" -ன்னார் அவர்.

"என்ன... அடுத்த ஊருக்கு மாத்திட்டாங்களா?" -ன்னார் அவர்.

"இல்லேசார்... என்னை அரெஸ்ட் பண்ணி அழைச்சிக்கிட்டுப் போறாங்க!"

அப்படின்னார் இவர்.



# 17. அரசன்

அந்தக் காலத்துலே ஒருத்தன் கடல் வாணிபம் செய்யறதுக்காகப் போறான்.

கப்பல் உடைஞ்சு கடல்லே மூழ்கிப் போயிடுது. அவனும் போயிடுறான்.

அவனுக்கு ஏகப்பட்ட சொத்து இருக்கு. வாரிசு இல்லே. முறைப்படி வாரிசு இல்லாத சொத்து அரசாங்கத்துக்குச் சேரவேண்டியதுதானே!

அதனாலே அந்த ராஜாங்கத்துலே இருந்த நிதி அமைச்சர் ராஜாவுக்கு ஒரு குறிப்பு அனுப்பறார்.

'கடல் வாணிபம் செய்யப் போன ஒருத்தன் கப்பல் உடைஞ்சி இறந்து போனதாலேயும் - அவனுக்கு சந்ததி இல்லேங்கறதுனாலேயும் அவனுடைய சொத்துப் பூராவும் அரசாங்க கஜானாவை சேர்ந்துடுது' - அப்படிங்கற குறிப்பை அனுப்பி வச்சார் ராஜாவுக்கு!

அந்த ராஜா பார்த்தார். யோசிச்சார்.

அவ்வளவு செல்வத்தையும் உடனே அரசாங்கம் எடுத்துக்கலாம் -ங்கற முடிவுக்கு வரலே! அவசரப்படலே! நிதானமா சிந்தனை பண்ணினார்.

அந்த நபர் ஒரு பெரிய வியாபாரின்னா பல கல்யாணங்கள் பண்ணிக்கிட்டிருப்பானே... அப்படி யிருந்தா அவனுடைய மனைவிமார்கள்லே யாராவது கர்ப்பமா இருக்காங்களான்னு விசாரிக்கணும் -ன்னார்.

அரசாங்க அதிகாரிகள் விசாரிச்சாங்க.

ராஜா எதிர்பார்த்தது மாதிரியே செத்துப்போன அந்த வியாபாரியின் ஒரு சம்சாரம் கர்ப்பமா இருக்கறது தெரியவந்துது.

உடனே ராஜா சொன்னார்:

"அந்த வியாபாரியின் சொத்து அரசாங்க 'கஜானா' வுக்கு வரவேண்டியதில்லே! அந்த செல்வம் பூரா கர்ப்பத்துலே இருக்கிற அந்த குழந்தையைத்தான் சேரும்!" - அப்படின்னார்.

இப்படி தீர்ப்புப் பண்ணின அந்த ராஜா யாரு தெரியுமா?

துஷ்யந்தன்!

ஆமாம்! காளிதாசனுடைய சாகுந்தலத்துலே வர்ற ஒரு காட்சிதான் இது! (ஆறாவது அங்கம்)

காளிதாசனுடைய 'ரகு வம்சம்' வரிசையா சூரிய வம்ச ராஜாக்களைப் பத்தி சொல்ற காவியம்.

அதுலே வர்ற 'ரகு'ங்கற ராஜா ஒரு காரியம் பண்றார்.

அந்த ராஜா உள்நாடு - வெளிநாடுகளை எல்லாம் ஜெயிச்சி ஏகப்பட்ட செல்வங்களோட திரும்பறார்.

அந்த சொத்து பூராவையும் என்ன பண்றார் தெரியுமா?

'விச்வஜித்' அப்படிங்கற ஒரு யாகம் பண்ணி அத்தனை செல்வத்தையும் தானம் பண்ணிபுடறார்... தட்சிணையா வேறே கொடுத்துடறார். ஏற்கனவே இருந்த சொத்துக்களைக்கூட தானம் பண்ணிபுடறார்.

அந்தக் காலத்துலேயெல்லாம் ஒருத்தர் ராஜா ஆகணும்ன்னா அதுக்கு முன்னாடி அதுக்கான யோக்யதைகளை சம்பாதிச்சிக்க வேண்டியது அவசியமா இருந்துது.

குருகுலவாசம் பண்ணனும் - சாஸ்திரங்களை யெல்லாம் தெரிஞ்சிக்கணும்.

தர்மத்துலேயும் பண்புலேயும் அவங்க உயர்ந்தவங்களா இருக்கணும்.

ராஜாவா ஆகி வெளி விரோதிகளை ஜெயிக்கறதுக்கு முன்னாடி - காமம் குரோதம் இது மாதிரியான ஆறு உள் விரோதிகளை ஜெயிச்சிக்கணும் - ங்கறது சாஸ்திரம்.

ஒரு ராஜா ஜனங்கள்கிட்டே வரி வசூலிக்கிறது எப்படிங்கறதைப் பத்திக்கூட அப்போ சொல்லியிருக்காங்க!

ஒரு வண்டானது எப்படி புஷ்பத்துக்கு வலி தெரியாமல் தேனை எடுத்துக் கொள்கிறதோ அது மாதிரிதான், ராஜா, குடிமக்களுக்குக் கொஞ்சம்கூட சிரமம் தெரியாமல் அவர்களுடைய மலர்ச்சி குன்றாமல் வரி வசூலித்து எடுத்துக் கொள்ள வேண்டும் -ங்கறது சாஸ்திரம் சாஸ்திரம்.

இதையே இன்னொரு உவமையாலே அழகாகச் சொல்றான் காளிதாசன்.

'சூரியன் எப்படி பூமியிலேயிருந்து நீரை உறிஞ்சிக்கிட்டு அப்புறம் அதையே மழையா பொழியுதோ அது மாதிரி அந்த ராஜா (திலீபன்)

குடிமக்கள் கிட்டேயிருந்து வரிவசூல் பண்ணினதை அதுக்கப்புறம் அவர்கள் நலனுக்கே செலவிட்டான் - அப்படிங்கறான்.

அதனாலே ஒரு தேசத்துக்கு ராஜாவா இருக்கறதுங்கறது சாதாரண விஷயமில்லே!

நம்ம காலத்துப் பிரஜைகள்லே ஒருத்தர். ரொம்ப சிரமப்பட்டு கடன் வாங்கி ஒரு கார் வாங்கினார்.

"என்னங்க இது ஆச்சரியமா இருக்கு... ஏற்கனவே நீங்கள் வரி கட்டமுடியாமே கஷ்டப்படறீங்க... இந்த நிலைமையிலே இதுவேறே தேவையா?" -ன்னு கேட்டாங்க.

இதுக்கு அவரு சொன்னார்:

"அப்படி இல்லீங்க... என்கிட்டே மத்தவங்க வரிவசூல் பண்ணவர்றப்போ என்னாலே வேகமா ஓடமுடியலே... அதனாலேதான் கார் வாங்கினேன்!" - அப்படின்னார்.



# 18. வாழ்வின் முடிச்சுகள்!

காலைநேரம்!

சீடர்கள்லாம் காத்துக்கிட்டிருக்காங்க... புத்தர் வர்றார்... அவங்க முன்னாடி பேசறதுக்காக!

வரும்பொழுது கையிலே ஒரு துணியை எடுத்துக்கிட்டு வர்றார். சின்ன துணிதான்... சாதாரணமா கைக்குட்டை இருக்கும்லே... அதைவிடக் கொஞ்சம் பெரிசு... அவ்வளவுதான்! புத்தர் வந்து மேடையிலே உட்கார்ந்தார்.

எதுவும் பேசலே! பேசாமே அந்தத் துணியிலே முடிச்சுகள் போட ஆரம்பிச்சார்.

சீடர்களுக்கு ஒண்ணும் புரியலே...

என்ன இது... வழக்கமா பேசுவார்... இப்போ அதுக்கு நேர் மாறா வேறே எதுவோ பண்ணிக்கிட்டிருக்காரே... -ன்னு பார்த்தாங்க.

சரி இருக்கட்டும் -ன்னு சொல்லி மௌனமா அதைக் கவனிச்சிக்கிட்டிருந்தாங்க!

புத்தர்... தலை நிமிர்லே... அவர்பாட்டுக்கு முடிச்சு போட்டுக்கிட்டே உட்கார்ந்திருக்கார்.

ஐந்து முடிச்சுகள் போட்டதுக்கப்புறம் தலை நிமிர்ந்து பேச ஆரம்பிச்சார்:

சீடர்களே! இப்ப நான் ஐந்து முடிச்சுகள் போட்டேன்... இதை அவிழ்க்கப் போறேன்... அவிழ்க்கறதுக்கு முன்னாடி உங்ககிட்டே ரெண்டு கேள்வி கேக்கப் போறேன்.

முதல் கேள்வி என்ன -ன்னா...

முன்னாடி நான் வச்சிருந்த துணியும்... முடிச்சுகள் விழுந்த இந்தத் துணியும் ஒன்றுதானா?''

அப்படின்னு கேட்டார்.

உடனே ஒரு சீடன் எழுந்திரிச்சான் (ஆனந்தன்)

''பெருமானே! ஒரு வகையிலே எல்லாம் ஒண்ணுதான்... முன்னாடி இருந்ததும் இப்ப இருக்கறதும் ஒண்ணுதான்... முடிச்சுகள் மட்டும் தான் அதுலே வித்தியாசம்! ஒரு சின்ன மாற்றம் ஏற்பட்டிருக்கு... அவ்வளவுதான்!

முன்னாடி இருந்த துணி சுதந்திரமுடையது! முடிச்சு விழுந்ததும் அதன் சுதந்திரம் போயிட்டுது! இப்போ இந்தத் துணி அடிமைப்பட்டுக் கிடக்குது!'' -அப்படின்னான்.

''ஆமாம்! நீ சொல்றது சரிதான். ஒரு வகையில் ஒரே துணிதான். இன்னொரு வகையில் வேறு பட்டிருக்கு!

எல்லோருமே இயல்பிலே கடவுள்கள்தான்!

ஆனா முடிச்சுப் போட்டுக்கிட்டு... சிக்கல்லே மாட்டிக்கிட்டு அடிமைப்பட்டுப் போயிடறாங்க! நாம எல்லோருமே அடிப்படையிலே புத்தர்கள் தான்... ஆனா தனிமைப்பட்டுப் போய் தனித்தனி உலகங்களை சிருஷ்டித்துக்கிட்டு... அதுலே சிக்கிக் கிட்டு தனிமைப்பட்டுப் போயிடறாங்க... இந்த முடிச்சுகள் மாதிரி! இதைத்தான் நான் உங்களுக்குத் தெரிவிக்க விரும்பினேன்!'' - ன்னார்.

கொஞ்ச நேரம் கழிச்சி அடுத்த கேள்வியைக் கேட்டார்.

"இந்த முடிச்சுகளை அவிழ்க்கணும்ன்னா என்ன செய்யணும்?" -ன்னு கேட்டார்.

இன்னொரு முக்கியமான சீடன் எழுந்திரிச்சி நின்னான். (சாரிபுத்திரன்)

"குருவே! அதை அவிழ்க்கணும்ன்னா... நான் அருகில் வர அனுமதிக்கணும். முடிச்சுகள் எப்படி போடப்பட்டிருக்குன்னு தெரியாத வரையிலே அதை அவிழ்க்க வழியில்லே! முடிச்சு போட்ட முறை தெரிஞ்சா அதை அவிழ்க்கறது சுலபம்! நெருங்கிப் பார்க்காமே எதுவும் செய்ய முடியாது. நினைவோடு செஞ்சா முடிச்சுகள் எளிமையா விழும்! நினைவில்லாமே விழுற முடிச்சுகள் ரொம்ப சிக்கலானவை! சிலசமயம் அவிழ்க்கவே முடியாமல் கூட போயிடலாம்!" -அப்படின்னான்.

புத்தர் நிமிர்ந்து பார்த்தார்.

"நீ சொன்னது சரிதான்! அதுதான் வாழ்க்கை. அதுதான் வாழ்க்கையின் சிக்கல்!" - அப்படின்னார் புத்தர்.

இதோட விளக்கம் என்னன்னா...

கணியன் பூங்குன்றனார் சொன்னாரே "தீதும் நன்றும் பிறர் தரவாரா!" -ன்னு, அதுதான்.

நம்முடைய சிக்கல்களுக்கு நாமதான் காரணம்.

நம்மை அறியாமே... விழிப்பு உணர்ச்சி இல்லாமே நாம போட்டுக்கற முடிச்சுகள்லே சிக்கி... சிக்கலை அவிழ்க்க முடியாமே திணறிக்கிட்டு இருக்கிறோம் நாம்!

இதுதான் இன்னைக்கு நடந்துக்கிட்டிருக்கிறது.

எப்பத்தான் நாம முழிச்சிக்கப் போறோமோ தெரியலை.

நம்ம ஆள் ஒருத்தன் சொன்னான்:

''எதிர்த்தவூட்டுக்காரன் இருக்கானே... அவனாலே எனக்கு எப்பவும் சிக்கல்தான் சார்!'' - அப்படின்னான்.

''ஏன் அப்படி சொல்றே?'' -ன்னு கேட்டேன்.

''எப்பப் பார்த்தாலும் நூறு ரூவா கொடு... நூறு ரூவா குடு-ன்னு கேட்டு என்னை அரிச்சி எடுத்துடுவான் சார்!'' - அப்படின்னான்.

''நீ... 'இல்லே' -ன்னு சொல்ல வேண்டியது தானே!'' -ன்னேன்.

''அது எப்படி... வாங்கின கடனை இல்லேன்னு சொல்ல முடியும்?'' - அப்படிங்கறான்!



# 19. மூன்று இடையூறுகள்!

ஒரு பெரியவர்கிட்டே பேசிக்கிட்டிருந்தேன்.

அவர் சொன்னார்:

“ரெண்டு நல்லவனுக்கு மூணு வழி!

ஒரு நல்லவன் - ஒரு கெட்டவனுக்கு ரெண்டு வழி!

ரெண்டு கெட்டவனுக்கு ஒரே வழி!”

- அப்படின்னார். எனக்கு ஒண்ணும் புரியலே...

இதுக்கு என்னாங்க விளக்கம்? -ன்னேன். அதுக்கப்புறம் அதுக்கு அவரு விளக்கம் குடுத்தார். அதாவது...

ஒரு ஒத்தையடிப் பாதையிலே எதிரும்புதிருமா ரெண்டுபேர் வந்துகிட்டிருக்காங்க. அது ஒரு வரப்புன்னு வச்சிக்குங்களேன். அவங்க ரெண்டு பேரும் பாதையை விட்டு விலகாமே நேரா வந்தா மோதிக்க வேண்டியதுதான். எதிரும் புதிருமா வந்துகிட்டிருக்கிற அந்த ரெண்டு பேருமே நல்லவங்க-ன்னு வச்சிக்குங்களேன்...

அவரு என்ன பண்ணுவார். இவரு நேரா பாதையிலே வரட்டும்ன்னு அவரு வரப்பை விட்டு விலகி கீழே இறங்கி நடந்து வருவார்.

இவரு என்ன பண்ணுவார்... அவரு பாதையிலே வரட்டும்ன்னு இவரு விலகி கீழே இறங்கி நடந்து வருவார்.

அவருக்காக இவரு விட்டுக் குடுக்கறார்... இவருக்காக அவரு விட்டுக் குடுக்கறார். ஆக அவரு வர்ற பாதை ஒண்ணு... இவரு போற பாதை ஒண்ணு... நடுவுலே ஏற்கனவே உள்ள பாதை ஒண்ணு. மொத்தம் மூணு...

அதுதான் ரெண்டு நல்லவனுக்கு மூணு வழின்னு சொல்றது.

ஒரு நல்லவன் - ஒரு கெட்டவனுக்கு ரெண்டு வழி. இது எப்படின்னா... ஒரே வரப்புலே எதிரும்புதிருமா வர்ற ரெண்டு பேர்லே ஒருத்தன் நல்லவன்... ஒருத்தன் கெட்டவன்.

நல்லவன் வரப்பை விட்டு கீழே இறங்கி எதிர்லே வர்றவனுக்கு வழிவிடுவான்.

கெட்டவன்... வரப்பை விட்டு கீழே இறங்க மாட்டான். அவன் இறங்கட்டுமே நாம எதுக்கு இறங்கணும்ன்னு இருந்துடுவான்.

இப்ப ரெண்டு பாதைதான் உண்டு.

இதுதான் ஒரு நல்லவன் - ஒரு கெட்டவனுக்கு ரெண்டு வழின்னு சொல்றது.

ரெண்டு கெட்டவனுக்கு ஒரே வழின்னு சொல்றது எப்படி தெரியுமா?

ஒரே வரப்புலே எதிரும்புதிருமா வர்ற ரெண்டு பேருமே கெட்டவன்னு வச்சிக்குங்களேன்... ரெண்டு பேருமே வரப்பை விட்டு கீழே இறங்கமாட்டான்...

இவன் இறங்கட்டுமேன்னு அவன் இருப்பான். அவன் இறங்கட்டுமேன்னு இவன் இருப்பான். ரெண்டு பேரும் ஒரே பாதையிலேதான் வந்து கிட்டிருப்பான்க.

இதுதான் ரெண்டு கெட்டவனுக்கு ஒரே வழின்னு சொல்றது.

இப்பத்தான் அந்தப் பெரியவர் சொன்ன வார்த்தைக்கு அர்த்தம் புரிஞ்சிது. அவரே இன்னொரு விஷயத்தையும் சொன்னார். அதாவது -

நமக்கு வர்ற இடையூறுகள் மூணு வகை -ன்னார்.

அது எப்படின்னு கேட்டேன்.

நாம ஒரு காரியத்தைத் தொடங்கறோம்ன்னு வச்சிக்குங்களேன். அதுக்கு மூணு வகையிலே இடைஞ்சல் வரலாமாம்.

நம்மாலேயே வர்ற இடைஞ்சல் ஒரு வகை. இது ஆத்யாத்மிகம்!

நம்மைத்தவிர மத்தவங்களாலே வர்ற இடைஞ்சல் ஒருவகை - இது ஆதிபௌதிகம்.

இயற்கையா வர்ற இடைஞ்சல் மூணாவது ரகம். அதுக்குப் பேரு - ஆதி தெய்வீகம்.

நமக்குப் பிடிச்ச ஒரு நல்ல சினிமா படத்தைப் பார்த்துக்கிட்டிருக்கோம் -ன்னு வச்சிக்குங்களேன்.

அந்த சமயம் பார்த்து நமக்கு வயத்தை வலிக்குது... இது நம்மகிட்டே இருந்தே வர்ற இடைஞ்சல்.

ஆர்வமா அந்தப் படத்தைப் பார்த்துக் கிட்டிருக்கோம்... அந்த சமயம் பார்த்து பக்கத்துலே இருக்கறவங்க காச் - மூச்ன்னு பேசிக்கிட்டிருக்காங்க...

இது வந்து... அடுத்தவங்களாலே வர்ற இடைஞ்சல்...

அந்த சமயம் பார்த்து இடி - மின்னல் - பூகம்பம்... கரண்ட் போயிடுது....

இது இயற்கை உண்டுபண்ற இடைஞ்சல்.

இப்படி மூணு வகையாவும் இடைஞ்சல் வரப்புடாதுங்கறதுக்காகத்தான் பெரியவங்க சாந்தி - சாந்தி - சாந்தி ன்னு மூணு தடவை சொல்றாங்க. இந்த மூணு இடைஞ்சலும் அமைதியா இருக்கணும் -ன்னு அர்த்தம்.

ஆத்யாத்மிகம் - ஆதிபௌதிகம் - ஆதிதெய் வீகம்.

நம்ம 'இன்று ஒரு தகவல்' -லேயே இந்த மூணு இடைஞ்சலும் இருக்கு! எப்படி தெரியுமா?

7-35க்கு உங்க ரேடியோவை திருப்புறீங்க இல்லையா... அது நீங்களா ஏற்படுத்திக்கற இடைஞ்சல்!

சரியா அந்த நேரத்துக்கு நான் பேச ஆரம்பிக்கிறேன் இல்லையா? இது அடுத்தவங் களாலே உங்களுக்கு ஏற்படற இடைஞ்சல்!

அந்த நேரம் பார்த்து நம்ம ஊரு கரண்ட் 'கட்' ஆகாமே இருக்குப் பாருங்க...

அது இயற்கை ஏற்படுத்தற இடைஞ்சல்!

ஓம் சாந்தி... சாந்தி... சாந்தி!



# 20. சோதனை ஏன்?

"ஆண்டவன் அடிக்கடி என்னையே சோதிச்சிக் கிட்டிருக்கான் சார்!"

இது பலபேருடைய கவலை.

இப்படிக் கவலைப்படறவங்களுக்கு ஆறுதலா ஒரு கதை கிடைச்சுது. (ஸ்ரீ பகவத் கிருபா என்னும் ஹிந்தி நூலில் உள்ள கதை)

அதை உங்க காதுலேயும் போட்டு வைக்கலாம்ன்னு ஒரு ஆசை.

ஒரு காலத்துலே... ஒரு பெரியவர் இருந்தாராம். ஆண்டவன் அவருக்கு அடிக்கடி தரிசனம் குடுக்கறது வழக்கமாம். சும்மா வந்து தரிசனம் குடுக்கறது மட்டும் இல்லே... கொஞ்ச நேரம் உக்கார்ந்து அவருகூட பேசிக்கிட்டிருந்துட்டுப் போறதும் வழக்கமாம்.

ஒருநாள் இவரைத் தேடிக்கிட்டு ஒரு ஏழை பக்தர் வந்து சேர்ந்தாராம். வாழ்க்கையிலே ரொம்பக் கஷ்டப்பட்டுக்கிட்டிருக்கிறவர்.

இவரு வந்து அந்தப் பெரியவரைப் பார்த்தார். "ஏங்க? நீங்கதான் அடிக்கடி ஆண்டவன்கிட்டே பேசிக்கிட்டிருக்கீங்களே! எனக்காக ஒரு விஷயம் அவருகிட்டே கேட்டுச் சொல்லப்புடாதா?" -ன்னார்.

"என்ன கேக்கணும்? சொல்லுங்க! கேட்டுச் சொல்றேன்!" -ன்னார்.

"அவரு ஏன், எனக்குன்னு பார்த்து கஷ்டத்து மேலே - கஷ்டமா குடுத்துக்கிட்டிருக்கார்? -ன்னு கேட்டுச் சொல்லுங்க!

இவ்வளவுக்கும் நான் தினமும் அவரைத்தான் கும்பிட்டுக்கிட்டிருக்கேன்... பூஜை பண்ணிக்கிட்டிருக்கேன். இருக்கிற கஷ்டம் போதாதுன்னு நேத்திக்கு என்னோட சின்ன குடிசையும் இடிஞ்சி விழுந்துட்டுது! இப்ப தங்கறதுக்குக் கூட இடமில்லே... தவிக்கிறேன்! நான் என்ன தப்பு பண்ணினேன்னு ஆண்டவன்கிட்டே கொஞ்சம் கேட்டுச் சொல்லுங்களேன்!'' -ன்னார்.

"சரி... கடவுள் வரட்டும் கேட்டுச் சொல்றேன்'' -ன்னார் அந்தப் பெரியவர்.

கொஞ்சநாள் கழிச்சி ஒருநாள் பகவான் வந்தார் அந்தப் பெரியவரைப் பார்க்க!

உடனே இவரு அந்த ஏழை பக்தர் சொன்ன விஷயத்தைப் பத்தி ஆண்டவன் கிட்டே கேட்டார்.

"இதுக்கு நான் பதில் சொல்றேன்... ஆனா அதுக்கு முன்னாடி நீ எனக்கு ஒரு உதவி செய்யணும்!'' -ன்னார் கடவுள்.

"என்ன செய்யணும்?'' -ன்னார் இவர்.

"ஒரு செங்கல் வேணும்!'' - ன்னார்.

உடனே அந்தப் பெரியவர் புறப்பட்டு பக்கத்து 'டவுனு'க்குப் போனார். அங்கே பார்த்தா எல்லாம் பெரிய பெரிய கட்டடமா இருக்கு. அதுலேயிருந்து செங்கல்லை எடுக்க இவருக்கு மனசு வரலே.

இவரு இப்படி பார்த்துக்கிட்டே நடந்து போய்க்கிட்டிருந்தார்.

அங்கே - பாதி இடிஞ்சிபோன ஒரு வீடு. மீதியும் எப்ப இடிஞ்சி விழலாம்ன்னு பார்த்துக்கிட்டிருந்துது.

இவரு போய் அதுலேயிருந்து ஒரு செங்கல்லை பிடிச்சி இழுத்தார். இவரு இழுத்த வேகத்துலே மீதி கட்டடமும் பொல பொலன்னு கொட்டிப் போச்சி!

இவரு அதைப் பத்தி கவலைப்படலே. அந்த ஒரு செங்கல்லை எடுத்துக்கிட்டு வந்து 'கடவுள்' கிட்டே கொடுத்தார்.

'இந்தக் கல்லை எங்கே இருந்து எடுத்துக்கிட்டு வந்தே?' -ன்னார்.

இவரு விவரம் சொன்னார்... ஒரு பழைய வீட்டுலேயிருந்து எடுத்துக்கிட்டு வந்தேன்னு!

'ஏன் அங்கேயிருந்த பெரிய கட்டிடங்கள் லேயிருந்து எடுக்கலே?' -ன்னு கேட்டார்.

"அதுலாம் நல்ல கட்டடமா இருந்துது. அதுலே எடுத்தா அதோட அழகு கெட்டுடும்! பழைய வீட்டுலேயிருந்து எடுத்தது நல்லதாப் போச்சி! இப்ப அங்கே ஒரு புதுவீடு கட்டிபுடுவாங்களே!" -அப்படின்னார்.

இதுக்கப்புறம் ஆண்டவன் விளக்கம் குடுத்தார்:

"நான் அந்த பக்தனுக்கு கஷ்டத்துக்குமேலே கஷ்டமா குடுத்துக்கிட்டிருக்கிறது இதே காரணத்துக் காகத்தான். அவனுக்கு வைராக்கியம் அதிகரிக்கணும் ங்கறதுக்காகத்தான் இப்படி செய்யறேன்!

கஷ்டங்கள் அதிகரிக்க அதிகரிக்க அவன் புதுமனுஷனா ஆயிடுவான்!" - அப்படின்னார்.

இதுதான் அந்தக் கதை.

இதுலேயிருந்து நாம தெரிஞ்சிக்க வேண்டிய விஷயம் என்னன்னா... துன்பத்தைக் கண்டு துவண்டு போயிடக் கூடாது. துன்பம் வரும்போது நமக்கு மன

உறுதி வரணும். அந்த மன உறுதியை துணையா வச்சிக்கிட்டு நாம புது மனுஷனா மாறணும்.

'அய்யோ கஷ்டம் வந்துட்டுதே!' -ன்னு நாம தலையிலே கையை வச்சிக்கிட்டு உட்கார்ந்துட்டா அப்படியே உட்கார்ந்திருக்க வேண்டியதுதான்!

நம்ம ஆள் ஒருத்தர் இருக்கார். தான் ஆண்டவனுக்கு ரொம்ப நெருக்கம்ன்னு சொல்லிக்கிட்டிருப்பார். அவருகிட்டேயும் ஒரு ஆள் வந்து 'ஆண்டவன் ஏன் என்னை இப்படி சோதிக்கிறார்?' -ன்னு கவலையோட கேட்டிருக்கார்.

உடனே இவரு தன்னையே ஆண்டவனா நினைச்சிக்கிட்டு "ஒரு செங்கல் எடுத்துக்கிட்டு வா... சொல்றேன்!" -ன்னார்.

இவர் போனார்... ஒரு வண்டி செங்கல்லை கொண்டாந்து இவரு முன்னாடி கொட்டினார்.

உடனே அவரும் ஆண்டவன் மாதிரியே அதுக்கு விளக்கம் குடுத்தார். கஷ்டம் வர்றப்போ மனசுலே ஒரு வைராக்கியம் வரணும் -ன்னார்.

எனக்கு அந்த வைராக்கியம் இப்ப வந்துட்டுதுங்க. உங்களுக்கு வந்துட்டுதா? -ன்னார்.

"என்னது என்னையே பார்த்து அப்படி கேக்கறே?" -ன்னார் அந்த பெரியவர்.

இடிஞ்சி போன வீட்டை திருப்பி கட்டவேண்டியது நீங்கதான்! ஏன்னா இவ்வளவு செங்கல்லும் உங்க வீட்டுலே இருந்துதான் பேர்த்து எடுத்துக்கிட்டு வந்தேன்!" - அப்படின்னார்.



# 21. மனம் என்கிற பூதம்!

ஒரு நாள் ஒரு மனுஷன் யோகி ஒருத்தரைத் தேடிக்கிட்டுப் போனான்.

"சாமி! நான் உழைச்சி உழைச்சி ரொம்பக் களைப்படைஞ்சுட்டேன். இருந்தாலும் இன்னமும் என்னுடைய வேலைகள்லாம் முடியலே! பாக்கியிருக்கு. எல்லா வேலையையும் செஞ்சு முடிக்கிற சக்தி எனக்கு கிடைக்கணும். அதுக்கு நீங்கதான் வழி பண்ணனும்!" -ன்னு வேண்டிக் கிட்டான்.

"அந்த சக்தியை உனக்கு நான் கொடுத்துடுவேன். இருந்தாலும் அது உனக்குப் பெரிய தொந்தரவா இருக்குமே!" -ன்னார் யோகி.

"இருந்தாலும் பரவாயில்லே சாமி... அப்படி என்ன பெரிய தொந்தரவு வந்துடப் போவுது... நீங்க எனக்கு அந்த சக்தியைக் குடுங்க!" -ன்னு கேட்டுக்கிட்டான் இவன். இவனோட தொந்தரவு தாங்க முடியலே...

யோகி பார்த்தார். 'கிட்டே வா' -ன்னார். வந்தான். இவன் காதோட காதா ஒரு மந்திரத்தை உபதேசம் பண்ணினார். அதை அவன் பாராயணம் பண்ணி முடிச்சதும் ஒரு பெரிய பூதம் அவன் முன்னாடி வந்து நின்னுது.

"ஐயா... நான் உங்களுக்காக எல்லா வேலையும் செய்யக் காத்துக்கிட்டிருக்கேன். ஆனா ஒரு நிபந்தனை. நீங்க நாள் பூராவும் இடைவிடாமே எனக்கு ஏதாவது வேலை கொடுத்துக்கிட்டே இருக்கணும். அப்படி எனக்கு வேலை எதுவும்

இல்லாமே போச்சின்னா... உங்களையே முழுங்கிடுவேன். அவ்வளவுதான்!'' -னுது.

அவன் பார்த்தான். வேறே வழி இல்லே... 'சரி'ன்னு ஒத்துக்கிட்டான்.

'சரி... வேலை குடு' -ன்னுது பூதம்.

'எனக்கு ஒரு பெரிய மாளிகை வேணும்' -ன்னான்.

அடுத்த வினாடி அவன் கண் முன்னாடி ஒரு பெரிய மாளிகை உருவாயிட்டுது.

'எனக்கு ஒரு பெரிய தோட்டம் வேணும்' -ன்னான்.

அதுவும் உருவாயிட்டுது.

'குதிரை வேணும்' -ன்னான் வந்துது. 'யானை வேணும்' -ன்னான். வந்துது.

அவன் குடுத்த எல்லா வேலையையும் அடுத்த வினாடியே செஞ்சி முடிச்சிது பூதம்.

இனிமே சொல்றதுக்கு ஒண்ணுமில்லே. இவன் பார்த்தான். நிபந்தனைப் பிரகாரம் பூதம் நெருங்கி வந்துது இவனை முழுங்கறதுக்கு. இவன் எடுத்தான் ஓட்டம்.

ஓடிப்போய் அந்த யோகியின் கால்லேயே போய் விழுந்தான் - 'சாமி என்னைக் காப்பாத்துங்க' -ன்னு.

யோகி பார்த்தார். அவனுக்கு அதுக்கு ஒரு வழியை சொல்லிக் குடுத்தார். 'சரி'ன்னு கேட்டுக்கிட்டு அவன் மாளிகைக்குப் போனான். பின்னாடியே வாயைத் திறந்துக்கிட்டுப் பூதமும் போய்க்கிட்டிருக்கு.

அங்கே ஒரு பெரிய இரும்புத்தூண் வேணும்ன்னு பூதத்துக்கிட்டே கேட்டான். உடனே தூண் வந்துது.

அதை நல்லா மெருகேற்றி வழவழப்பா ஆக்கச் சொன்னான்.

அதே மாதிரி ஆக்கிச்சி. இப்ப அந்தப் பூதத்துக்கிட்டே இவன் சொன்னான்: "இதோ பாரு... நீ என்ன செய்யணும்ன்னா... நான் நிறுத்தச் சொல்ற வரைக்கும் இந்தத் தூண்லே ஏறி இறங்கிக்கிட்டே இரு!" -ன்னான்.

பூதம் அப்படியே செய்ய ஆரம்பிச்சுட்டுது.

அதுக்கப்புறம் இவன் வேணும்ங்கறப்ப மட்டும் அந்தப் பூதத்தைக் கூப்பிட்டு வேலை வாங்கிக்குவான்.

இது ஒரு கதை. எதுக்கு இந்த கதைன்னா... மனிதனுடைய மனமும் சக்திவாய்ந்த அவனுடைய சிந்தனையும் இந்தப் பூதத்துக்கு இணையானது. சரியான வேலை கொடுக்கலேன்னா அது கெட்ட வழிகள்லே செல்ல அவனைத் தூண்டி விட்டுடும்... அதனாலே மனம்ங்கற பூதத்துக்கு வேலை இல்லாத போதெல்லாம் ஈஸ்வர தியானம்ங்கற தூணைப் பற்றிக் கொண்டே இருக்கணும் -ங்கறார் சுவாமி சின்மயானந்தா.

ஆனா நாமெல்லாம் ஏதோ ஒரு தூணைப் பற்றிக்கொண்டே இருக்கிறோம்.

ஒரு குடும்பஸ்தர் ரொம்ப பெருமையா சொன்னார்:

"நான் எப்பவும் சும்மா இருக்கமாட்டேன் சார். எந்த நேரமும் என் மனைவி முன்னாடி நின்று ஏதாவது பேசிக்கிட்டே தான் இருப்பேன்!" -னார்.

"நிறுத்தவே மாட்டீங்களா?" -ன்னேன்.

"மாட்டேன்!" -னார்.

"ஏன்?"னு கேட்டேன்.

"நான் நிறுத்தினா அவ பேச ஆரம்பிச்சுடுவாளே! அதனாலேதான்!" - அப்படின்னார்.



# 22. மருதுபாண்டியர்

சிவகங்கைக்குப் பக்கத்துலே ஏதோ ஒரு கிராமம்.

ஒருநாள் விடியற்காலை நேரம்.

ஒரு குதிரையிலே அவர் வந்துகிட்டிருக்கார்.

முதல் நாள் எதிரிகளோட போராடி அவர்கள் கையிலே சிக்காமே தப்பிச்சி வந்திருக்கார்.

யார் அவர்? மருதுபாண்டியர்.

ப்ரோபகார சிந்தை - சிவபக்தி - புலவர்களை ஆதரிக்கிற இயல்பு - குடிமக்களை தாய்போல காப்பாற்றக் கூடிய தகைமை.

இப்படியெல்லாம் இருந்தும் கடைசி காலத்துலே அவருக்கும் எதிரிகள். பலதடவை அவரை பிடிக்கறதுக்குப் பகைவர்கள் முயற்சி பண்ணினாங்க. முடியலே.

ஒரு சமயம் திருக்கோஷ்டியூர் பெருமாள் கோயிலுக்கு எதிரே உள்ள ஒரு மண்டபத்துலே இவர் தங்கியிருந்தார்.

அது எதிரிகளுக்குத் தெரிஞ்சி போச்சு. ஊர் எல்லைக்கு அவங்க வந்துட்டாங்க -ங்கற சேதி இவருக்கு எட்டிச்சு.

உடனே ஒரு குதிரைக் காரனை கூட அழைச்சிக்கிட்டுப் புறப்பட்டார். வலது கையிலே சிலந்தி உண்டாகி வேதனை குடுத்துது... அதுலே ஒரு கட்டுப் போட்டுக்கிட்டு புறப்பட்டுட்டார்.

அப்படிப் புறப்பட்டுத்தான் மறுநாள் காலையிலே அந்த கிராமத்துக்கு வந்து சேர்ந்தார்.

ஒரு கூரை வீடு... அதுக்கு முன்னாடி ஒரு வயசான அம்மா கோலம் போட்டுக்கிட்டிருந்தாங்க. அங்கே போய் குதிரை நின்னுது. அந்த அம்மா நிமிர்ந்து பார்த்தாங்க.

மருதுபாண்டியருடைய கம்பீரமான தோற்றம் அவங்க மனசுலே அன்பை உண்டாக்கிச்சு.

“யாரப்பா நீ... உனக்கு என்ன வேணும்?” -ன்னு கேட்டாங்க.

“அம்மா... எனக்கு பசியா இருக்கு... தாகமா இருக்கு... ஏதாவது இருந்தா குடுங்களேன்!” -னார்.

“ராத்திரி தண்ணியிலே போட்டு வச்சிருக்கிற பழைய சோறு இருக்கு... வா... போடறேன்” -னாங்க.

அதேமாதிரி அன்பா உபசரிச்சாங்க.

“அம்மா! ராத்திரி பூரா நான் தூங்கலே... இங்கே மறைவா ஒரு இடம் கிடைச்சா... குதிரையக் கட்டிப் போட்டுட்டு... தூங்கலாம்ன்னு பார்க்கறேன்!” -னார்.

“அதுதானா பெரிசு... வீட்டுக்குப் பின்னாடி ஒரு கொட்டகை இருக்கு... அங்கே குதிரையை கட்டிப் போட்டுட்டுப் படுத்துக்க... யாரும் தொந்தரவு பண்ணமாட்டாங்க... குதிரைக்கும் தீனி போட்டுடறேன்!” -னாங்க.

மருதுபாண்டியருக்கு ராஜபோஜனத்தை விட அந்தப் பழைய சோறும்... பண்பாடும் ரொம்பப் பெரிசா தெரிஞ்சிது.

அந்த அம்மா கொடுத்த ஓலைப் பாயை வாங்கிக்கிட்டு குடிசைக்குப் பின்பக்கம் போனார். குதிரையைக் கட்டினார். பாயை விரிச்சி படுத்துக்கிட்டார். பக்கத்துலேயே குதிரைக்காரனும் படுத்துக்கிட்டான்.

அசந்து தூங்கினாங்க.

கண் விழச்சப்போ சூரியன் உச்சியிலே இருந்தான்.

அந்தக் கூரை வீட்டுலே சாப்பிட்ட சாப்பாடும்... தூங்கின தூக்கமும் உடம்புலேயும் மனசுலேயும் ஒரு புது உற்சாகத்தைக் கொடுத்துது.

நன்றியுணர்வோட அந்த வயசான அம்மாவைப் பார்த்தார்.

அவங்க காட்டின அன்புக்கு இந்த உலகத்தையே கொடுத்தாலும் ஈடாகாது -ன்னு நினைச்சார்.

'அம்மா... உங்க வீட்டுலே ஒரு எழுத்தாணி இருந்தா கொண்டாங்களேன்' -னார்.

''என் பிள்ளைகள் ஒரு விசேஷத்துக்காக வெளியூர் போயிருக்காங்கப்பா... அதெல்லாம் எங்கே வச்சிருக்காங்கன்னு தெரியலையே!'' -ன்னாங்க.

'சரி... பரவாயில்லே!' -ன்னு குதிரைக் காரனைக் கூப்பிட்டார்.

''இந்த வீட்டுக் கூரையிலே இருந்து ஒரு பனை ஓலையும் பக்கத்து வேலியிலேயிருந்து ஒரு முள்ளையும் எடுத்துக்கிட்டு வா!'' -ன்னார். எடுத்துக்கிட்டு வந்தான்.

அந்த கிராமம் பூராவும் அந்த அம்மாவுக்கே சேர வேண்டியது -ன்னு எழுதி கையெழுத்துப் போட்டார்.

மூள்ளாலே எழுதிய அந்த தர்மசாசனத்தை அவங்ககிட்டே கொடுத்தார். "அம்மா! சிவகங்கை சமஸ்தான அதிகாரிகள் கிட்டே இதை நீங்க கொடுத்தா உங்களுக்கு ஏதாவது அனுகூலம் உண்டாகும்!" -ன்னு சொல்லிபுட்டு குதிரைமேலே ஏறி போயிட்டார்.

ஊர்லேயிருந்து பிள்ளைங்க வந்ததும்... இதை எடுத்துக்கிட்டுப் போய் சமஸ்தானத்துலே காட்டலாம்ன்னு அந்த அம்மா நினைச்சாங்க. ஆனா அதுக்குள்ளே பகைவர்கள் சமஸ்தானத்தைக் கைப்பற்றினதாக சேதி வந்துது.

மருதுபாண்டியரை... அதுக்கப்புறம் பகைவர்கள் பிடிச்சி சிறையிலே அடைச்சுட்டாங்க... ரொம்ப காலம் கழிச்சு அவருடைய கடைசி காலத்துலே... பகைவருடைய அதிகாரிகள் அவர்கிட்டே கேட்டாங்க: "உங்க கடைசி விருப்பம் என்ன சொல்லுங்க?" -ன்னு.

அப்ப அவர் என்ன சொன்னார் தெரியுமா?

"நான் யார் யாருக்கு எந்தெந்த கிராமத்தை எழுதிக் கொடுத்திருக்கேனோ அதெல்லாம் அவங்க அவங்களுக்குச் சொந்தமாகணும். அதுதான் என் பிரார்த்தனை. வேறே ஒண்ணும் இல்லே!" -ன்னார்.

இதைக் கேட்டதும் அவருடைய விரோதிகளே ஒரு மாதிரியா ஆயிட்டாங்க. அவருடைய நன்றியுணர்வுக்கு மரியாதை குடுத்து அவருடைய இறுதி ஆசையை நிறைவேத்தினாங்க.

மருதுபாண்டியர் கொடுத்த பொருள்கள்லாம் உரியவர்களுக்கு வழங்கப்படுதுன்னு கேள்விப்பட்டு இந்த அம்மா தன்கிட்டே இருந்த ஓலையை குடுத்தனுப்பிப் பார்த்தாங்க.

அந்தக் கிராமம் அவங்களுக்குக் கிடைச்சுது. அப்படிக் கிடைச்ச கிராமம்தான் பழஞ்சோற்றுக் குருநாதனேந்தல்.

தன் வீட்டுலே பழைய சோறு சாப்பிட்டது மருதுபாண்டியர் -ங்கற விஷயமே அந்தம்மாவுக்கு அதுக்கப்புறம்தான் தெரிய வந்துதாம். கையிலே கட்டுப் போட்டிருந்த நிலைமையிலேயும்... கூரையிலே இருந்து எடுத்த ஓலையிலே முள்ளாலே முகமலர்ச்சியோட அவர் எழுதின காட்சி ஞாபகத்துக்கு வந்துது.

அந்த அம்மா சாகற வரைக்கும் அதைச் சொல்லிச் சொல்லி ஆச்சரியப்படுவாங்களாம்.

அப்படி வழிவழியா வந்த செய்திதான் இன்றைய தகவல்.

இதை தமிழ் தாத்தா உ.வே.சா ஒரு கட்டுரையிலே எழுதியிருக்கார்.

இதுமாதிரி சமாச்சாரம்லாம் இன்னைக்கு தகவலாத்தான் நாம பேசிக்க முடியும். நேர்லே எங்கே பார்க்க முடியும்.

ஒரு ஆளு ராத்திரி நேரத்துலே வந்து... "ஐயா நான் வெளியூர்காரன். இன்னைக்கு ராத்திரி மட்டும் கொல்லைப்புறத்துலே உள்ள கொட்டகையிலே படுத்திருந்துட்டுக் காலையிலே போயிடறேன்!" -னான்.

'சரி'ன்னார் வீட்டுக்காரர். இவன் விடியறதுக் குள்ளே அங்கே கட்டியிருந்த குதிரையைத் திருடிக்கிட்டு அதுமேலே ஏறி தப்பிச்சிப் போயிட்டான்.

காலையிலே எழுந்திரிச்சிப் பார்த்தார் வீட்டுக்காரர்.

அதிர்ச்சி அடையணுமில்லே... அப்படி அடையலே!

"ஏன் சார் உங்க குதிரை காணாம போனது உங்களுக்கு வருத்தமா இல்லையா?" -ன்னு கேட்டாங்க.

"இல்லே!" -ன்னார்.

"ஏன்?" -னாங்க.

"காணாம போனது குதிரையா இருந்தாத்தானே சார் வருத்தப்படணும்... அது கழுதை சார். இருட்டுலே அடையாளம் தெரியாமே ஓட்டிக்கிட்டுப் போயிட்டான். நானே அதை யார் தலையிலே கட்டலாம்ன்னு பார்த்துக்கிட்டிருந்தேன்!" - அப்படிங்கறார்.

*(மருதுபாண்டியர் மீது தேசத் துரோகக் குற்றம் சாட்டிய பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் 1801 ஆம் ஆண்டு அக்டோபர் 24 ஆம் தேதி, இன்றைய பசும்பொன் மாவட்டம் திருப்பத்தூர் கோட்டையில் தூக்கிலிட்டது.)*



# 23. மூச்சுப் பயிற்சி

ஒருத்தர் 'வாழ்கிறார்' -ன்னு சொல்றதுக்கும் 'ஏதோ இருக்கார்' -ன்னு சொல்றதுக்கும் வித்தியாசம் இருக்குல்லே.

வாழறார் -ன்னா தன்னுடைய உலகியல் கடமைகளையெல்லாம் ஒழுங்கா செய்யறார் -ன்னு அர்த்தம்.

'ஏதோ இருக்கார்' -ன்னா 'மூச்சு விட்டுக்கிட்டு இருக்கார்' -ன்னு அர்த்தம்.

ஆனாலும் மூச்சு விடறதைப் பொறுத்துத்தான் வாழ்நாள் நிர்ணயிக்கப்படுது.

குறைவா மூச்சு விடறவங்க ரொம்ப நாளைக்கு இருக்காங்க. விரைவா மூச்சு விடறவங்க விரைவா போய் சேர்ந்துடறாங்க.

மனிதன் ஒரு நிமிடத்துக்கு 12 தடவை மூச்சு விடறான். அவனுடைய சராசரி வாழ்நாள் - 100 வருடம்.

குதிரை ஒரு நிமிடத்துக்கு 16 தடவை மூச்சு விடுதாம். 25 வருடத்துக்கு மேலே இருக்கறது இல்லையாம்.

இதுவே இப்படின்னா ஒரு நிமிடத்துக்கு 34 தடவை மூச்சு விடற புறாவோட நிலைமை எப்படியிருக்கும்ன்னு பார்த்துக்குங்க.

ஆமை - ஒரு நிமிடத்துக்கு 4 தடவை மூச்சு விடுது... அதோட வாழ்நாள் 500 ஆண்டுகள்.

தேரை - ஒரு நிமிடத்துக்கு 2 தடவை மூச்சு விடுது... அதோட வாழ்நாள் 2000 வருடம் -ங்கறாங்க.

நாம எல்லாம் மூச்சுப் பயிற்சி பண்ணினா நீண்டகாலம் நல்லபடியா வாழலாம்.

சித்தர்கள்லாம் இந்த மூச்சுப் பயிற்சியைப் பத்தி நிறைய சொல்லியிருக்காங்க.

தொடர்ந்து மூச்சுப் பயிற்சி பண்ணிக்கிட்டு வந்தா ரத்த அழுத்த நோய் வராதாம். ஆஸ்த்துமா (மூச்சிழுப்பிருமல் நோய்) வராது. ஞாபக சக்தி பெருகும். முகத்துலே களையும் ஒளியும் உண்டாகும்.

ரத்தம் சுத்தமாகும். நரை - திரை உண்டாகாது. மூளையும் நுரையீரலும் வலிவடையும்.

கள் குடிக்கறதுனாலே உண்டாகக் கூடிய களிப்பை இந்த மூச்சுப் பயிற்சியே தரும்ங்கறார் திருமூலர்.

(மூச்சுப் பழக்கம் அல்லது வளியுள்ளடக்கும் முறை இன்னதெனல்-)

"புள்ளினும் மிக்க புரவியை மேற்கொண்டால்
கள்ளுண்ண வேண்டா; தானே களிதரும்.
துள்ளி நடப்பிக்கும்; சோம்பு தவிர்ப்பிக்கும்;
உள்ளது சொன்னோம் உணர்வுடை யோர்க்கே."

— திருமந்திரம்

பறவையை விட வேகமுடைய குதிரையாகிய உயிர்வளி... அதை மேற்கொள்ளுதல் -ன்னா அதை அடக்கி நடத்துதல்...

சரி... இந்த மூச்சுப் பயிற்சியை நாம எப்படி செய்யலாம்?

மேல் நோக்கி அதாவது மல்லாந்து படுத்துக்க வேண்டியது...

மூச்சை மூக்கால் இழுத்து... கொஞ்ச நேரம் அடக்கி வச்சிருந்து பிறகு... முன்னாடி இழுத்தது மாதிரியே விட்டுடணும்.

இப்படி... படுத்துக்கொண்டு மூச்சுப்பை நிறையும்படியாக மூச்சுவிட்டுப் பழகியபின், நின்றுகொண்டோ, நடந்துகொண்டோ பழகலாம்.

கொஞ்சநாள்லே... நாம எங்கேயிருந்தாலும்... பிரயாணம் பண்ணிக்கிட்டிருந்தாலும்... நம்மை அறியாமல் நீண்ட மூச்சு இழுத்து விடக் கூடிய பழக்கம் ஏற்பட்டுடும்.

இது ரொம்ப சுலபமான ஒரு பயிற்சி...

பழக்கத்துக்குக் கொண்டுகிட்டு வந்துட்டா ரொம்ப நல்லது.

காலையிலே எழுந்திரிச்சவுடனே வாயைக் கொப்பளிச்சிக்கிட்டு, வெறும் வயிற்றுலே, மூன்று குவளை நிறையக் காய்ச்சி ஆறின நீர்... குடிக்க வேண்டியது.

அதுக்கப்புறம் 20 நிமிடத்துக்குக் குறையாமல் மூச்சுப் பயிற்சி செய்யலாம்ன்னு அனுபவப் பட்டவங்க சொல்றாங்க.

காலையிலே சந்தர்ப்பம் இல்லேன்னா சிற்றுண்டி சாப்பிட்டு இரண்டு மணி நேரம் கழிச்சு அல்லது சாப்பாடு சாப்பிட்டு மூணு மணி நேரம் கழிச்சு மூச்சுப் பயிற்சி பண்ணலாமாம்.

இப்ப... இதுவரைக்கும் சொன்னது சாதாரணமான சுலபமான மூச்சுப் பயிற்சி.

இதைத் தவிர பிரணாயாமம் போன்ற சில சிறப்பான பயிற்சிகள்லாம் உண்டு.

அதையும் கத்துக்கிட்டு செய்யலாம்.

மனசுவச்சு இதையெல்லாம் நாம செய்ய ஆரம்பிச்சுட்டா... மருந்து செலவு இருக்காது.

ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டிய அவசியம்லாம் வராது...

ஒரு ஆள் -

"அவசரமா ஆஸ்பத்திரிக்குப் போகணும்... அதுக்கு என்ன வழி?" -ன்னான்.

"வேகமா நடந்துபோ... இந்தத் தெரு கடைசியிலேதான் ஆஸ்பத்திரி...!" -ன்னாங்க.

"அதைவிட சீக்கிரமா போகணும்!" -ன்னான்.

"அப்படின்னா சைக்கிள்லே போகலாம்!" -ன்னாங்க.

"அதைவிட வேகமா போகணும்!" - ன்னான்.

"அப்படின்னா கார்லே போகலாம்!" -ன்னாங்க.

"அதைவிட வேகமா போகணும்!" -ன்னான்.

"அப்படின்னா... அதோ எதிர்லே நிக்குதே ஒரு வெறிநாய்... அதை கல்லாலே அடி.... துரத்த ஆரம்பிக்கும்... நீ சீக்கிரம் போய் சேர்ந்துடலாம்!" - அப்படின்னாங்க!



# 24. வாழ்வது எதற்காக?

ஒருத்தர் ஒரு ஆபீஸ்லே வேலை பார்க்கிறார். ஆபீஸ் முடிஞ்சு சாயந்தரம் வீட்டுக்குப் போகும்போது பார்த்தீங்கன்னா... ஒரு பெரிய பையைத் தூக்க முடியாமே தூக்கிக்கிட்டுப் போவார்.

எல்லாம் ஆபீஸ் ஃபைல்கள்... பதிவேடுகள். வீட்டுக்குப் போயும் ஆபீஸ் வேலைகளைப் பார்க்கறதுக்காக அவர் அப்படிச் சுமந்துகிட்டுப் போறார்.

'கடமையிலேயே கண்ணுங்கருத்துமா இருக்கறவர்' அப்படின்னு அவருக்குப் பேரு.

பலபேர் இப்படி உண்டு.

அலுவலகத்தை வீட்டுக்குச் சுமந்து கொண்டு போகிறவர்கள்.

இப்படிப்பட்டவர்கள் வாழ்க்கை ஒரு திருவிழா என்பது தெரியாமலே வாழ்ந்து முடிச்சுடறாங்க. வாழ்க்கைங்கறது கடமைகளை நிறைவேற்றுவதற்காக அமைஞ்ச ஒண்ணா... அல்லது அது ஒரு கொண்டாட்டமா -ங்கறதை முதல்லே புரிஞ்சிக்கணும் -ங்கறார் ஓஷோ.

வாழ்க்கை கொண்டாடுவதற்காக அமைந்த ஒன்று.

இப்படி நினைக்கிறவங்க வேலை செய்யறதையே விட்டுடுவாங்க -ன்னு அர்த்தமில்லே...!

அவங்க நிச்சயமா வேலைகளைச் செய்வாங்க. ஆனா அதுவும் அவங்க கொண்டாட்டத்தின் ஒரு பகுதியா அமைஞ்சுடும். விழாவின் அம்சம் அதிலே கலந்திருக்கும்.

வேலையிலேயே மூழ்கிப் போறவங்களுக்கு வாழ்க்கையே வேலையா ஆயிடும்...

பலபேர் அப்படித்தான்.

வாழ்வையே ஒரு தொழிற்சாலையா மாத்திக்கிட்டு கவலைப்படறாங்க.

வாழறதுக்காகத்தான் வேலை செய்யறோம். ஆனா வேலையே வாழ்க்கையாகிப் போயிடுது.

ஆடிப்பாடி மகிழ நேரமில்லாமலே அந்திம காலம் வந்து சேர்ந்துடுது.

எல்லாரும் கொஞ்சம் நல்லா யோசிச்சுப் பாருங்க. மனிதனைத் தவிர... மற்ற எல்லாத்துக்கும் இந்த வாழ்க்கைங்கறது ஒரு விளையாட்டுத்தான் - திருவிழா தான்.

இவன்தான் வேலை செய்யறான்... கடினமா உழைக்கிறான். ஏராளமா கண்ணீர் சிந்தறான்....

நமக்கு நாமே குழப்பத்தையும் - சிக்கலையும் உண்டாக்கிக் கொள்கிறோம்... அதுலே சிக்கிக்கிறோம்... அப்புறம் காலம் முழுவதும் ஓய்வு கிடைக்காதா, நிம்மதியா வாழ்க்கையை அனுபவிக்க முடியாதான்னு ஓடிக்கிட்டே இருக்கிறோம்.

அந்த நாள் வர்றதே இல்லை.

தொழில் போதையிலே மூழ்கிக் கிடக்கற வங்களுக்கு ஓய்வு, மகிழ்ச்சி, வாழ்க்கையின் இன்பம் எதுவுமே தெரியறதில்லை.

பழங்குடி மக்களைப் பாருங்கள்.

தொழிலுக்கும் கொண்டாட்டத்துக்கும் என்ன உறவுங்கறது புரியும்.

நாள் பூரா அவங்க உழைக்கறது இரவில் ஆனந்தமா ஆடிப்பாடி மகிழத்தான்.

ஆனால் நாகரிக மனிதன் என்ன செய்யிறான்?

பகல்லே மட்டுமில்லே, ராத்திரியிலேயும் உழைக்கிறான்.

இரவு பகலா உழைக்கிறேன் சார் - அப்படின்னு பெருமையாவும் சொல்லிக்கிறான்.

இன்றைய உலகத்துலே ஆனந்தம் இருக்க வேண்டிய இடத்தையெல்லாம் பொழுது போக்கு ஆக்கிரமிச்சுக்கிட்டிருக்கு.

ஆனந்தம்ங்கறது வேறே... பொழுது போக்குங்கறது வேறே...

கொண்டாட்டத்துலே நீங்களும் பங்கு கொள்ளலாம், கலந்துக்கலாம்.

பொழுது போக்குலே நீங்க வெறும் பார்வையாளர்தான். ஆட்டத்தைப் பார்க்கறது பொழுது போக்கு.

நீங்களே ஆடறது ஆனந்தம்... கொண்டாட்டம். வாழ்வையே ஒரு வேலையா ஆக்கிக்கறவங்க இந்த உலகத்தையே ஒரு பைத்தியக்கார விடுதியா ஆக்கிப்புடறாங்க.

எதையோ நோக்கி எங்கேயோ ஓடும் பைத்தியக்காரர்களாகத்தான் அவங்க காட்சி அளிக்கிறாங்க. எங்கே ஓடறோம்ங்கறது யாருக்கும் தெரியாது.

ஒருத்தன் வாடகைக் கார்லே ஏறி உட்கார்ந்து 'போ வேகமா' -ன்னான். கார் பறந்துது... கொஞ்ச நேரம் கழிச்சி... காரை ஓட்டினவர் மெதுவா திரும்பி "எங்கேங்க போகணும்?" -ன்னு கேட்டார்.

அதுக்கு இந்த ஆளு...

"எங்கே போகணும்ங்கறது முக்கியமில்லை... நான் வேகமாப் போகணும்ங்கறதுதான் முக்கியம்!" -ன்னானாம்.

இது மாதிரிதான் வாழ்க்கையிலே எல்லாரும் பறந்துகிட்டிருக்காங்க.

ஒரு ரயில்வே ஸ்டேஷன். பிளாட் பாரத்துலே ஒருத்தன் அவசரமா எதையோ தேடிக்கிட்டிருந்தான்.

"என்னத்தைத் தேடறீங்க?" -ன்னார் ஒருத்தர்.

"என் டிக்கெட்டைத் தவறவிட்டுட்டேன் சார்!" -ன்னு சொல்லிபுட்டு... மறுபடியும் குனிஞ்சி தேடினார். இதுக்குள்ளே ரயில் வந்துட்டுது.

"பரவாயில்லே... வாங்க... வேறே டிக்கெட் வாங்கிக்கலாம்!" -ன்னார் அவர்.

"அது ஒண்ணும் கஷ்டமில்லே சார்... வேறே டிக்கெட் வாங்கிக்கலாம்... ஆனா அந்த பழைய டிக்கெட் கிடைச்சாத்தானே நான் எந்த ஊருக்குப் போகணும் -ங்கறது தெரியும்!" - அப்படின்னான் இவன்.



# 25. நாலு வழிகள்!

ஒரு ராஜான்னு இருந்தா... அவரு இன்னொரு ராஜாகிட்டே சண்டை போடறதுக்கான சந்தர்ப்பம் வரத்தான் செய்யும்.

தன்னுடைய நாட்டுக்குத் தொந்தரவு ஏற்படும் போது தற்காப்புக்காக - தேசத்தைக் காப்பாத்தறதுக்காக சண்டை போட வேண்டிவரும்.

அடுத்த நாட்டுலே அதர்மம் அதிகமா இருந்தா அங்கே தர்மத்தை நிலை நாட்டறதுக்காக சண்டைக்குப் போறவங்களும் உண்டு. அந்தக் காலத்துலே... தன்னுடைய நாட்டின் எல்லையை விரிவுபடுத் தறதுக்காக - அதாவது ராஜ்ய விஸ்தரிப்புக்காகவே சண்டைக்குப் போறவங்களும் உண்டு.

அப்படி - அதுக்காக யுத்தம் ஆரம்பிக்கணும்ன்னா கூட நேரடியா போர்லே இறங்கறதில்லை. படிப்படியா நாலு வழியைத் தாண்டணும்... நாலாவது வழிதான் போர்.

முதல் மூணு வழியைக் கடைப்பிடிச்சுப் பார்க்கணும்... அது மூணும் சரியா வரலேன்னாதான் நாலாவது வழியைக் கடைப்பிடிக்கணுமாம்.

அர்த்த சாஸ்திரமும் தர்ம சாஸ்திரமும் இதை "உபாய சதுஷ்டயம்" -அப்படின்னு சொல்லுது. அதாவது நாலு வழிகள்.

ஸாம - தான - பேத - தண்டம் -ன்னு சொல்றோம்லே... அதுதான் இந்த நாலு வழிகள்.

ஸாமம். தானம். பேதம். தண்டம்.

ஒரு ராஜா இன்னொரு ராஜாகிட்டே படையெடுக்கணும்ன்னு முடிவு பண்ணிட்டா... முதல்லே கடைபிடிக்க வேண்டிய வழி 'ஸாமம்'.

முதல்லே அந்த ராஜாகிட்டே அன்போட பழகி... அவனை அடங்கிவரச் செய்ய முடியுமான்னு பார்க்கணும். வேண்டியவர்களைக் கொண்டு அவனுக்கு நல்ல வார்த்தைகளை சொல்லச் செய்யணும்.

மனசுலே அமைதியோட அதுக்கான முயற்சியிலே ஈடுபடணும்... அதுதான் 'ஸாமம்'!

ரெண்டாவது வழி என்னன்னா....

தானம்!

அதாவது... நாமதான் ராஜா... இன்னொரு ராஜாகிட்டே போர் செய்யப் போறோம்ன்னு வச்சிக்குங்களேன்.

நமக்குப் பிரியமான பொருளை அவனுக்குக் கொடுத்து "என்னுடைய ராஜ்யத்தோட சேர்ந்துடறியா?" -ன்னு கேக்கணும். அவன் படையெடுத்துக்கிட்டு வந்தா இப்படி எதையாவது கொடுத்து அவனைத் திரும்பிப் போக வைக்கறது.

ராஜ்யத்துலே ஒரு சின்ன பகுதியை சண்டை இல்லாமலே கொடுத்துடறது. அல்லது தனதான் யங்களை கொடுக்கறது. இல்லேன்னா ராஜகுமாரியையே எதிராளி ராஜாவுக்கோ, ராஜகுமாரனுக்கோ கல்யாணம் பண்ணி கொடுத்து (கன்யாதானம்) அவன் கூட சண்டை இல்லாமலே சுமுக உறவை ஏற்படுத்திக்கறது. இதெல்லாம் தானோபாயம்.

ஸாமம் -ங்கறது அன்பினாலே மனசை மாத்தறது...

தானம் -ங்கறது பொருள் கொடுத்து மனசை மாத்தறது...

அதனாலே அதைவிட இது கொஞ்சம் மட்டம்தான்.

மூணாவதா வர்ற 'பேதம்' இருக்கே... அது இதைவிட இன்னும் கொஞ்சம் மட்டம்.

பேதத்தை ஒரு உபாயமா கையாளறது - பேதோபாயம்.

இந்த உபாயத்தை வாழ்க்கை விஷயங்கள்லே பின்பற்றப்புடாது. பேதமும் - தண்டமும் ராஜாங்கத்துக்கு அனுமதிக்கப்பட்டிருக்கிற உபா யங்கள்.

Divide and rule -ன்னு சொல்றாங்கள்லே... பிரித்தாளுவது! அதுதான் பேதாபாயம்.

எதிரி முகாம்லே பிளவை ஏற்படுத்தி... அதனாலே அவனுக்கு ஆதரவு குறையற மாதிரி செய்யறது. அவனுடைய பலத்தைக் குறைச்சு... இப்ப எனக்கு அடங்கறியா? -ன்னு கேட்டு கப்பம் கட்டவைக்கிறது.

இதுலே கூட ஒரு தார்மிகக் கட்டுப்பாடு வச்சிருக்காங்க பாருங்க. அதாவது எதிரிக்கு பலம் குறைஞ்ச நிலையிலேயும் - அவனா பணிஞ்சுவர்றானா -ன்னு பார்த்துட்டு அதுக்கும் வரலேன்னா தான் யுத்தம்.

சாம - தான - பேத - தண்டத்துலே நாலாவதா வருதே தண்டம் - அதுதான் யுத்தம்.

கொஞ்சம் யோசிச்சுப் பார்த்தா இப்பவும் கூட உள்நாட்டு விவகாரங்கள்லே இந்த நாலு வழியையும் பயன்படுத்தறோம்.

மக்களுக்கு நல்ல விஷயங்களை எடுத்துச் சொல்றது ஸாமம். அவங்களுக்கு சலுகைகள் காட்டறது தானம்.

குற்றவாளிகள்லே ஒருத்தனையே அப்ருவரா ஆக்கிக்கிட்டு குற்றத்தை நிரூபணம் செய்யறது பேதம்.

கடைசியா குற்றவாளிக்குக் கொடுக்கற தண்டனைதான் தண்டம்.

இப்படி ஸாம - தான - பேத - தண்டம் -ங்கறதுக்கான சாஸ்திர விளக்கம் கொடுத்திருக்கிறார் ஒரு பெரியவர்.

அந்தக் காலத்து ராஜாக்கள் படை எடுக்கணும் ன்னா கூட எப்படி ஒரு வழிமுறையை வகுத்திருக்காங்க பாருங்க. அதுலேயும் சில வித்தியாசமான ராஜாக்கள் உண்டு.

ஒரு ராஜா... அப்படித்தான் ஒருநாள் சாவகாசமா அரண்மனையிலே உட்கார்ந்திருந்தார். படைத்தளபதி அவசரமா ஓடிவர்றார்...

"அரசே... பக்கத்து தேசத்து மன்னன் படையெடுத்து வந்துக்கிட்டிருக்கான்... என்ன செய்யலாம் சொல்லுங்க!" -ன்னு கேக்கறார்.

ராஜா கொஞ்சம் நிதானமா யோசனை பண்ணிப் பார்த்துட்டு, "உடனே என்னை எங்கேயாவது பாதுகாப்பான இடத்துக்குக் கொண்டுகிட்டுப் போங்க!" - அப்படின்னார்.



# 26. இறைநேசச் செல்வர்கள்!

இந்த உலகத்துலே எவ்வளவோ இறைநேசச் செல்வர்கள்லாம் இருந்திருக்காங்க.

இளம் வயசுலே அவங்கள்லாம் எப்படி இருந்திருக்காங்க -ன்னு பார்க்கறப்போ நமக்கெல்லாம் ரொம்ப ஆச்சரியமா இருக்கு.

ஒரு பள்ளிக்கூடம். வகுப்பு நடந்துகிட்டிருக்கு. ஆசிரியர் மாணவர்களுக்கு இலக்கணப் பாடம் நடத்திக்கிட்டிருக்கார்.

“ஆமீர், ஜைதை அடித்தான்” - அப்படிங்கறார்.

இதைக் கேட்டதும் ஒரு மாணவர் திடீர்ன்னு எழுந்திரிக்கிறார்: “ஏன் சார்? உண்மையிலேயே ஆமிர், ஜைதை அடிச்சானா?” - அப்படின்னு கேக்கிறார்.

“இல்லேப்பா... நிஜமா அடிக்கலே... ஒரு உதாரணத்துக்காக இப்படி சொன்னேன்... இலக்கணப் பாடத்தை உங்களுக்கு விளங்க வைக்கிறதுக்காக இந்த உதாரணம்!” - அப்படின்னார் அந்த ஆசிரியர்.

அவ்வளவுதான். உடனே அந்த மாணவர் என்ன சொன்னார் தெரியுமா?

“ஒரு பொய்யோட ஆரம்பமாகிற இந்தப் படிப்பு எனக்கு வேண்டவே வேண்டாம்!” -ன்னு சொல்லிபுட்டு வெளியே வந்துட்டார்.

பாருங்க சார்... ஒரு உதாரணத்துக்காக பொய் சொன்னதைக் கூட அந்த இளைஞராலே பொறுத்துக்க முடியலே. உண்மை பேர்லே அவ்வளவு மதிப்பு வச்சிருந்த அந்த இளைஞர் பிற்காலத்துலே ஒரு பெரிய மகானா மாறினார். இறை நேசச் செல்வரா ஆனார். அவர்தான்... அபூபக்கர் ஷிப்லீ (ரஹ்).

இன்னொரு பள்ளிக்கூடம். அங்கேயும் வகுப்பு நடந்துகிட்டிருக்கு. ஆசிரியர் பாடம் நடத்திக்கிட்டு இருக்கார். பையன்கள்லாம் ஆசிரியர் நடத்தற பாடத்தைக் கேட்டுக்கிட்டிருக்காங்க. அந்த சமயத்துலே திடீர்ன்னு தெருப்பக்கம் ஏதோ சத்தம் கேக்குது. ஒரே கூச்சல். வரவர அந்தக் கூச்சல் அதிகமாகுது. என்ன விஷயம்ன்னு தெரியலே.

ஆசிரியர் பார்க்கிறார். ஒரு பையனைக் கூப்பிடறார்.

“வெளியிலே அது என்ன சத்தம்...? நீ போய் பார்த்துட்டு வா!” -ன்னு அனுப்பி வைக்கிறார். அந்தப் பையன் ஓடிப் போய் பார்த்துட்டு வந்ததுக்கப்புறம் தான் விஷயம் தெரியுது.

அதாவது....

அந்த வீதியிலே யானை ஒண்ணு வந்துக் கிட்டிருக்கு... அதை வேடிக்கை பார்க்கறவங்க போடற சத்தம்தான் அது.

தெருவுலே யானை வருதுன்னு கேள்விப்பட்ட உடனே வகுப்புலே உட்கார்ந்திருந்த மாணவர்கள் முகத்துலேயெல்லாம் ஓர் ஆர்வம்... அதைப் பார்க்கணும்ன்னு ஆசைப்படறாங்க.

யானைங்கறது புதுசு இல்லே... ஏற்கனவே எல்லாரும் பார்த்த ஒரு மிருகம்தான். இருந்தாலும்

அதை மறுபடியும் பார்க்கணும்ன்னு ஆசைப்படறது மனுஷ இயல்பு.

அதுவுமில்லாமே அங்கேயிருந்த மாணவர்கள்லே பலபேரு யானையை இதுவரைக்கும் பார்த்ததில்லே போல இருக்கு.

ஆசிரியர் பார்த்தார். இறைவனுடைய படைப்புகள்லே இது பெரிய படைப்பு... இறைவனுடைய அற்புதங்களை இந்த இளம் மாணவர்கள் பார்க்கறதுலே என்ன தப்பு? -ன்னு நினைச்சார்.

"சரி... வேணும்ன்னா எல்லாரும் போய் அந்த யானையைப் பார்த்துட்டு வாங்க!" -ன்னு அனுமதி குடுக்கிறார்.

எப்ப இப்படி சொல்வார்ன்னு எதிர்பார்த்துக் கிட்டிருந்த அந்த மாணவர்கள் உடனே எழுந்திரிச்சி ஓடினாங்க.

எல்லாரும் வெளியிலே ஓடிப்போயாச்சு.

ஆனா பாருங்க...

ஒரே ஒரு மாணவர் மட்டும் அவரு உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு அசையலே. அப்படியே உட்கார்ந்திருக்கார். ஆசிரியர் இதைப் பார்த்தார். அவருக்கு ரொம்ப ஆச்சரியம் - இப்படியும் ஒரு மாணவரா? - அப்படின்னு.

உடனே அந்த மாணவரைப் பார்த்துக் கேட்கிறார்.

"ஏம்ப்பா... யானையைப் பார்க்கறதுக்கு நீ போகலையா?" - அப்படின்னு!

அதுக்கு அந்த மாணவர் அமைதியா பதில் சொல்றார்: "ஐயா... நான் வந்து... யானையைப்

பார்க்கறதுக்காக பள்ளிக்கூடம் வரலை!" -அப்படிங்கறார்.

இப்படிச் சொன்ன அந்த மாணவர்தான் பிற்காலத்துலே யஹ்யா இப்னு யஹ்யா அப்படிங்கற பெரியவரா ஆனார்.

இறைநேசச் செல்வர்கள்லாம் இளம் வயசுலே எப்படி இருந்திருக்காங்க பார்த்தீங்களா?

இந்தக் காலத்துலேயெல்லாம் பிள்ளைங்க அப்படியா இருக்கு?

ஒரு பையன் அவங்க அப்பாகிட்டே வந்து...

"அப்பா... நீங்க ரொம்ப அதிர்ஷ்டசாலி!" -ன்னான்.

"ஏண்டா... அப்படி சொல்றே?" -ன்னார் அப்பா!

"நீங்க... இந்த வருஷம் எனக்காகப் புதுப் புத்தகங்கள் வாங்க வேண்டியதில்லை. இந்த வருஷமும் நான் அதே வகுப்புலே தான் இருக்கப் போறேன்!" - அப்படிங்கறான்.



# 27. எதிர்மறை மனோபாவம்!

"கல்யாணத்துக்குப் போயிருந்தீயே... எப்படி இருந்துது?" -ன்னு கேட்டார் ஒருத்தர்.

"எப்படி இருந்துது.... ரசத்துலே உப்பு குறைச்சல்!" -ன்னார் அவர்.

இது ஒரு மனுஷ சுபாவம்.

Nagative விஷயங்களை பார்க்கறது - பேசறதுலேதான் மனுஷனுக்கு ஆர்வம் அதிகம்.

ரசத்துலே உப்பு குறைச்சல்ங்கறது ஒரு குறைதான். ஆனா சாம்பார்லே அது சரியா இருந்துது... காய்கறியிலே அது சரியா இருந்துது... அதையெல்லாம் சொல்ல மனசு வரலே பாருங்க.

ஒரு பெரிய வெள்ளைப் பேப்பர் நடுவுலே ஒரு சின்ன கருப்புப் புள்ளியை வச்சி அதை ஒருத்தர்கிட்டே நீட்டி அது என்னன்னு கேட்டா -

கருப்புப் புள்ளி -ன்னு தான் சொல்லுவார்.

ஒரு சின்ன கருப்புப் புள்ளியைத்தான் அவர் கவனிக்கிறார். புள்ளியைச் சுத்தி பேப்பர் பூராவும் வெள்ளைப் பகுதியா இருக்கு... அதை கவனிக்கிறதில்லே.

ஒரு கண்ணாடி முன்னாலே போய் நிக்கிறோம். முகத்தைப் பார்க்கறோம். கொஞ்சம் யோசிச்சிப் பாருங்க... முகத்துலே நமக்குப் பிடிக்காத பகுதியைத்தான் முதல்லே கவனிப்போம். ஒரு பரு

இருந்தா அதைப் பார்ப்போம். ஒரு கரும்புள்ளி இருந்தா அதை கவனிப்போம். ஒரு சின்ன காயம் இருந்தா அதை கூர்ந்து பார்ப்போம். அதைச் சுத்தியிருக்கிற அழகான பகுதிகள்லாம் அதுக்கு அப்புறம்தான்.

ஒண்ணும் வேணாம்.

காலையிலே ஒரு செய்தித்தாளை வாங்கி புரட்டறோம்.

எதிர்மறையான செய்திகளைத்தான் முதல்லே பார்ப்போம். ஆக்கப்பூர்வமான செய்திகள் அதுக்கு அப்புறம்தான். Negative விஷயங்கள்தான் பத்திரிகை விற்பனைக்கு முக்கியம்.

ஒரு கும்பல்லே கலவரம்.

பேப்பர்லே செய்தி எப்படி வருது?

கலவரத்தில் 10 பேர் உயிரிழந்தார்கள் -ன்னுதான் வரும். கலவரத்தில் 918 பேர் உயிரோட திரும்பிப் போனார்கள் -ன்னு வராது.

எத்தனை பேர் செத்தாங்க -ங்கறதுதான் பத்திரிக்கைக்கு முக்கியம்.

ஏன்னா மனுஷ மனம் அதைத்தான் கவனிக்குது.

பாதகமான செய்திகளே பத்திரிகைகள்லே அதிகம் வருது. எதிர்மறையான விஷயங்களுக்கே அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுது.

இதனாலே என்ன ஆகுது தெரியுமா?

இந்த உலகத்துலே எங்கே பார்த்தாலும் கொலையும் - கொள்ளையும் விபத்தும் -

உயிரிழப்பும் தான் நடந்துக்கிட்டிருக்கற மாதிரி ஒரு பிரமை.

உலகத்து மகிழ்ச்சிகளையெல்லாம் - வாழ்வின் சந்தோஷங்களையெல்லாம் நாம மறந்துடறோம்.

இன்று விமான விபத்தில் 214 பேர் உயிரிழந்தார்கள் -ங்கறது Negative விஷயம்.

இன்று விமானம் மூலமாக 2 லட்சம் பேர் சௌக்கியமாக சந்தோஷமாக பயணம் செய்தார்கள் -ங்கறது Positive விஷயம்.

செத்ததுதான் செய்தியா வரும்.

சௌக்கியமா போனவங்களைப் பத்தி வெளியே தெரியாது.

வாழ்க்கையின் சாதகமான விஷயங்கள்லே கவனம் செலுத்தக் கத்துக்கணும்.

இந்த உலகத்துலே சந்தோஷப் படறதுக்கு நிறைய விஷயங்கள் இருக்கு சார்.

அதையெல்லாம் கவனிச்சிப் பார்க்க கத்துக் கணும்.

ஒருநாள் பூரா நல்லா நடந்துக்கிட்டிருப்பீங்க... ஏதோ ஒரு நேரத்துலே வாழைப்பழத் தோல்லே வழுக்கி விழுந்திருப்பீங்க. வழுக்கி விழுந்ததைத்தான் பெரிசுபடுத்திக் கிட்டிருப்பீங்க.

நாள் பூரா நல்லா நடந்தது பெரிசா தெரியாது. நம்ம பலம் என்னங்கறதுலே அதிக கவனம் தேவை.'

தோல்வி மனப்பான்மை - Negative attitudes.

தாழ்வு மனப்பான்மை - Negative self image. எதிர்மறையாவே நினைக்கிறது. பேசறது இந்த குணத்தை மாத்திக்காதவன் எந்தக் காலத்துலேயும் முன்னேற முடியாது - வெற்றிகரமான மனுஷன் ஆக முடியாது. அதனாலே இந்த நிமிஷத்துலே இருந்து Negative விஷயங்கள்லே இருந்து உங்க கவனத்தைத் திருப்புங்க. Positive விஷயங்கள்லே கவனத்தைச் செலுத்துங்க. வெற்றி நிச்சயம்.

ஒரே விஷயத்தைக்கூட சிலபேர் Positve-ஆ எடுத்துக்குவாங்க... சிலபேர் Negative-ஆ எடுத்துக்குவாங்க.

ஒரு சத்திரத்துலே ரெண்டு சாமியார்கள் சந்திச்சுகிட்டாங்க. அவங்க கதையை பேசிக்கிட்டாங்க.

"எனக்கு சம்சாரம் இல்லே... அதனாலே நான் சாமியாரா ஆயிட்டேன்!" -னார் ஒருத்தர்.

"எனக்கு சம்சாரம் இருக்கா... அதனாலே நான் சாமியாராயிட்டேன்!" அப்படின்னார் இன்னொருத்தர்.



# 28. இசைமேதை எஸ்.ஜி. கிட்டப்பா

1933 ஆம் வருஷத்துலே ஒருநாள்... மதுரைக்குப் பக்கத்துலே இருக்கிற திருமங்கலம். அந்த ஊர்லே ஒரு நாடகம் நடந்துகிட்டிருக்கு!

நந்தனார் நாடகம்.

வழக்கமா நந்தனார் வேஷம் போடறவருக்கு உடம்பு சரியில்லே. இருந்தாலும் அவருக்காக ஏராளமான ரசிகர்கள் வந்து உக்கார்ந்திருக்காங்க. நந்தனார் வேஷம் போட்டுக்க வேண்டிய அந்த மாபெரும் கலைஞர் வேதியர் வேஷம் போட்டுக்கறார்.

அவராலே நிக்கக் கூட முடியலே...

ஒரு சோபாவுலே உக்கார்ந்துகிட்டு, அவருக்குப் பணிவிடை செய்யறதுக்காக மனைவின்னு ஒரு பாத்திரத்தை உருவாக்கி, அந்த அம்மா கையிலே ஒரு விசிறி மட்டையை குடுத்து, விசிறிகிட்டே இருக்கறது மாதிரி ஏற்பாடு பண்ணிக்கிட்டார்.

வேதியரா நடிச்சி ஒருவழியா நாடகத்தை நடத்தி முடிச்சார்.

இருந்தாலும் ஜனங்களுக்கு, நந்தனார் பாடலை அவரு பாடி - அதை காதாலே கேக்கணும்; அப்படி கேக்கலேன்னா ஒரு திருப்தி இருக்காது.

அதனாலே 'நந்தனார் பாடலை நீங்க பாடணும்'ன்னு கேட்டுகிட்டாங்க. அவரும் ஜனங்களோட உணர்வை புரிஞ்சிக்கிட்டு, வேதியர் வேஷத்துலே இருந்துக்கிட்டே நந்தனார் பாடலை பாடினார்.

அதுதான் அவருக்கு கடைசி நாடக மேடைங்கறதும் அதுக்கப்புறம் கொஞ்ச நாள்லேயே இந்த உலகத்தைவிட்டே போகப் போறார்ங்கறதும் அப்ப அவருக்குத் தெரிஞ்சிருக்க நியாயமில்லை.

இருந்தாலும் அப்ப அவர் பாடின பாட்டு என்ன தெரியுமா?

'நாளைப் போகாமல் நான் இருப்பேனோ?' -ங்கற பாட்டுதான்.

இப்ப தெரியிதா, அந்த கலைஞர் யாருன்னு?

இசைமேதை எஸ்.ஜி. கிட்டப்பாதான்!

செங்கோட்டையிலே பிறந்தவர். தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள் கிட்டே நாடகப் பயிற்சி பெற்றவர்.

அந்த காலத்துல நாடக உலகத்துலே இவரு ரொம்பப் பிரபலம்.

1933 ஆம் வருஷம் கார்த்திகை மாசம் 13 ஆம் தேதி அவர் இறந்து போனார்.

திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளை இவருக்கு ரொம்ப நெருக்கமான நண்பர்.

ஒரு தடவை தஞ்சாவூர்லே எஸ்.ஜி. கிட்டப்பாவோட நாடகம் நடந்துகிட்டிருக்கு.

அந்தப் பக்கத்துலே இருந்த முக்கியமான இசைக் கலைஞர்கள்லாம் வந்து முதல் வரிசையிலே உக்கார்ந்திருக்காங்க.

திருவாடுதுறை ராஜரத்தினம் பிள்ளையும் உக்கார்ந்திருக்கார். முக்கியமான இசைமேதைகள்லாம் முன்வரிசையிலே வந்து உக்கார்ந்திருக்கறதை

கிட்டப்பா பார்த்தார். அவருக்கு ரொம்ப உற்சாகமா இருந்துது. ரொம்ப கம்பீரமா பாட ஆரம்பிச்சார்.

"கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த குளிர்தருவே...!" -ன்னு ஆரம்பிச்சி பாடிகிட்டிருக்கார். அந்தப் பாட்டுலே வெவ்வேறு ராகம் வரும். ராகமாலிகை. அதுலே காபிராகம் ஒரு இடத்துலே வரும். அதுவரைக்கும் பாடிக்கிட்டு இருந்தார். அந்த சமயத்துலே நாடகமேடை விளக்கு அணைஞ்சு மறுபடியும் எரிஞ்சிது.

முதல் வரிசையிலே உக்கார்ந்திருந்த இசை மேதைகளைப் பார்த்தார். அவங்க உக்கார்ந்திருந்த இடம்லாம் காலியா இருந்துது. அவங்களைக் காணலே!

இதைப் பார்த்தவுடனே உற்சாகமா பாடிக் கிட்டிருந்த கிட்டப்பாவுக்கு மனசு சங்கடமா போச்சு! நாம பாடுற பாட்டு தரம் குறைஞ்சுட்டுதோன்னு நினைச்சார். ரொம்பவும் மனம் கலங்கிப் போய் நாடகப் படுதாவை விடச் சொல்லிட்டார்.

அந்த சமயத்துலே ராஜரத்தினம் பிள்ளை மட்டும் முன்வரிசையிலே உக்கார்ந்திருக்கறது தெரிஞ்சிது.

அவரை உடனே உள்ளே வரவழைச்சார். தன் மனக் கஷ்டத்தைச் சொன்னார். ஆனா ராஜரத்தினம் பிள்ளை சொன்ன விஷயத்தைக் கேட்டதும் அவருக்கு ரொம்ப ஆச்சரியமாப் போயிட்டுது. அவரு கிட்டப்பாகிட்டே என்ன சொன்னார் தெரியுமா?

"நீங்க அந்த காபி ராகத்தை ரொம்ப பிரமாதமா பாடினீங்க. அது மனசுலே நிக்கிற இந்த சமயத்துலேயே மறந்துடாமே அதை பாடி சாதகம் பண்றதுக்காக - பயிற்சி பண்ணிக்கிறதுக்காக அந்த

இசை மேதைகள்லாம் எழுந்திரிச்சி போயிருக்காங்க. அதை என்கிட்டே சொல்லிட்டுத்தான் போனாங்க!'' -ன்னார்.

அப்பேற்பட்ட அந்த கலைஞர் இன்னைக்கு நம்மகூட இல்லேன்னாலும் அவரோட குரல் எப்பவும் நம்ம காதுலே விழுந்துகிட்டுதான் இருக்கு.

இந்த காலத்துலே யெல்லாம் நாம அதுமாதிரி ஒரு மேடையிலே பாடி - முதல்வரிசையிலே உள்ளவங்க பாதியிலே எழுந்திரிச்சி போனா அதுக்கு என்ன காரணமா இருக்கும்?

அப்படி ஒருத்தர் ஒருசமயம் எழுந்திரிச்சி போனார். மேடையிலே இருந்தவர் திரையை போடச் சொல்லிபுட்டு, அவரு எங்கே போறார்ன்னு பின்னாடியே போயி கவனிச்சார். ஒருக்கால் நாம பாடின பாட்டை தனியா போயி சாதகம் பண்ணுவாரோங்கற சபலம்.

ஆனா அந்த ஆள்... நேரா டிக்கட் கவுண்டருக்குப் போனார். டிக்கட்டை திருப்பி குடுத்துட்டு - என் காசை திருப்பிக் குடுன்னு கேட்டு சண்டை போட்டுகிட்டிருந்தார்.



# 29. துறவு!

ஒரே ஒரு ஊர்லே ஒரு வைர வியாபாரி இருந்தார். அவருக்கு ஒரு மனைவி.

அவங்க ரெண்டுபேர் மட்டும்தான். குழந்தை குட்டி கிடையாது.

அவங்க ரெண்டு பேருக்குமே ரொம்பவும் தாராள மனசு. இருக்கற செல்வத்தையெல்லாம் வாரி வாரி வழங்கினாங்க.

அப்படியும் முழுமையான மனநிறைவு - மன அமைதி கிடைக்கலே.

அவரு ஒருநாள் தன் மனைவிகிட்டே சொன்னார்: "இதோ பாரு... நான் ஒரு பரதேசியாகி இந்த ஊரை விட்டே வெளியேறப் போறேன். அதுக்கு முன்னாடி இருக்கிற சொத்தையெல்லாம் தான தருமம் பண்ணிடப் போறேன். அதனாலே உனக்கு என்னென்ன தேவையோ அதையெல்லாம் முதல்லே நீ எடுத்துக்கோ!" -ன்னார்.

அந்த அம்மா பார்த்தாங்க.

"நீங்க போனதுக்கு அப்புறம் எனக்கு மட்டும் என்ன இருக்கு? பிள்ளையா... குட்டியா... நானும் உங்க கூட வந்துடறேன்!" -னாங்க.

"உன்னாலே ஊரு சுத்தமுடியாது... காடு மேடெல்லாம் அலைய முடியாது... பசி - பட்டினி - குளிர் - வெயில் எல்லாத்துக்கும் ஈடுகொடுக்க வேண்டியிருக்கும்... அதனாலே உனக்கு இது வேண்டாம்!" -ன்னார்.

ஆனா அந்த அம்மா பிடிவாதமா நான் வந்தே தீருவேன்னு உறுதியா சொல்லிட்டாங்க.

வேறே வழியில்லாமே அவங்களையும் அழைச்சிக்கிட்டு அவர் புறப்பட்டார்.

அதுக்கு முன்னாடி இருக்கறதையெல்லாம் வாரி வாரி வழங்கினாங்க. கடைசியா கழுத்துலே கிடக்கிற நகைகளையும் கழட்டினாங்க அந்த அம்மா.

"என்ன இது... அதையும் கழட்டறே... நம்ம கல்யாணத்துக்கு அடையாளமே அதுதானே...!" -ன்னார் இவர்.

"எப்போ நாம துறவு வாழ்க்கையை தொடங்கிட்டோமோ அப்பவே கணவன் - மனைவிங்கற பந்தம்லாம் போயிட்டுது... இனிமே நீங்க வேறே நான் வேறே... இருந்தாலும் நாம இப்போ ஒண்ணா சேர்ந்து போறது எதுக்குன்னா ஒருத்தருக்கொருத்தர் உதவியாத்தான்.

கழுத்துலே ஒரு சங்கிலி கிடந்தா, கஷ்டம் வரும்போது அதை வித்துக் காசாக்கலாமேங்கற எண்ணம் வரும்... அதனாலே அது வேணாம்!" -ன்னுட்டாங்க.

அதுக்கப்புறம் அவங்க ரெண்டுபேரும் பல ஊர் சுத்தினாங்க. வெயில்... மழை... பசி... பட்டினி... அவருக்கு அந்த அம்மாவைப் பார்க்கப் பரிதாபமா இருந்துது. இவ்வளவு கஷ்டத்துக்கும் ஈடு கொடுக்கிறாளே -ன்னு ஆச்சரியமாவும் இருந்துது.

"நீ ஊருக்குத் திரும்பிப் போயிடேன்!' -னும் சொல்லிப் பார்த்தார்.

"சுவாமி... நீர் இப்போது எம் கணவரல்ல... உம் பேச்சை யாம் கேட்பதற்கு!" - அப்படின்னாங்க.

இப்படியே கொஞ்ச காலம் போச்சு.

ஒருநாள் அவங்க ரெண்டு பேரும் ஒரு காட்டு வழியா போய்க்கிட்டிருந்தாங்க.

வழியிலே ஒரு பெரிய மாணிக்கக் கல் கிடந்துது.

முன்னாடி போய்க்கிட்டிருந்த அவர் அதைப் பார்த்துட்டார்.

''பின்னாடி வந்துகிட்டிருக்கிற தன்னுடைய மனைவி கண்ணுலே இது பட்டுட்டா மறுபடியும் உலக ஆசை வந்து... சந்நியாசத்தை விட்டாலும் விட்டுடுவாள்!'' -ன்னு நினைச்சி அதைக் காலாலே மிதிச்சி மறைச்சிக்கிட்டார்.

பின்னாலே வந்த அந்த அம்மா... ''அது என்ன சுவாமி... காலாலே மிதிச்சுக்கிட்டிருக்கீங்க?'' -ன்னு கேட்டாங்க.

''இது... இது வந்து... மாணிக்கக் கல்...! இதைப் பார்த்து உனக்கு உலக ஆசைகள் வந்து, மனம் மாறிப் போயிடுமோன்னு பயந்துதான் இதை மறைச்சேன்!'' -ன்னார் அவர்.

இதுக்கு அந்த அம்மா சொன்னாங்க: ''சுவாமி! தங்களுக்கு இன்னமும் மாணிக்கத்துக்கும் மண்ணாங் கட்டிக்கும் வித்தியாசம் தெரியுதா? எனக்கு இரண்டும் ஒண்ணாத்தான் தெரியுது!''

அப்படின்னாங்களாம்.

இதுலேயிருந்து என்ன தெரியுது... துறவுங்கறது அவ்வளவு சாதாரண சமாச்சாரமில்லே!

இந்தக் காலத்து ஆசாமி ஒருத்தர்.

''எனக்குன்னு இருக்கறது எல்லாத்தையும் விட்டுட்டு சந்நியாசம் வாங்கிக்கப் போறேன்!'' -னார்.

''உனக்குன்னு இருக்கறது எவ்வளவு?'' -ன்னேன்.

''எல்லாத்தையும் கூட்டிப் பார்த்தா மொத்தமா ஒரு 50,000 தேறும்'' -ன்னார்.

''என்ன... சொத்தா'' -ன்னு கேட்டேன்.

''இல்லே...! கடன்!'' -அப்படின்னார்.



# 30. பதவியும் பண்பும்

என்கூட படிச்ச ஒருத்தர். ஒருநாள் ரொம்பக் கவலையோட வந்தார்.

என்ன விஷயம்ன்னு விசாரிச்சேன்.

அவரு சொன்னார்: "சின்ன வயசுலே நம்மகூட படிச்ச ஒருத்தன் இப்ப ஒரு பெரிய பதவியிலே இருக்கான். சும்மா அவனைப் பார்த்து வாழ்த்து சொல்லிட்டு வரலாம் -ன்னு போனேன்.

அவன் சரியா முகம் கொடுத்துக்கூட பேசலே... ஏதோ ஒரு அற்பப் புழுவைப் பார்க்கறது மாதிரி என்னைப் பார்த்தான். நான் போட்டிருக்கிற இந்த சாதாரண சட்டைகூட அவனுடைய கௌரவத்துக்கு இடைஞ்சல் -ங்கறது மாதிரி என்கிட்டே பழகினான். அதுதான் மனசு ஒரு மாதிரியா ஆயிட்டுது... உன்கிட்டே வந்தேன்!" -னார்.

"கவலைப்படாதீங்க... இன்னைக்குப் பலபேர் அப்படித்தான் ஆயிடறாங்க.

பதவி பெருகப் பெருக பண்பு குறைஞ்சுடுது... இடம் உயர உயர இதயம் குறுகிப் போயிடுது... இதயம் விசாலமானவர்களை இதிகாசங்கள்லே தான் பார்க்க முடியுது" -ன்னேன்.

"என்ன அப்படி சொல்றீங்க?" -ன்னார்.

"ஆமாங்க!" -ன்னு சொல்லி அவரை உக்கார வச்சு குசேலர், கண்ணனைப் பார்க்கப் போன கதையைச் சொன்னேன்.

குசேலர் கிருஷ்ணனைப் பார்க்கறதுக்காகப் போறார். அவல் கொண்டுகிட்டுப் போறார். ஒரு பழைய துணி மூட்டையிலே அதைக் கட்டி எடுத்துக்கிட்டுப் போறார்.

கிருஷ்ணன் அந்த அவல் மூட்டையை வாங்கிப் பிரிக்கிறார். குசேலர் அதைப் பார்க்கறார். அவர் மனசு ரொம்பவும் சங்கடப்படுது.

"நான் எங்கே? கிருஷ்ணன் எங்கே? நான் ஏழை... வறியவன்! கிருஷ்ணனோ பேரரசன்... இறைவன்! என்னோட அழுக்கான துணியை அவர் கையாலே தொடலாமா?'' - இப்படியெல்லாம் நினைக்கிறார்.

ஆனா கிருஷ்ணன் அவர் பாட்டுக்கு மூட்டையைப் பிரிச்சார். அவலை எடுத்தார்... வாயிலே போட்டார். அசைபோட ஆரம்பிச்சுட்டார்.

கொஞ்ச நேரம் ஆச்சு. அவல் இன்னும் கொஞ்சம் மீதி இருந்துது... மூன்றாவது பிடி அவலை வாயிலே போட்டுக்கப் போனார்.

அந்த சமயம் பார்த்து ருக்மணி ஓடிவந்து கிருஷ்ணனின் கையைப் பிடிச்சிக்கிட்டதும் ரொம்ப ஆச்சரியமாப் போச்சு.

நாம கொண்டு வந்த இந்த அவலைக் கிருஷ்ணன் சாப்பிடறது ருக்மணிக்குப் பிடிக்கலே போல இருக்குன்னு நினைச்சார் குசேலர்.

ஆனா கிருஷ்ணனுக்கு ருக்மணியின் இதயம் புரிஞ்சிது. ருக்மணிக்கும் கிருஷ்ணனின் இதயம் புரிஞ்சிது. குசேலர் ருக்மணியைப் புரிஞ்சிக்கணுமேங் கறதுக்காக கிருஷ்ணன் பேச ஆரம்பிச்சார். ருக்மணியைப் பார்த்துச் சொல்றார்:

“எதுக்காக நீ என் கையைத் தடுத்து நிறுத்தினே...? நான் குசேலனின் சேவகன். அவர் கொண்டுவந்த அவலை நான் ஏற்றுக் கொள்ளணும்!” -ன்னார்.

இதுக்கு ருக்மணி சொன்ன பதில் என்ன தெரியுமா?

“கிருஷ்ணா! நீ குசேலருக்குத் தொண்டன். நான் உனக்குத் தொண்டு செய்பவள். அந்த உரிமை காரணமாக எனக்கு இந்த அவலில் பங்கு வேண்டாமா? எனக்குள்ள பங்கை நான் கேட்கிறேன்!” இதுதான் ருக்மணியின் பதில்.

ஆன்மிக எண்ணங்கள்லாம் எந்த அளவுக்கு விசாலத்தன்மை வாய்ந்தவை - அப்படிங்கறதை நாம புரிஞ்சிக்கறதுக்காக சான்றோர்கள் (சாய்பாபா) இந்தச் சம்பவத்தை எடுத்துச் சொல்லியிருக்காங்க.

பதவி உயரும்போது பண்பும் உயரணும்.

பழைய நட்புகளை மறந்துடப்புடாது.

இந்தக் காலத்துலே சாதாரண உயர்வையே ரொம்பப் பெருமையா நினைச்சிக்கிறவங்களும் உண்டு.

ஒருத்தர் சொன்னார்...

“நான் கடந்த ஒரு மாச காலத்துலே வாழ்க்கையிலே ரொம்ப உயர்ந்திருக்கேன்!” -ன்னார்.

“எப்படிங்க அது?” -ன்னேன்.

“போன மாசம் கால்லே அடிபட்டு ஆஸ்பத்திரியிலே சேர்ந்தேன். அப்போ மூணாவது மாடியிலே படுத்திருந்தேன். இப்போ ஏழாவது மாடிக்கு மாத்திரியிருக்காங்க!” - அப்படின்னார்.



# 31. புத்தாண்டும் போலித்தனங்களும்

இன்றைக்குக் காலையிலே ஒருத்தர் எதிர்லே வந்த ஒருத்தரைப் பார்த்து Happy New Year - ன்னார்.

உடனே அவரும் Same to you -ன்னு இவருகிட்டே சொல்லிபுட்டுப் போனார்.

இன்றைக்கு யாரைப் பார்த்தாலும் 'மகிழ்ச்சி பொங்கும் புத்தாண்டு வாழ்த்து' ன்னு சொல்லிக்கறது நம்ம பழக்கம்.

இதைப் பத்தி ஒரு பெரியவர் (சாய்பாபா) என்ன சொல்றார் தெரியுமா?

இப்படி சொல்லிக்கறதுலே அர்த்தமே இல்லேங்கறார்.

இன்னைக்கு ஒரு நாள் மட்டும் 'மகிழ்ச்சி தரும் புத்தாண்டு' ன்னு சொல்லிபுட்டா உடனே இந்த வருஷம் பூரா நமக்கு மகிழ்ச்சியா இருந்துடப் போவுதுன்னு ஆயிடுமா?

மனிதர்கள் வாழ் நாள் பூராவையும் இப்படி போலித்தனமாவே கழிச்சிக்கிட்டிருக்காங்க -ங்கறது அவர் கருத்து.

ஒரு மனிதனுக்குப் போன வருஷம் இருந்த ஆயுள் காலத்தை விட இந்த வருஷம் உள்ள ஆயுள் காலம் குறைச்சல். ஒரு வருஷம் குறைஞ்சு போச்சு. அதுமட்டுமில்லே... ஒவ்வொரு மனிதனுடைய ஆயுள் காலமும் நொடிக்கு நொடி குறைஞ்சுக்கிட்டே வருது. அப்படி இருக்கிறப்போ இவன் என்னமோ

வருஷா வருஷம் வளர்ந்து கிட்டிருக்கிறதா நினைச்சிக்கிட்டு வாழ்த்து சொல்லிக்கிட்டிருக்கான்!

காலம் - ன்னு ஒண்ணு இருக்கு பாருங்க... அது நிரந்தரமானது. எல்லையில்லாதது. அழிவில்லாதது. அப்படிப்பட்ட எல்லையில்லாத காலத்துலே மனுஷனுடைய வாழ் நாள் ங்கறது ஒரு சின்ன அணுமாதிரி! இதை மனுஷன் வருஷம் - மாசம் - தேதின்னு பிரிச்சிக்கிட்டு அதை அனுபவிக்க முயற்சி பண்ணிக்கிட்டிருக்கான். ஒரு வருஷம் போவுதாம். அதுக்கு விடை கொடுக்கிறானாம். இன்னொரு வருஷம் வருதாம் - அதை வரவேற்கிறானாம்.

ஒரே கொண்டாட்டம்! - கும்மாளம்; கலாட்டா! காலத்தினுடைய புனிதத்தன்மையையும் - எல்லைக்கு உட்படாத அதனுடைய தன்மையையும் இன்றைய மனிதன் புரிஞ்சிக்கலே! அதனாலே தான் அவனுடைய பேச்சும் செயலும் போலியா இருக்கு!

எல்லையற்ற காலத்தை, நிமிஷக் கணக்கிலே அளக்கறதுக்கு முயற்சி பண்றான் இவன்.

மனுஷன் தன்னுடைய போலியான வாழ்க்கையை வாழறதுக்காகத் தான் வருஷம் - மாசம் - வாரம் - நாள்- ன்னு வகைப்படுத்தி வச்சிருக்கான்.

காலத்தை எப்படி கழிச்சிக்கிட்டு வர்றோம்ங் கறதை நாம சிந்திச்சிப் பார்க்கணும்.

ஒரு வருஷத்துக்கு 31,53,600 வினாடிகள் (60x60x24x365) இந்த வினாடிகளை நாம எப்படி செலவு பண்ணிக்கிட்டிருக்கோம்ங்கறதை ஒவ்வொருத் தரும் சோதனை செஞ்சி பார்த்துக்கணும். எத்தனை வினாடிகள் அப்பா அம்மாவுக்கு உதவியா இருந்திருக்கோம். எத்தனை வினாடிகள்

பெரியவர்களை அவமதிச்சிருக்கோம். எத்தனை வினாடிகளை வயிற்றுப் பிழைப்புக்காக செலவிட்டிருக்கோம். எத்தனை வினாடிகள் சினிமா - டிராமாவுலே போச்சு! ஊர் சுத்துனது எத்தனை வினாடிகள்... உருப்படாத புஸ்தகங்களைப் படிச்சது எவ்வளவு வினாடி! உருப்படியான காரியம் செஞ்சது எத்தனை வினாடிகள்? கணக்குப் போட்டுப் பாருங்க. விடை என்ன வருது! அது வெளியிலே சொல்லிக்கறாப் போல இருக்காது! 'சரி சார்... இந்த உபதேசம்லாம் இருக்கட்டும்... இந்த புத்தாண்டுலே எப்படித் தான் வாழணும்னு சொல்றீங்க?' - ன்னு கேக்கறீங்களா? அதையும் அப் பெரியவரே சொல்றார்.

'காலத்தை கழிக்கும் வழி என்ன'-ன்னு கேட்டா கடமையைக் கருத்துடன் செய்யறது தான் வழிங்கறார் அவர். துன்பமில்லாமே வாழணும்னு ஆசைப் படறோம். அதுக்கு என்ன வழி? எல்லா துன்பங்களுக்கும் அடிப்படையா இருக்கிற ஆசைகளைக் குறைக்கணும்! அது தான் வழி! ஒரு ரயில்லே பிரயாணம் செய்யறோம்... நாம கொண்டு போற சுமை குறைச்சலா இருந்தா பிரயாணம் சுகமா இருக்கும்! அது மாதிரி ஆசைகள் - ங்கற சுமையை குறைச்சிக்கிட்டா வாழ்க்கைங்கற பிரயாணம் சுகமா இருக்கும்.

Less Luggage! More comfort! Make Travel pleasant! லக்கேஜ் அதிகமா இருந்தா அதுக்குன்னு உபரியான கட்டணமும் செலுத்த வேண்டியிருக்கு.

அது மாதிரி ஆசைகள் அதிகமானா அதனாலே விளையக் கூடிய அவதிகளையும் அனுபவிக்க வேண்டியிருக்கும். கையிலே ஒரு சின்ன பையோட

புறப்படுங்க சார்.. கவலையில்லாமே பிரயாணம் பண்ணலாம். இது தான் இந்தப் புது வருஷத்துலே நாம தெரிஞ்சிக்க வேண்டியது. ஒருத்தர் என்னைத் தேடி வந்தார். “சார்... இந்த புது வருஷத்துலே எனக்கு ஏதாவது நல்ல கருத்தை சொல்லுங்க சார்! - ன்னார். நான் உடனே அவரை உக்கார வச்சி உபதேசம் பண்ணினேன்.

“சார்! நம்ம மனசு தான் எல்லாத்துக்கும் அடிப்படை.

இதயம் - ங்கற பூட்டை மனம் - ங்கற சாவியாலே திறக்கணும். எப்படி திறக்கறோம்ங்கறது தான் முக்கியம். ஒரு கதவை திறக்கணும்ன்னா கூட... சாவியை வலதுபுறம் திருப்பினா பூட்டு திறக்கும். இடது புறம் திருப்பினா பூட்டிக்கும்! பூட்டும் சாவியும் ஒண்ணு தான். சாவியை எந்த திசையிலே திருப்பறோம்ங்கறதுதான் இதுலே கவனிக்க வேண்டியது. அதை கவனிச்சி நடந்துக்கிட்டீங்கன்னா போதும்!” ன்னு அவருக்கு எடுத்து சொன்னேன். அவரும் அமைதியா கேட்டுக்கிட்டார். அதுக்கப்புறம் நான் அவரைப் பார்த்து கேட்டேன்.

“ஏன் சார்... நீங்க இனிமே இந்த வருஷத்துலே சாவியை எந்தப் பக்கமா திருப்பப் போறீங்க?” ன்னு கேட்டேன்.

அவரு மெதுவா என்னை நிமிர்ந்து பார்த்து...

“நான் பூட்டைத் திறக்கறதுக்கு எப்பவுமே சாவியை உபயோகப் படுத்தறதில்லே சார்... ஒரு சின்ன கம்பி இருந்தா போதும்!” அப்படின்னார்.



# 32. தோழர் ஜீவா

ஒரு சமயம் பம்பாய் தமிழ்ச் சங்கத்துலே பாரதி விழா நடந்துகிட்டிருக்கு. அந்த விழாவுலே கலந்துக்கறதுக்காக தமிழ் நாட்டுலேயிருந்து ஒருத்தர் அங்கே போயிருக்கார். நாலு நாள் அங்கே தங்கியிருந்து வேறே வேறே இடங்கள்லே தமிழ்ச் சங்க விழாவுலே இவர் பேச வேண்டியிருந்துது. ஒவ்வொரு நாளும் இரவுலே படுக்கப் போறதுக்கு முன்னாடி இவர் தன்னுடைய வேட்டியை துவைச்சு காயப் போட்டுட்டு, ஒரு லுங்கியைக் கட்டிக்கிட்டு படுத்துக்குவார். மறு நாள் காலையிலே அந்த வேட்டியை எடுத்துக் கட்டிக்கிட்டு விழாவுலே பேசறதுக்குப் போயிடுவார். இவர் ஏன் இப்படி பண்ணினார் ன்னா... அவர்கிட்டே அப்போ இருந்தது ஒரே ஒரு வேட்டி தான்.

இதை அங்கேயிருந்த தமிழ்ச் சங்க உறுப்பினர்கள் புரிஞ்சிக்கிட்டாங்க. உடனே அவங்க போய் ஒரு பன்னிரண்டு மில் வேட்டிகளை வாங்கிக்கிட்டு வந்தாங்க. அதை அவருக்குப் பரிசா குடுத்தாங்க.

இவரு அதை வேணாம்ன்னு சொல்லலே... பேசாமே வாங்கி வச்சிக்கிட்டார். ஆனா அதையெல்லாம் என்ன பண்ணினார் தெரியுமா?

பம்பாயை விட்டுப் புறப்படறதுக்கு முன்னாடி அந்த வேட்டிகளை யெல்லாம் ஏழைகளுக்குக் கொடுத்துட்டு மெட்ராசுக்கு ரயில் ஏறினார்.

அந்தப் பெரிய மனிதர் யார் தெரியுமா?

அவர் தான் தோழர் ப. ஜீவானந்தம்.

ஆரம்ப காலத்துலே அவர் செட்டி நாட்டுலே சிறாவயல்-லே காந்தி ஆசிரமம் நடத்திக்கிட்டிருந்தார்.

அப்போ மகாத்மா காந்தி அந்த ஆசிரமத்துக்கு ஒரு தடவை வந்திருந்தார். ஆசிரமச் சூழ்நிலை காந்திஜிக்கு ரொம்பப் பிடிச்சிருந்துது. ஆசிரமத்தின் பொருளாதார நிலை எப்படி இருக்குன்னு விசாரிச்சார். சொத்து என்ன இருக்குன்னு கேட்டார். "இந்த தேசம் தான் என்னுடைய சொத்து"ன்னார் - ஜீவா.

உடனே காந்திஜி...

"இல்லை... இல்லை... நீங்கள் தான் இந்த தேசத்தின் சொத்து!" ன்னார்.

இப்படி காந்திஜியால் அடையாளம் காணப்பட்ட ஜீவா ஒரு சிறந்த சொற்பொழிவாளர்.

அவர் ரஷ்யப் புரட்சியை விளக்கறதுக்காக சொன்ன ஒரு குட்டிக் கதை ரொம்பப் பிரபலம். அது என்னன்னா...

ஒரு ஊர்லே ஒரு பூதம் இருந்துது. அது வயலை உழுதுது. விவசாயம் பண்ணிச்சி.... காலா காலத்துலே களை எடுத்துது. நல்ல விளைச்சல்... அறுவடை பண்ணிச்சி... தானியம் குவிஞ்சிது! இருந்தாலும் அந்தப் பூதமும் அதன் குடும்பமும் உப்பில்லாத கூழைத் தான் குடிச்சிது. அந்த பூதம் நிறைய வீடுகளைக் கட்டிச்சி... மாடமாளிகைகளைக் கட்டிச்சி. ஆனா அதுவும் அது குடும்பமும் ஒரு சாதாரணக் குடிசையிலே தான் இருந்துது.

அந்தப் பூதம் பள்ளிகளையும் கல்லூரிகளையும் கட்டிச்சு... ஆனா அந்தப் பூதத்துக்கும் அது குடும்பத்துக்கும் எழுத்து வாசனையே கிடையாது...

அது பஞ்சாலைகள்ளே வேலை செஞ்சி... நிறைய துணிமணிகளை உற்பத்தி பண்ணிச்சி... ஆனா அதுவும் அது குடும்பமும் கிழிஞ்ச துணியைத் தான் கட்டியிருந்துது. அந்த பூதம் செய்யிற வேலைகள் அதிகம். ஆனா அது எலும்பும் தோலுமா இருந்துது... அதோட குடும்பம் வறுமையிலே ரொம்பக் கஷ்டப்பட்டுது.

அந்த ஊர்லே ஒரு நல்ல மனிதர் இருந்தார்.

"இந்த பூதம் இவ்வளவு கஷ்டப்பட்டு உழைக்குது... ஆனா இதோட நிலைமை ரொம்பப் பரிதாபமா இருக்குதே!" - ன்னு நினைச்சார். கிட்டே போய் உத்துப் பார்த்தார். அந்த பூதத்தின் ரெண்டு கண் இமைகளும் வீங்கிப் போய் பார்வையிலே முக்கால்வாசியை மறைச்சிருந்தது. உடனே தன் கையிலே வச்சிருந்த ஒரு கருவியாலே அந்த இமைகளை தூக்கி விட்டார். இப்பத்தான் அந்தப் பூதத்தின் பார்வைக்கு எல்லாம் 'பளிச்' சின்னு தெரிஞ்சுது!

உற்பத்தி பண்றவனுக்கு ஒண்ணும் கிடைக் கலையே - ன்னு யோசிக்க ஆரம்பிச்சுது.

எல்லாருக்கும் எல்லாமும் கிடைக்கணும்... அதுக்காகப் பாடுபடுவேன்னு வீர முழக்க மிட்டுது அந்த பூதம்.

யார் இந்த பூதம்?

உழைக்கும் தொழிலாளர்களும் விவசாயிகளும் தான் இந்த பூதம்!

சமூக சூழ்நிலை அதோட கண்களை மறைச்சிருந்துது.

அது விலக்கப்பட்டுது. சமதர்மம் வந்துது.

இது தான் அவர் சொன்ன பூதக் கதை.

இன்னொருத்தர் உழைப்பைச் சுரண்டறது இருக்கு பாருங்க...

அது தான் திருட்டுலேயே பெரிய திருட்டு.

ஒரு பெரிய சந்தை. ஆடு - மாடு - கழுதை - குதிரை எல்லாம் அங்கே கொண்டாந்து விக்கிறது - வாங்கறது வழக்கம். ஒரு பெரிய மனுஷன் அங்கே நிறைய கழுதைகளை ஓட்டிக்கிட்டு வந்து விக்கிறது வழக்கம். மத்தவங்க விக்கிற விலையை விட ரொம்ப குறைச்ச விலைக்கு இவர் விற்பார். ஒரு கழுதையை 100 ரூபாய்க்கு வித்துக்கிட்டிருந்தார்.

அது எப்படிங்க இவ்வளவு குறைச்சல் விலைக்கு உங்களாலே இதை விக்க முடியுது?'' -ன்னு கேட்டார் இன்னொருத்தர்.

“அது ஒண்ணுமில்லே... இந்த கழுதையை கவனிச்சிக்கிற வேலைக்காரனுக்கு நான் சம்பளம் எதுவும் குடுக்கறதில்லே... அதுக்கு வேண்டிய ஆகாரமெல்லாம் காசு குடுத்து வாங்கறதில்லே... திருடியே கொண்டாந்து போட்டுடுவோம். அதனாலே எனக்கு இந்த கழுதையோட அடக்க விலையே குறைச்சலாப் போயிடுது! அதனாலே தான் ஒரு கழுதை 100 ரூவா விலைக்கு விக்க முடியுது!'' ன்னார் அவர்.

“அப்படின்னா என்னோட கழுதையை 25 ரூபாய்க்கு விக்கறதுக்கு நான் தயார்!'' ன்னார் இவர்.

“அது எப்படி முடியும்?'' - ன்னார் அவர்.

“ஐயா! நீங்க கழுதையை வளர்க்கறதுக்குத் தேவையான உழைப்பையும் - கழுதைக்குத் தேவையான ஆகாரத்தையும் திருடுறீங்க.

நான் கழுதையையே திருடுறேன்! அது தான் இதுலே உள்ள ரகசியம்!'' அப்படின்னான்.



# 33. மாயை

ஒருத்தர்கிட்டே பேசிக்கிட்டிருந்தேன்.

அவர் சொன்னார்.

“இந்த உலகத்தை ‘மாயை’ ன்னு மகான்கள்லாம் சொல்றாங்களே அதை நான் நம்ப மாட்டேன் சார்!” அப்படின்னார்.

“என்னங்க இது... இப்படி திடீர்ன்னு சொல்றீங்களே?” ன்னேன்.

“என்ன சார் பின்னே? இந்த உலகத்துலே எவ்வளவு காரியங்கள் நடந்துக்கிட்டிருக்கு? எல்லாத்தையும் நாம கண்கூடா பார்த்துக் கிட்டிருக்கோம். அப்படி இருக்கிறப்போ இதைப் போய் மாயைன்னு சொன்னா எப்படி?” - ன்னார்.

“மாயை’ ன்னா ஏதோ அடியோடு இல்லாத ஒண்ணு அப்படின்னு அவர் நினைக்கிறார். அதனாலே அவர் அப்படிச் சொல்றார்.



“மாயை’-ங்கறது அடியோட இல்லாத ஒண்ணு இல்லே!

இப்ப முயல் கொம்பு... குதிரைக் கொம்புன்னு சொல்றோம். அப்படி ஒரு பொருள் அடியோட இல்லே! ஆனா...

மாயைங்கறது அப்படி இல்லே!

‘மாயை’ - ங்கறது எப்படின்னா...

அது இருக்கிறதாக நினைக்கிற வரைக்கும் இருக்கிறதாகத் தோன்றும்.

'கானல் நீர்' மாதிரின்னு வச்சுக்குங்களேன். கானல் நீர் கண்ணுக்குத் தெரியுது. அதாவது தூரத்துலே தண்ணீர் இருக்கிற மாதிரி தெரியும். ஆனா உண்மையிலே அங்கே தண்ணீர் இல்லே! அங்கே தெரியிற தண்ணியைக் குடிச்சி நாம தாக சாந்தி பண்ணிக்க முடியாது.

'கானல் நீர்' - ங்கறது உண்மையான தண்ணீர் இல்லேன்னு தெரிஞ்சவங்களுக்குக் கூட கானல் நீர் தெரியத் தான் செய்யுது! அங்கே தண்ணி இல்லேங்கறது நமக்கு நல்லாத் தெரியும்... இருந்தாலும் கூட தண்ணி இருக்கிறதாகவேத் தான் தோணும்! அது தான் மாயை! இந்த உலகை மாயம்ன்னு உணர்ந்த ஞானிகளுக்குக் கூட இந்த லோகம் தெரியத் தான் செய்யுது!

ஒரு கயிறு கிழே கிடக்கு சார். இருட்டு நேரம். அந்தப் பழுதைப் பாம்புன்னு தவறா நினைச்சு டறோம். அப்ப என்ன ஆகுது? நிஜமான பாம்பு உண்டாக்குகிற அத்தனை பயத்தையும் பதற்றத்தையும் அது நம்மகிட்டே உண்டாக்கிவிடுது.

அதே மாதிரி....

உலகம் உண்மையிலேயே நிரந்தர சத்தியமா இல்லேன்னா கூட, அதை நாம சத்தியம்ன்னு நினைக்கிற வரைக்கும் அது மாதிரியே எல்லா காரியமும் நடக்குது!

நாம கனவு காண்றோம். கனவு காணுகிற வரைக்கும் அந்தக் கனவு நிஜமாத் தான் இருக்கும். முழிச்சிக்கிட்டதுக்கப்புறம் அது 'ஒண்ணுமில்லே!'

ன்னு ஆயிடும்! நாம அஞ்ஞானத்துலே தூங்கிக்கிட்டிருக்கிற வரைக்கும் உலகம் மெய்யாக இருக்கும்! நாம ஞான நிலையிலே முழிச்சிக்கிட்டதுக்கு அப்புறம் அது மறைந்தே போயிடும்!

கிளிஞ்சல் வெய்யில்லே பாக்கறப்போ வெள்ளி மாதிரி மினுமினுக்கும்! அது போல பிரம்மத்தில், மாயையின் காரணமா உலகம் தற்காலிகமா மினுமினுக்குது! அவ்வளவு தான்.

அது சரி!

ஞானிகளுக்கு இந்த உலகம் இனிப்பாகவும் நமக்கு இந்த உலகம் கசப்பாகவும் தெரியுதே அது எப்படி?

சர்க்கரையை உபயோகப்படுத்தி பாகற்காய் மாதிரியே ஒரு பொம்மை செஞ்சி வச்சிருக்கோம்ன்னு வச்சிக்குங்க! அதாவது சர்க்கரை பொம்மை பாகற்காய் மாதிரி இருக்கு. விஷயம் தெரியாத குழந்தை அதை பாகற்காய்ன்னு நினைச்சிக்கிட்டு ஓடிப் போயிடும்.

விஷயம் தெரிஞ்சவனுக்கு அது சர்க்கரைங்கறது தெரியும்! அது மாதிரி தான் ஞானிகளுக்கு இவ்வுலகம் இனிப்பு! நமக்குக் கசப்பு.

இவ்வளவும் காமகோடி பீடாதிபதி பரமாச் சாரியார் சொல்றார். அதனாலே இந்த உலகத்துலே நாம எப்படி வாழணும்ன்னு கேட்டா தாமரை இலை தண்ணீர் போல வாழணும்ங்கறாங்க பெரியவங்க. ஒட்டாமல் வாழ்கிற வாழ்வு அது! தாமரை இலை, தண்ணீர்லேயே தான் இருக்கும். இருந்தாலும் தண்ணி இதுலே ஒட்டாது. ஒரு துளி அது மேலே விழுந்தாலும் அது நிக்காது. ஓடி போயிடும்.

இந்தக் காலத்துப் புள்ளைங்க அதுக்குப் புது விளக்கம் குடுக்கறாங்க.

கொஞ்ச நாளைக்கு முன்னாடி ஒரு சின்னப் பொண்ணு என் கிட்டே வந்து "இன்று ஒரு தகவல்லே என்னென்னமோ சொல்றீங்களே...' தாமரை இலையிலே தண்ணி நிக்காது! ஏன் தெரியுமா சார்?'' அப்படின்னு கேட்டுது.

''நீயே சொல்லும்மா!''ன்னேன்.

''தாமரை இலையிலே தண்ணி நிக்காது. ஏன்னா அதுக்குக் கால் கிடையாது!'' அப்படிங்குது சார்!

உலகமே மாயம்





# 34. போலிச் சாமியார்கள்

ஒரு ஊர்லே ரெண்டு பேர் இருந்தாங்க. ஊரை ஏமாத்தி பணம் சம்பாதிக்கறதுக்கு என்ன வழின்னு யோசிச்சாங்க. சுலபமா ஒரு வழி தெரிஞ்சிது! அது பிரகாரம் ரெண்டு பேரும் சாமியார் வேஷம் போடறதுன்னு தீர்மானிச்சாங்க. போலிச் சாமியார்கள்.

ஒரு கோயில்லே போய் உக்கார்ந்துகிட்டாங்க.

ரெண்டு பேரும் திட்டம் போட்டு ஒரு சேதியை ஊர் பூராவும் பரப்பி விட்டாங்க. அதாவது...

இந்த மாதம் 18 ஆம் தேதி இந்த ஆலயத்துலே திடீர்ன்னு ஒரு பெரிய மகான் தோன்றி காட்சி கொடுக்கப் போறார். ஜனங்கள்லாம் அதைப் பார்க்கலாம். நம்ம குறைகளையெல்லாம் அந்த மகான் தீர்த்து வைப்பார். அப்படின்னு ஒரு அறிவிப்பு கொடுத்துட்டாங்க. பெரிய பெரிய நோட்டீஸ்லாம் அடிச்சி ஊர் பூரா உள்ள சுவத்துலே ஒட்டி வச்சுட்டாங்க!

ஜனங்களும் ரொம்ப பயபக்தியோடு மகானைத் தரிசனம் பண்றதுக்குக் காத்துக்கிட்டிருக்காங்க - எப்ப அந்த 18-ஆம் தேதி வந்து சேரும்ன்னு!

இது இப்படி இருக்க...

பக்கத்து ஊர்லே ஒரு ஜெயில். அங்கேயிருந்த ரெண்டு கைதிகள்... 17ஆம் தேதி ராத்திரி... சுவர் ஏறிக் குதிச்சி தப்பிச்சுட்டாங்க. போலீஸ் அவங்களைத்

துரத்துது. அந்த ரெண்டு பேர்லே ஒருத்தன் ஒரு தோப்பு வழியா ஓடி வர்றான். வர்ற வழியிலே ஒரு கட்டில் கிடந்தது - காலியா! உடனே அதுலே சடார்ன்னு காலை நீட்டி படுத்துக்கிட்டு... அங்கேயிருந்த போர்வையை எடுத்து உடம்பை மூடிக்கிட்டான். அந்தக் கட்டில் ஒரு பிச்சைக்காரனுடையது! அவனுக்கு ஒரு கால் கிடையாது. ஒரு கால் இல்லாத பிச்சைக்காரன். அவன் எங்கேயோ பிச்சையெடுக்கப் போயிருக்கான். இந்த சமயம் பார்த்து இந்த கைதி அவன் படுக்கையிலே போய் படுத்துக் கிட்டான்.

துரத்திக்கிட்டு வந்த போலீஸ்காரங்க கிட்ட வந்து பார்க்கறாங்க...' சரி... பிச்சைக்காரன் தான் படுத்திருக்கான் போல இருக்கு' ன்னு நினைச்சிக்கிட்டுப் போயிடறாங்க. தப்பி ஓடின இன்னொரு கைதி கோயிலுக்குள்ளே போய் நுழைஞ்சுடறான். ஒரே இருட்டு. மூலையிலே போய் வசதியா ஒளிஞ்சிக்கிட்டு திரும்பிப் பார்த்தா... அங்கே இவனை மாதிரியே இன்னொருத்தன் உக்கார்ந் திருக்கான்.

"யார்டா நீ?" - ன்னு விசாரிக்கிறான். அதுக்கு அந்த ஆசாமி... நான்... வந்து... இந்த கோயில்லே இருக்கிற பெரிய சாமியாரோட மச்சான்... நாளைக்குக் காலையிலே நான் தான் இந்த ஊரு ஜனங்களுக்கு மகானா காட்சி கொடுக்கப் போறேன்... அதுக்காகத் தான் ஊர்லேயிருந்து என்னை அழைச்சிக்கிட்டு வந்து இங்கே உக்கார வச்சிருக்காங்க!" அப்படிங்கறான்.

கைதி பார்த்தான்... இவனுக்குப் பதிலா நாமளே மகானா காட்சி கொடுத்தா என்ன'-ன்னு யோசிச்சான்.

அந்த மச்சான்காரனை ராத்திரியோட ராத்திரியா ஊருக்குப் போய்ச் சேருன்னு விரட்டி அடிச்சுட்டு இவன் அங்கே தயாரா இருந்துக்கிட்டான்.

மறுநாள் காலை மகானைப் பார்க்கறதுக்கு ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடியிருக்கு. கோயிலுக்கு முன்னாடி உள்ள திடல்லே.

நம்ம சிறைக் கைதி... மகான் மாதிரி வேஷத்துலே மெதுவா வெளியே வந்தார். சாமியார்கள் பார்த்தாங்க... இது நம்ம தயார் பண்ணின ஆள் மாதிரி தெரியலையே... என்னமோ நடந்திருக்குங்கறதைப் புரிஞ்சிக்கிட்டாங்க. இருந்தாலும் என்ன பண்ண முடியும்...? திருடனுக்குத் தேள் கொட்டினது மாதிரி 'கம்' முன்னு இருந்துக்கிட்டாங்க. இதுக்குள்ளே கூட்டம் முட்டி மோதிக்கிட்டு முன்னாடி வந்தது.

பெரிய சாமியார் ஜனங்களைப் பார்த்து கத்தினார். "மகான் தோன்றிட்டார்... எல்லாரும் அவரை வணங்குங்க!"ன்னார். எல்லாரும் குப்புற விழுந்து கும்பிட்டாங்க. இன்னொரு சாமியார் மெதுவா அந்த மகான் கிட்டே வந்து "ஏதாவது அற்புதம் நிகழ்த்துங்க... ஜனங்கள் உங்களுடைய சக்தியை புரிஞ்சிக்கட்டும்!" ன்னார். இப்ப இவனுக்குத் தேள் கொட்டியது மாதிரி ஆயிட்டது. திரு திருன்னு முழிக்க ஆரம்பிச்சான்... கூட்டத்தைப் பார்த்தான். இவன் கூட தப்பிச்ச இன்னொரு கைதி... கால் இழந்த பிச்சைக்காரன் வேஷத்துலே அங்கே நின்னுக்கிட்டு இருந்தான். உடனே இவன் ஒரு ஐடியா பண்ணினான்.

"ஓ... கால் இல்லாத மனிதனே... உன்னுடைய ஊனத்தை சரிப்படுத்தட்டுமா?" ன்னான்.

"அது என் பாக்கியம்!" ன்னு சொல்லி அவன் கிட்டே வந்தான்.

"உன் கால்கள் சரியாப் போகக் கடவது!" ன்னான். உடனே அவன் காலை உதறிக்கிட்டு நடக்க ஆரம்பிச்சுட்டான். ஜனங்கள்லாம் ஆச்சரியப்பட்டுப் போயிட்டாங்க. அதுக்கப்புறம் நிறைய பேர் மகானைத் தேடி வர ஆரம்பிச்சாங்க. ஒரு நாள் பெரிய சாமியார் இந்த 'மகான்' கிட்டே நிறைய பணம் குடுத்து தன் பொண்ணையும் அவருக்குக் கட்டிக் குடுத்து ரெண்டு பேரும் எங்கேயாவது போய் சவுக்கியமா இருங்கன்னு சொல்லி அனுப்பி வச்சுட்டார். அந்த ஆளும் இது தான் 'சான்ஸ்' ன்னு ஓடிப் போய் விட்டான்.

அவன் போனதுக்கப்புறம் இந்தப் போலிசாமியார்கள் ஜனங்கள் கிட்டே... "அந்த மகான் திடீர்ன்னு மறைஞ்சுட்டார்!" ன்னு சொல்லி அவருடைய படங்களை நிறைய அச்சடிச்சு விற்பனை பண்ண ஆரம்பிச்சாங்க. அந்த வியாபாரமும் அமோகமா நடந்துதாம்.

மூட நம்பிக்கைகள் இப்படித் தான் பரவுதுங்கறதுக்கு இது ஒரு உதாரணம்.

பெரியார் 1932 லே ரஷ்யாவுக்குப் போயிருந்தார். அங்கே சில ரஷ்ய நாடகங்களைப் பார்த்தார். அவருக்குப் பிடிச்ச ஒரு நாடகத்தோட கதை தான் இது. மனுஷனுக்குத் தன்னம்பிக்கை எந்த அளவுக்கு குறைச்சலா இருக்கோ அந்த அளவுக்கு பயம் அதிகமா இருக்கும்! மூட நம்பிக்கைகள் பரவறதுக்கு மனித பலகீனங்கள் தான் காரணம்!

ஒரு ஊர்லே ஒரு பெரியவர்... எல்லாருக்கும் ஆருடம் சொல்லிக்கிட்டிருந்தார். பாவம் செய்யற வங்களுக்குப் பரிகாரமும் சொல்லுவார். அவருகிட்டே ஒருத்தன் வந்தான்.

''ஐயா... நான் ஒரு பெண்ணை அவங்க அப்பாவுக்குத் தெரியாமே அழைச்சிக்கிட்டுப் போய் கல்யாணம் பண்ணிக்கிட்டேன்... நான் செஞ்சது பாவம்ன்னா அதுக்குப் பரிகாரம் என்ன?'' ன்னு கேட்டான்.

''இது பாவம் இல்லை... அந்த பெண்ணோட அப்பனை இங்கே அழைச்சிக்கிட்டு வா... நான் பிரச்சனையைத் தீர்த்து வைக்கிறேன்!'' ன்னார் அவர்.

''அதுலேயும் ஒரு பிரச்சனை இருக்கு!'' ன்னான் அவன்.

''என்ன பிரச்சனை?'' - ன்னார்.

''அந்த அப்பாவே நீங்க தானே!'' அப்படிங்கறான் இவன்.



# 35. பாடகர் பலவகை

ஒருத்தர் ரொம்ப அவசரமா எங்கேயோ போய்க்கிட்டிருந்தார். 'எங்கே சார் இவ்வளவு அவசரம்?'' ன்னேன்.

''சபாவுக்குப் போறேன் சார்.. சங்கீதக் கச்சேரி கேக்கறதுக்கு சீக்கிரம் போனாத் தான் முதல் வரிசையிலே இடம் கிடைக்கும்!'' ன்னார்.

''சங்கீதத்தை ரொம்ப நல்ல ரசிப்பீங்க போல இருக்கு!'' - ன்னேன்.

''அப்படி இல்லே சார்! நான் சங்கீதத்தை ரசிக்கிறவன் இல்லே... சங்கீத வித்துவான்களை ரசிக்கிறவன்!'' அப்படின்னார்.

''என்ன சார் சொல்றீங்க?'' - ன்னேன்.

''சங்கீதம் பாடறவங்க செய்யற சேஷ்டைகள்லாம் எனக்கு ரொம்பப் பிடிக்கும். அதனாலே தான் முதல் வரிசையிலே உக்கார்ந்து அவங்க முகத்தை கிட்டேயிருந்து பார்த்து ரசிக்கிறேன்!'' - ன்னார்.

இப்படியும் சில ரசிகர்கள் நம்மள்லே உண்டு.

அப்படிப்பட்ட ரசிகர்களுக்கான தகவல் இது.

இதைத் தெரிஞ்சிக்கிட்டா அவங்க இன்னும் கொஞ்சம் விவரமா அனுபவிச்சி ரசிக்கலாம்.

பாடும் போது சேஷ்டை பண்ற வித்துவான்கள் இருக்கிறாங்கள்லே... அவங்கள்லே மொத்தம் 24 வகை உண்டுன்னு சொல்லுது சங்கீத சாஸ்திரம்!

அது எப்படி தெரியுமா?

சில பேர் பாடும் போது பல்லைக் கடிச்சிக்கிட்டுப் பாடுவாங்க. அவங்களுக்கு 'ஸந்தஷ்டர்' -ன்னு பேரு.

ரஸபேதமா இரைபவர்களுக்கு 'உத்குஷ்டர்' -ன்னு பேரு.

சில வித்துவான்கள் எப்படி தெரியுமா?

பாடும் போது அடிக்கடி ஸூ, ஸூ ன்னு சத்தம் வரும்... இப்படி ஒலியெழுப்பறவங்களுக்கு 'ஸூத்காரி' - ன்னு பேரு.

சில பேரு பயந்து கிட்டே பாடுவாங்க. இப்படி பயத்தோட பாடறவங்களுக்கு 'பீதர்' - ன்னு பேரு.

சில பேரு வேக வேகமாகப் பாடுவாங்க... இவங்களுக்கு சங்கீதர் - ன்னு பேரு.

சில பேர் பாடறப்போ கவனிச்சிருப்பீங்க... வாயைப் பயங்கரமா திறந்துக்கிட்டுப் பாடுவாங்க. இவங்க 'கராளி' - ங்கற வகையைச் சேர்ந்தவங்க.

ஸ்வரங்களை சுருதிக்கு அதிகமாகவோ குறைச்சலாவோ பாடறவங்களுக்கு 'விகலர்' - ன்னு பேரு.

சில பேர் பாடறேன்னு சொல்லிக்கிட்டு காக்கா மாதிரி கத்துவாங்க. அதாவது காக்கை மாதிரி கடூரமான குரல் உள்ளவங்க. இவங்களுக்கு 'காகீ' - ன்னு பேரு.

தாளத்தோட ஒத்துப் போகாமே... தாளம் தப்பிப் பாடறவர் 'விதாளர்!'.

சில பேர் கழுத்தை மேலே தூக்கி பாடுவாங்க... ஒட்டக சிவிங்கி மாதிரி! இவங்களுக்குக் 'கரபர்' - ன்னு பேரு.

ஆடு மாதிரி கழுத்தை வச்சிக்கிட்டுப் பாடறவங்க 'உத்வடர்'!

சில பேர் பாடறப்போ பார்த்தீங்கன்னா... நெற்றி, முகம், கழுத்து இங்கேயெல்லாம் நரம்புகள் புடைக்கும்... இப்படி பாடறவங்க 'ஜோம்பகர்'

பாடறப்போ சுரைக்குடுக்கை மாதிரி கழுத்தை வச்சிக்கிறவங்க உண்டு. அவங்களுக்கு 'தும்பகீ' - ன்னு பேரு.

கழுத்தைக் கோணிக்கிட்டுப் பாடறவர் 'வக்ரீ".

கைகளை அடிக்கடி நீட்டி நீட்டி பாடறவர் 'ப்ரஸாரி', கண்களை மூடிக்கிட்டு பாடறவர் 'நிமீலகர்'.

ரஸங்களுக்கு ஒவ்வாமல் பாடறவர் - 'விரஸர்' தவிர்க்க வேண்டிய ஸ்வரங்களைப் பிடிச்சிப் பாடறவர் 'அபஸ்வரர்'.

தழுதழுத்த குரலோடு சொற்களை தெளிவற்ற முறையிலே உச்சரிக்கிறவர் - 'அவ்யக்தர்'.

உச்சஸ்தாயீ போன்ற மூன்று ஸ்தானங்களையும் எட்ட இயலாதவர் - 'ஸ்தான ப்ரஷ்டர்'.

ஸ்தானங்கள் கட்டுப்பாடு இல்லாமல் பாடறவர் 'அவ்யவஸ்திதர்'.

ஒன்றோடு மற்ற ராகங்களைக் கலந்து அடிப்பவர் - 'மிச்ரகர்!'

மேல்ஸ்தாயிகளில் அஜாக்கிரதையாக சஞ்சரிக்கிறவர் 'நிர்முக்தர்'

மூக்காலே பாடறவர் 'ஸானு நாசிகர்'.

ஆக இப்படி 24 வகைப் பாடகர்கள் உண்டுன்னு சங்கீத சாஸ்திரம் சொல்லுது!

சங்கீதத்தை ரசிக்கத் தெரியாத நம்ம ஆளுங்கள்லாம் இந்த விவரங்களை மனசுலே வச்சிக்கிட்டுப் போனா...

சங்கீத வித்துவான்களையாவது ரசிச்சுட்டு வரலாம்!

ஏதோ நம்மாலே முடிஞ்சது!

நானும் என்னுடைய நண்பர் ஒருத்தரும் ஒரு கச்சேரிக்குப் போனோம். நண்பர் சொன்னார்.

"இப்ப பாடப் போறாரே வித்துவான்... இவரு பாடினா நாள் பூரா கேட்டுக்கிட்டிருக்கலாம்!" - ன்னார்.

"அவ்வளவு நல்ல பாடுவாரா?" - ன்னேன்.

"அப்படி இல்லே... பாட ஆரம்பிச்சா அவ்வளவு சீக்கிரத்துலே முடிக்க மாட்டார்... அதனாலே அப்படிச் சொன்னேன்!" அப்படின்னார்.




# 36. கீதையும் நிர்வாகமும்

அரசாங்க உத்தியோகம் பார்க்கற ஒருத்தர் பகவத் கீதையை படிச்சிக்கிட்டு உக்கார்ந்திருந்தார். "சார்! நீங்கள் பார்க்கற உத்தியோகத்துக்கும் படிக்கிற புத்தகத்துக்கும் கொஞ்சம் கூட சம்பந்தம் இருக்கிறதா தெரியலையே...!" - ன்னேன்.

"என்ன அப்படி சொல்லிட்டீங்க... இதுலே கர்மயோகத்தைப் பத்தி பேசும் போது மூணு தத்துவங்கள் வலியுறுத்தப்படுது... நிர்வாகிகள்லாம் அதைக் கொஞ்சம் புரிஞ்சிக்கிட்டா நல்லது!" - அப்படின்னார்.

"அது என்னங்க... மூணு தத்துவங்கள்?" - ன்னேன். அவரு சொல்ல ஆரம்பிச்சார்.

எதிலும் பற்றற்று இருத்தல் - இது ஒரு தத்துவம்.

பலனை எதிர்பார்த்துச் செய்யாமை - இது ஒண்ணு.

எதையும் ஈஸ்வர அர்ப்பணமாகச் செய்யறது - இது மூணாவது!" - அப்படின்னார்.

எனக்கு ஒண்ணும் புரியலே.

"இதுக்கும் நிர்வாகத்துக்கும் என்னங்க சம்பந்தம்?" - ன்னேன்.

"விவரமா சொல்றேன் கேளுங்க" - ன்னார். அப்புறம் சொன்னார்.

முதல் கருத்து என்ன?

எதிலும் பற்றற்று இருத்தல்!

ஒரு அலுவலக மேலாளர் யார் மேலேயும் பற்று கொள்ளாமே எல்லாரையும் சரி சமமா நடத்தணும். இவரு நமக்கு வேண்டியவர்... அவரு நமக்கு வேண்டாதவர்... அப்படிங்கற எண்ணம்லாம் அவருக்கு வரப்புடாது. ஒரு ஆபீஸ்ன்னு இருந்தா அங்கே கோள் சொல்றதுக்குன்னு சில பேர் இருப்பாங்க... திறமையா வேலை செய்யற வங்களைப் பத்திக் கூட இவங்க மோசமா அதிகாரிகள்கிட்டே சொல்லி வச்சிடுவாங்க! மேலே இருக்கிறவர் இதைக் கேட்டு நடக்க ஆரம்பிச்சா... வேலை தான் வீணா போவும்!

சரி! இப்ப அந்த ரெண்டாவது தத்துவத்துக்கு வருவோம். அது என்ன சொல்லுது?

பலனை எதிர்பார்த்து எதையும் செய்யாதே! அப்படின்னா பலனே வேண்டாம் - ன்னு இதுக்கு அர்த்தம் பண்ணிக்கப் புடாது!

லாபம் வந்தாலும் சரி... நஷ்டம் வந்தாலும் சரி... மனசு ஒரே சீரா இருக்கணும். நஷ்டம் வந்தா... அதுக்கு என்ன காரணம்ங்கறதை ஆராயணும். அதை விட்டுட்டு... மனசு சோர்ந்து போய் உக்கார்ந்துடப்புடாது... அல்லது வேலை செய்யறவங்களை வீட்டுக்கு அனுப்பலாமான்னு யோசிக்கப்புடாது!

அதே மாதிரி லாபம் வந்தா அதுக்காக துள்ளிக் குதிச்சிக்கிட்டு இருக்கப் புடாது. அப்படி செய்யறப்போ கவனக் குறைவு ஏற்பட வாய்ப்பு உண்டு. இது, அடுத்த வருஷ நஷ்டத்துக்குக் காரணமா கூட ஆயிடும்...

மூணாவது தத்துவம் என்ன சொல்லுது?

எதையும் ஈஸ்வர அர்ப்பணமாகச் செய்தல்.

ஓர் அலுவலகத்துலே வேலை பார்க்கற ஒருத்தர்கிட்டே போய்... "நீங்க யாருக்காக வேலை செய்யறீங்க?" ன்னு கேட்டேன்.

"என்ன சார்... இப்படி கேக்கறீங்க... நான் எனக்காகத் தான் வேலை செய்யறேன்...!" - ன்னார்.

"அப்படியா சொல்றீங்க?" ன்னேன்.

ஆமாங்க! ஒண்ணாம் தேதி சம்பளம் வாங்கறேன் லே... அதுக்காகத் தான் வேலை செய்றேன்!" - ன்னார்.

சம்பளத்துக்காக வேலை செய்யறோம்ன்னு நினைக்காமே இந்த நிறுவனத்தின் முன்னேற்றத்துக்காக வேலை செய்யறோம்ங்கற நினைப்பு வரணும். அதன் மூலமா இந்த நாட்டை வளப்படுத்தறோம் - ங்கற நினைப்பு வேணும்.

ஈஸ்வர அர்ப்பணம் ன்னா அது தான்.

செய்யும் தொழிலே தெய்வம்!

இவ்வளவையும் அந்த நண்பர் என்கிட்டே விவரமா சொல்லிபுட்டு,

இப்ப சொல்லுங்க சார்... கீதையின் கர்ம யோகத்துக்கும் காரியாலய நிர்வாகத்துக்கும் சம்பந்தம் உண்டா... இல்லையா?" - ன்னார்.

நீங்க சொல்றது சரி தான்...னு சொல்லிட்டு எழுந்திரிச்சேன். வெளியிலே வந்தேன்... நினைச்சுப் பார்த்தேன்.

இன்னைக்கு ஆபீஸ்லாம் இப்படியா இருக்கு?

ஒருத்தர் கேட்டார்:

“என்னங்க இது... உங்க ஆபீஸ் அட்டென்டென்ஸ் ரிஜிஸ்டர் லே பென்சிலை கட்டிப் போட்டிருக்கீங்க... இதையெல்லாம் கூடவா திருடிகிட்டுப் போயிடுவாங்க... அப்படின்னார்.

“இது 36வது பென்சில்!” - அப்படின்னார் அவர்.

“எங்க ஆபீஸ்லேயும் கூட பென்சில் திருட்டுப் போறது உண்டு... ஆனா அதை இப்படி ரிஜிஸ்டரோட கட்டிப் போடறதில்லே!” - ன்னார் இவர்.

“ஏன்?” - னு கேட்டார்.

“அப்படி செஞ்சா ரிஜிஸ்டரையும் சேர்த்துத் தூக்கிக்கிட்டுப் போயிடறாங்க சார்...!” அப்படின்னார் இவர்.



# 37. கடவுள் பயம்!

"தெய்வத்துக்குப் பயந்து நடந்துக்க - ன்னு சொல்றாங்களே... அந்தத் தெய்வ பயம் தேவை தானா?" அப்படின்னு ஒரு பெரியவரைப் பார்த்து கேட்டார் ஒருத்தர்.

"கடவுளை பயத்தின் மூலமா அடையவே முடியாது!" அப்படின்னு பதில் சொன்னார் அந்தப் பெரியவர். (ரஜனீஷ்) அதுக்கு உதாரணமா ஒரு கதையையும் சொன்னார்.

ஒரு பிச்சைக்காரன் ஒரு அனாதைச் சிறுவனை வளர்த்துக்கிட்டிருந்தானாம். அவங்க இருந்த குடிசைக்குப் பக்கத்துலே ஒரு சுடுகாடு இருந்துதாம். இந்தச் சின்ன பையன் ராத்திரி வேளையிலே அந்தச் சுடுகாடு பக்கமா போயி ஏதாவது குறும்பு செய்யாமே இருக்கணுமேன்னு நினைச்சான் அந்தப் பிச்சைக்காரன். அதுக்காக அந்தப் பையன்கிட்டே சொன்னான்.

"இதோ பாருப்பா... ராத்திரி வேளையிலே அந்தச் சுடுகாட்டுப் பக்கம் போனா... அங்கே இருக்கிற பேய்கள் உன்னைப் பிடிச்சி தின்னுடும்!" அப்படின்னு சொல்லி பயமுறுத்தி வச்சான்.

அந்தப் பையன் படிச்சு வாலிபனா வளர்ந்துட்டான். இருந்தாலும் இன்னமும் அவனுக்கு பேய் பற்றிய பயம் ஓயலே!

ஒரு நாள் பிச்சைக்காரன் அந்த பையனை ஒரு வேலை காரணமா வெளியூருக்கு அனுப்ப

வேண்டியிருந்துது... அவன் அந்த சுடுகாட்டைத் தாண்டிப் போயாகணும்... ராத்திரி நேரம்... இவன் பயந்து நடுங்க ஆரம்பிச்சுட்டான். இப்ப என்ன பண்றதுன்னு யோசிச்சான், அந்தப் பிச்சைக்காரன்.

ஒரு தாயத்தை எடுத்தான். அந்தப் பையனோட கையிலே அதைக் கட்டினான். கட்டிப்புட்டு... "இனிமே அந்தப் பேய்கள் உன்னை ஒண்ணும் பண்ண முடியாது.. கடவுள் அந்தப் பேய்கள் கிட்டேயிருந்து உன்னைக் காப்பாத்துவார்..!" - அப்படின்னான். இப்ப அந்தப் பையனுக்கு தைரியம் வந்துது. துணிச்சலா கிளம்பி போயிட்டான். அப்படிப் போகும் போது யோசிச்சான்.

"இப்ப... நாம... பேய்களைப் பார்த்து பயப்படுறோம்.... இந்தப் பேய்களே கடவுளைப் பார்த்து பயப்படும்ன்னா அந்தக் கடவுள் எவ்வளவு பெரிய பேயா இருக்கணும்..." இப்படி நினைக்க ஆரம்பிச்சான். உடனே பேய் பயத்தை விட கடவுள் பயம் அதிகமாப் போச்சு! அதே பயம்... கடவுளின் தரகர்கள் மாதிரி நடிக்கிற போலி மனிதர்கள் மேலேயும் ஏற்பட்டுப் போச்சு! பாவம் அந்தப் பையன். ராத்திரியிலே பேய்க்காக பயந்தான். பகல்லே மகா பேயான கடவுளுக்காக பயந்தான். போலிச் சாமியார்களைப் பார்த்தும் பயப்பட ஆரம்பிச் சுட்டான்.

இப்பத் தான் அந்தப் பிச்சைக்காரன் விபரீதத்தை உணர்ந்தான்.

அந்த பையன் கையிலே கட்டின தாயத்தை கழற்றி அவன் முன்னாடியே அடுப்புலே வீசினான். அன்னைக்கு ராத்திரியே அவனை அழைச்சிக்கிட்டு அந்த சுடுகாட்டுக்குப் போனான். அங்கே பேய் பிசாசு

எதுவும் இல்லேங்கறதை சுட்டிக் காட்டினான். எதுக்காக பேயைப்பத்தி சொன்னேன் - எதுக்காக தாயத்து கட்டி விட்டேன் - ங்கற உண்மையை விவரமாச் சொன்னான். அந்த இளைஞனுக்கு இப்ப மனசுலே ஒரு தெளிவு உண்டாச்சு!

அவன் மனசுக்குள்ளே இருந்த பேய் - பிசாசு எல்லாம் போச்சு... பயத்துனாலே உருவான போலிக் கடவுளும் 'போயிட்டு வாரேன்'ன்னு சொல்லிப்புட்டு போயிட்டார்.

மனுஷனுக்கு 'தான்' ங்கற எண்ணம் இருக்கு பாருங்க அதனாலே உருவாகிற துன்பங்கள்... கவலைகள்.. பாதுகாப்பற்ற நிலை... மரண பயம்... இதுலேயிருந்து தப்பிக்கறதுக்கு கடவுளே கதி - ங்கற சரணாகதி நிலையை அவன் உருவாக்கிக் கொள்கிறான் - அப்படிங்கறார் அந்தப் பெரியவர்.

இது ஒரு பக்கம் இருக்கட்டும்.

இந்தக் காலத்துலே பேய்... பிசாசுலாம் ரொம்ப சர்வ சாதாரணமான விஷயமாப் போச்சு...! அன்னைக்கு ஒருத்தரைப் பார்த்து,

"ஏன் சார்? நீங்க பேயை கண்ணாலே பார்த்திருக்கீங்களா?" - ன்னு கேட்டேன்.

அவர் மெதுவா என்கிட்டே வந்து...

"என்ன அப்படிக் கேக்கறீங்க... நான் அது கூட தானே முப்பது வருஷமா குடும்பம் நடத்திக்கிட்டு வாரேன்!" அப்படின்னு சொல்லிபுட்டு அலட்டிக்காமே போறார்.

# 38. போர் (BORE)

"1946 லே நான் வெளி நாடு போயிருந்தப்போ..." அப்படின்னு பேச ஆரம்பிப்பார் ஒரு பெரியவர். உடனே பக்கத்துலே உக்கார்ந்திருக்கவங்கள்லாம் மெதுவா எழுந்திரிச்சி நழுவ ஆரம்பிச்சிடுவாங்க! ஏன் அப்படி நழுவ ஆரம்பிக்கிறாங்க? அவரு வெளிநாடு போயிட்டு வந்த கதையை கேக்கறதுக்கு விருப்பம் இல்லாமலா? அப்படி இல்லே.. அந்தக் கதையை ஒரு தடவை ரெண்டு தடவை கேக்கறதுன்னா நல்லா இருக்கும். அதே கதையை இப்ப 244வது தடவையா அவரு சொல்ல ஆரம்பிக்கிறார்...!

கேக்கறவங்களுக்கு 'போர்' அடிக்காமே என்ன சார் செய்யும்? அது தான் தப்பிச்சி ஓடப் பார்க்கறாங்க. நாம பேச ஆரம்பிச்சதும் எதிர்லே உக்கார்ந்திருக்கிறவர் எழுந்திரிக்கிறார்ன்னு வைங்க... நம்ம கிட்டே ஏதோ கோளாறுன்னு அர்த்தம். இதை அலட்சியமா விட்டுடப்புடாது... என்ன விஷயம்ன்னு சுயமா ஆராய்ச்சி பண்ணணும்!

இன்னைக்குத் 'தகவல்' லே BORE ஐ பத்தி ஒரு சின்ன ஆராய்ச்சி.

போர் அடிக்கிற ஆசாமிகளுக்கு ஒரு முக்கியமான விஷயம் தெரியறதில்லே - ங்கறார் ஒரு நிபுணர். அது என்ன தெரியுமா? அவங்க அடிக்கறது 'போர்' ங்கறது அவங்களுக்குப் புரியறதில்லே! அது தான் கஷ்டம்!

போர் ஆசாமிகள் எப்படி இருப்பாங்க... அவங்க சுபாவம் எப்படி? - ன்னா...

அவங்களுக்குலாம் சொந்த திருப்தி தான் முக்கியமா இருக்கும். அவங்கள்லாம் Sensitive ஆ இருக்க மாட்டாங்க...! அவங்கள்லாம் தங்களைப் பத்தியே அதிகமா பேசிக்கிட்டிருப்பாங்க. மத்தவங்க மத்தியிலே நாம ஒரு BORE ஆசாமின்னு பேர் வாங்கப் புடாதுன்னா... சில நுணுக்கங்களை தெரிஞ்சி வச்சிருக்கணும். அடுத்தவங்ககிட்டே எப்பப் பார்த்தாலும் நம்மளைப் பத்தியும் நம்ம குடும்பத்தைப் பத்தியுமே பேசிக்கிட்டிருக்கப் புடாது!

'நான்'... 'எனது'... ங்கற வார்த்தைகளை வரிக்கு வரி உபயோகப்படுத்திக்கிட்டிருக்கப் புடாது!

'நேத்து ராத்திரி என் பையன் ஒரு ஜோக் சொன்னான் பாருங்க...' ன்னு சுவாரஸ்யமா ஆரம்பிப்போம். அது நமக்கு வேணும்னா சுவாரஸ்யமா இருக்கும்... அடுத்தவங்களுக்கும் அப்படியே இருக்கணும்ங்கற அவசியமில்லே!

சில பேருக்கு Mental Mannerism உண்டு.

சில பேருக்கு Physical Mannerism உண்டு.

இதுவே மத்தவங்களுக்கு BORE ஆ தெரியும்! ஒரு குறிப்பிட்ட வார்த்தையை திருப்பித் திருப்பி உபயோகப்படுத்தறது சில பேருடைய Mannerism! I mean ங்கற வார்த்தை அப்படித்தான். சில பேர் வரிக்கு வரி... "என்ன நான் சொல்றது?" ன்னு திருப்பித் திருப்பி கேட்டுக்கிட்டே இருப்பாங்க... அவங்க அப்படி கேட்டுக்கிட்டே இருந்தா... என்னத்தை நாம சொல்றது?

நல்ல பேச்சை விருப்பமா கேக்கறவங்க தான் நல்ல விதமா பேச முடியும்! நாம பேசறதைத் தான் மத்தவங்க கேட்டுக்கிட்டு இருக்கணும்ன்னு

நினைக்கிறவங்க... BORE ஆசாமியாத் தான் இருப்பாங்க.

சரி BORE ஐ Cure பண்ண முடியும்?

முடியும்! ஆரம்பத்துலேயே இதை கவனிக்கணும். சுயமா சிந்திச்சுப் பார்க்கணும். நம்ம சம்பந்தப்பட்ட விஷயங்கள்லே மட்டும் நாம interest ஆக இருந்துடப் புடாது! நம்ம சுத்தியிருக்கிற விஷயங்கள்லேயும் interest எடுத்துக்கணும்!

சுறுசுறுப்பா வேலை செய்யறவங்களுக்குப் போர் அடிக்கறதில்லே! சும்மா உக்கார்ந்து இருக்கறவங்களுக்குத் தான் போரடிக்கும். அதனாலே எப்பவும் Active ஆக இருக்கப் பழகிக்கணும்.

ஒரு வாத்தியார் பிள்ளைங்களைப் பார்த்து "நான் அடுத்த வருஷம் ரிட்டயர் ஆகப் போறேன்!" ன்னார்.

உடனே ஒரு பையன் அழ ஆரம்பிச்சுட்டான்.

வாத்தியார் அவனுக்கு ஆறுதல் சொன்னார்.

"அழாதேப்பா... இன்னும் ஒரு வருஷம் உங்க கூட தான் இருப்பேன்! அடுத்த வருஷம் தானே ரிட்டயர் ஆகப் போறேன்!" ன்னார்.

பையன் கண்ணைத் துடைச்சிக்கிட்டு... "நீங்க இந்த வருஷமே ரிட்டயர் ஆகப் போறதா நான் நினைச்சிட்டிருந்தேன் சார். இன்னும் ஒரு வருஷம் இருக்கு போலே இருக்கே... அது தான் எனக்கு அழுகை வந்துட்டுது!" அப்படின்னான்.



# 39. தொலைவு இருத்தல்!

எனக்குத் தெரிஞ்ச ஒருத்தர்.

சொந்தமா ஒரு கார் வச்சிருக்கார்.

அதுலே ஏறி உட்கார்ந்து ஓட்ட ஆரம்பிச்சார்ன்னா போதும். வழியிலே போறவங்க வர்றவங்களை யெல்லாம் திட்டிக்கிட்டே போவார்.

இதோ இவரு மட்டும் தான் சாலையிலே ஒழுங்கா போறது மாதிரியும் மத்தவங்கள்லாம் தாறுமாறா போறது மாதிரியும் அவருக்கு நினைப்பு.

எதிர்லே யாருமே வரலைன்னு வச்சிக்குங்க...

அப்பவும் திட்டுவார்... "என்ன சார் ரோடு இது... சுடுகாடு மாதிரி!" - ம்பார்.

அப்படி ஒரு பழக்கம் அவருக்கு!

இப்படிப்பட்டவங்களுக்கெல்லாம் வசதியா அமையக் கூடிய ஒரு தொழில்நுட்பம் தான் 'தொலைவு இருத்தல்' அப்படிங்கறது. அதாவது Telepresence. இது ஒரு நவீன உத்திமுறை. நம்மைத் தொலைவுலே அங்கே இருக்கிறதாகவே நினைக்கச் செய்யும் ஒரு தோற்ற அனுகூலம்.

இது எப்படின்னா...

கார் ஓட்டறவர் கார்லே தான் இருக்கணும்ங்கற கட்டாயமில்லே. அவரு இன்னொரு ஊர்லே கூட இருக்கலாம்.

அதாவது ஒருத்தர் மதுரையிலே உக்கார்ந்துகிட்டு சென்னை அண்ணாசாலையிலே வண்டி ஓட்டலாம். வழியிலே போறவங்க வர்றவங்களை திட்டலாம். வம்பு வராது. ஏன்னா அவங்க காதுலே இது விழாது.

இது எப்படி விவரம்ன்னா-

'தொலைவு இருப்பு முகமூடி' ன்னு ஒண்ணு... அதை தலையிலே மாட்டிக்க வேண்டியது. அந்த முகமூடிக்குள்ளே ஒரு சின்ன திரை இருக்கும். நீங்க இதை மாட்டிக்கிட்டு மதுரையிலே - ஒரு குளிர்சாதன அறைக்குள்ளே கணிப்பொறிப் பெட்டிகளுக்கு மத்தியிலே உக்கார்ந்திருக்கீங்க..

அந்த சின்னத் திரையிலே சென்னையிலே உள்ள அண்ணாசாலை தெரியுது... எதிர்லே வர்ற கார்... குறுக்கே போற சைக்கிள் எல்லாம் தெரியுது.

கார் டிரைவர் சீட்டுலே நீங்க உக்கார்ந்திருந்தா என்னென்ன தெரியுமோ அது எல்லாமே அந்த சின்னத் திரையிலே தெரியிது...

அப்புறம் என்ன கஷ்டம்? நீங்க பாட்டுக்கு மதுரையிலே ஓர் அறைக்குள்ளே உக்கார்ந்துகிட்டே சென்னையிலே காரை ஓட்டிக்கிட்டுப் போகலாம். சைக்கிள் குறுக்கே வருதா... சடார்ன்னு வண்டியை நிறுத்தலாம். இடது பக்கம் முந்தி ஒரு ஸ்கூட்டர் ஆசாமி வேகமா போறாரா... அவரை விரட்டிப் பிடிக்கலாம்.

சென்னை அண்ணா சாலையிலே நீங்க வண்டி ஓட்டறது நிஜம். ஆனால் மதுரையிலே உங்க முகமூடிக்குள்ளே தெரியறது மாயத் தோற்றம்... அதை மாய நிஜம் அல்லது மாய யதார்த்தம்ன்னு சொல்றாங்க - VirtualReality!

விண்வெளி ஆராய்ச்சிக்கெல்லாம் இந்தத் தொழில் நுட்பம் ரொம்ப உபயோகம். எந்திர மனிதர்களை செவ்வாய் கிரகத்துலே இறக்கி விட்டுட வேண்டியது... இங்கே முகமூடியை மாட்டிக்கிட்டு உக்கார்ந்து கிட்டே அவங்களை வேலை செய்ய வைக்கலாம். எந்தப் பக்கம் போகணுமோ - போக வைக்கலாம்... மண்ணைத் தோண்டி எடுக்கணுமா - எடுக்க வைக்கலாம்... அங்கே போயி நாம என்னென்ன செய்யணும்ன்னு நினைக்கிறோமோ அதையெல்லாம் இங்கே இருந்துக்கிட்டே செய்யலாம்.

பூமியிலே இருக்கிற கட்டுப்பாட்டு அறைக்குள்ளே இருந்துக்கிட்டு... முக மூடியை மாட்டிக்கிட்டு - கை கால்கள்லே மின்னணு உணர் கருவிகளை பதிச்சிக்கிட்டு செவ்வாய் கிரகத்துலே உள்ள 'தொலைவு ஊர்திகளை' இயக்கலாம். (Tele operation of Remotely oriented vehicles) செவ்வாய் கிரகத்துலே சேகரிக்கப்படற தகவல்கள் மின்காந்த அலைத் தொடர்பு வழியா பூமிக்கு வந்து சேர குறைஞ்சது 20 நிமிஷமாவது ஆவும்... ஆனா இந்த முகமூடியைப் போட்டிருக்கிறவர் உடனுக்குடன் அங்கே பார்க்கறதை நேரடி வர்ணனை செய்யலாம்.

இந்த 'மாயத் தோற்ற அறிவியல்' எதிர்காலத்துலே பெரிய பெரிய வேலையெல்லாம் செய்யப் போவுது. இந்த வசதி வர்றவரைக்கும் நாமல்லாம் டிரைவர் சீட்டுலே உக்கார்ந்து கார் ஓட்டறது தான் நல்லது.

ஒரு பேருந்து ஓட்டுநர் திடீர்ன்னு சிரிக்க ஆரம்பிச்சாராம்.

"ஏன் சிரிக்கிறீங்க?" - ன்னிருக்கார் பக்கத்துலே இருந்தவர்.

"துன்பம் வரும் போது சிரிக்கச் சொல்லி யிருக்காங்க பெரியவங்க... அதனாலே சிரிக்கிறேன் ன்னார்!"

"யாருக்குத் துன்பம் இப்போ?" - ன்னார் இவர்.

"நம்ம எல்லாருக்கும் தான்!" - ன்னார் அவர்.

"எப்படி சொல்றீங்க?" - ன்னார்.

"எதிர்லே பாருங்க ஒரு சக்கரம் உருண்டு ஓடிக்கிட்டிருக்கு!" - ன்னார் அவர்.

"அந்த சக்கரத்துக்கும் நம்ம துன்பத்துக்கும் என்ன சம்பந்தம்?" - ன்னார் அவர்.

"அது நம்ம பஸ்லேயிருந்து தான் கழண்டு ஓடிக்கிட்டிருக்கு!" அப்படின்னார் அவர்.



# 40. அம்மா பிள்ளைகள்

சில பேர் குழந்தைகள்கிட்டே பேசும் போது பார்த்தீங்கன்னா... குழந்தை மாதிரியே பேசுவாங்க! அதாவது மழலை மொழியிலேயே பேசுவாங்க. அப்படிப் பேசினாத் தான் குழந்தைக்குப் பிடிக்கும் - புரியும் - ங்கறது இவங்க நினைப்பு!

ஆனா அப்படிப் பேசறது தப்புங்கறாங்க ஆராய்ச்சியாளர்கள்.

நாம பேசறதை பார்த்துத் தானே குழந்தைகள் பேசக் கத்துக்கணும்...

நாமளே குழந்தைகள் மாதிரி பேசிக்கிட்டிருந்தா அதுகள் நல்ல விதமா பேசக் கத்துக்கறது எப்படி?

இதனாலே குழந்தையின் பேசக் கற்றுக் கொள்கிற வேகம் தடைப்படும்!

ஒரு பத்துக் குழந்தைங்க கிட்டே... உனக்கு அப்பாவைப் பிடிக்குமா? அம்மாவைப் பிடிக்குமா? ன்னு கேட்டா... பாதிக் குழந்தைகளுக்கு மேலே அம்மாவைப் பிடிக்கும்ன்னு தான் சொல்லும்!

அப்பா என்ன பாவம் பண்ணினார்.

அது ஒண்ணுமில்லே...

குழந்தை தாய் வயிற்றுலே ஏழு மாச குழந்தையா இருக்கிறப்பவே அம்மா குரலைக் கேட்டுக்கிட்டு உக்கார்ந்திருக்குமாம்! தாயின் வயிற்றுக்குள்ளே ஒரு சின்ன 'மைக்' கை வச்சி ஒலிப்பதிவு பண்ணிப் பார்த்திருக்காங்க. மத்தவங்க பேசறதை விட

அம்மாவே பேசற குரல் தான் ரொம்பத் தெளிவா கேட்குதாம்!

ஆக ஒரு குழந்தை ஆரம்பத்துலே இருந்தே கேட்கிற குரல் அம்மாவின் குரல்! அதனாலே தான் அம்மான்னா ஒரு தனி பாசம்! தாயின் பேச்சைக் கேட்டு... வயத்துலே இருக்கிற குழந்தை பேசக்கத்துக்குது. பிறக்கும் போதே நமக்கெல்லாம் தாய் மொழிப்பற்று உண்டுன்னு ஆராய்ச்சியாளர்கள் சொல்றாங்க!

பிரஞ்சு மொழி பேசற ஒரு குடும்பத்துலே ஆராய்ச்சி நடத்தினாங்களாம்! பிறந்து நாலு நாள் ஆகறதுக்குள்ளே குழந்தை ரஷ்ய மொழியை விட பிரஞ்சு மொழியை விரும்புதுங்கறதை தெளிவு படுத்தியிருக்காங்க. இன்னொரு செய்தி.

எட்டு வயசுக்கு மேலே புதுசா கற்றுக் கொள்கிற எந்த மொழியுமே தாய் மொழியை விட கஷ்டமாத்தான் இருக்குமாம்! ஒரு குழந்தை பிறந்து எட்டு மாசம் ஆனதுமே... அதுக்கு நாம பேசற பேச்சு புரிய ஆரம்பிச்சுடும்! அதனாலே அதுக்கப்புறமும் அது கிட்டே உக்காந்துகிட்டு சின்ன குழந்தை மாதிரி நீங்களும் மழலை பேசிக்கிட்டு இருக்காதீங்க!

தெளிவா நல்ல தமிழ்லே பேசுங்க... அது புரிஞ்சிக்கும் - கத்துக்கும்! அந்த நேரத்துலேயெல்லாம் நாம பேசறதை நாம பேசறது மாதிரியே குழந்தை திருப்பிச் சொல்லும்! - கிளி மாதிரி! தானே யோசிச்சிப் பேச ரெண்டு மூணு வருஷம் ஆகும். அதுக்கிடையிலே குழந்தை தப்புத் தப்பா வார்த்தைகளைப் போட்டுப் பேச ஆரம்பிக்கும்!

இப்ப உதாரணத்துக்கு... பூனைக்குட்டி வந்தார். அப்பா போச்சு... இப்படியெல்லாம் பேசும்...

அதைப் பார்த்துச் சிரிக்கப்புடாது... கிண்டல் பண்ணக் கூடாது. வார்த்தை வித்தியாசத்தைப் பொறுமையா சொல்லிக் கொடுக்கணும். நீங்களும் நிறைய பேசணும்... குழந்தைகளையும் நிறைய பேசச் சொல்லணும்! நல்லா பேசிக்கிட்டிருக்கிற குழந்தை கிட்டே போயி வாயை மூடு - ன்னு சொல்லிக்கிட்டிருக்கப் புடாது!

ஜான்லாக் அப்படிங்கற அமெரிக்க விஞ்ஞானி இதைப் பத்தியெல்லாம் நிறைய ஆராய்ச்சி பண்ணியிருக்கார்.

அவர் தான் சொல்றார்... குழந்தை தாயின் வயிற்றில் ஏழு மாசமா இருக்கறப்பவே பேசக் கத்துக்க ஆரம்பிச்சுடுது - அப்படின்னு! சீக்கிரம் பேச ஆரம்பிச்சுடற குழந்தை புத்திசாலியா இருக்கும்ன்னு சில பேர் சொல்றது உண்டு! அதுவும் ஒரு பொய்யான நம்பிக்கை தான் - ங்கறார் இந்த ஆராய்ச்சியாளர்.

பிறந்த குழந்தைக்கு அப்பாவை விட அம்மாவைப் பிடிச்சிருக்கிறது ஏன்? - ங்கற கேள்விக்கு இவருடைய ஆராய்ச்சி விடை சொல்லுது.

அப்பாக்கள் குழந்தைகள்கிட்டே கெட்ட பேர் வாங்கறதுக்கு வேறே பல காரணங்களும் உண்டு. ஒரு அப்பா தன் பிள்ளையைப் பார்த்துக் கேட்டார்.

"உங்க கணக்கு வாத்தியார் Home Work கொடுத்திருக்கிறதா சொன்னியே... அதுக்கு நான் ஏதாவது உதவி பண்ணவா? அந்தக் கணக்கை நான் போட்டுத தரவா?" ன்னு கேட்டார்.

"வேணாம்ப்பா! நானே அதை தப்பா போட்டுக்கறேன்!" அப்படின்னான் பையன்.



# 41. அறிவியல் மோசடிகள்

மனித அறிவு மகத்தான சாதனைகள்லாம் செய்துகிட்டு தான் இருக்கு!

விஞ்ஞானம் வேகமா வளர்ந்து கிட்டுத் தான் இருக்கு.... விஞ்ஞானம் வளர்ற வேகத்துக்கு மனித நேயமும்... பண்பாடும் வளர்ந்து கிட்டே போகணும்.

அப்பத் தான் அறிவியலின் பயன்பாடுகளை நாம அனுபவிக்க முடியும்... ஆனா... என்ன பண்றது...

இயந்திரங்களைப் பழுது பார்க்கறது சுலபமா இருக்கு! மனிதனைப் பழுதுப் பார்க்கறது ரொம்பக் கடினமா இருக்கு! அதனாலே தான் ... ஒரு பக்கம் மனித அறிவு புதுசு புதுசா எதையாவது கண்டு பிடிச்சுக்கிட்டே இருக்கு... அது அறிவியல் சாதனைகள்! இன்னொரு பக்கம் அதே மனித அறிவு... எப்படி புதுசு புதுசா ஏமாத்தலாம் ன்னும் கண்டு பிடிச்சுக்கிட்டே இருக்கு... இது அறிவியல் மோசடிகள்!

கணிப்பொறி வந்தாச்சு... இனிமே கவலை இல்லையென்று நினைக்கிறோம்....

ஆனா அதுக்குள்ளேயும் மனிதன் புகுந்து ஏமாத்த ஆரம்பிக்கிறானே!

இன்டர்நெட் - வந்தாச்சு...

இருந்த இடத்துலேயே இருந்துகிட்டே 'கம்ப்யூட்டர்' மூலமா உலகளாவிய தகவல்களைத் தெரிஞ்சிக்க முடியுது. இது பெருமை தான்!

இதே தொழில் நுட்பத்தைக் கொண்டே அறிவியல் மோசடிகளும் நடந்து கிட்டிருக்கே!

இங்கிலாந்துலே ஒரு பெரிய எலெக்ட்ரிக் கம்பெனி... அந்தக் கம்பெனியின் கம்ப்யூட்டரில் இன்டர்நெட் தொடர்பு மூலம் ஊடுருவிய சிலபேர் அதுலே பதிவாகியிருந்த ஆராய்ச்சி - தொழில் நுணுக்கத் தகவல்களை திருடிக்கிட்டாங்களே!

கம்ப்யூட்டர் திருட்டு மூணுவகை.

அதாவது கம்ப்யூட்டர் மூலமா மூணு வகையிலே மோசடி நடக்குது!

ஒண்ணு - ஸ்நிஃப்பிங்

ரெண்டு - ஸ்பூஃப்பிங்

மூணு - கிராக்கிங்

மின்னணு சாதனங்கள் மூலமா அடுத்தவங்களுக்கு வர்ற தகவல்களைப் படிக்கறது இருக்கு பாருங்க... அது 'ஸ்நிஃப்பிங்!'

கம்ப்யூட்டர்-லே மோசடியான கணக்கு வழக்குகளை மேற்கொள்றது இருக்கு பாருங்க... அது 'ஸ்பூஃப்பிங்!'

கம்ப்யூட்டர்-லே அடுத்தவங்க பதிவு பண்ணி வச்சிருக்கற ரகசியத் தகவல்களைத் திருடுறது இருக்கு பாருங்க - அது தான் 'கிராக்கிங்'.

சரி... இது மாதிரி முறை கேடுகளை எப்படித் தடுக்கிறது? அதுக்கும் வழி இருக்கு....

கம்ப்யூட்டர் முறை கேடுகளைத் தடுக்கறத்துக்கு 'என் கிரிப்ஷன்' - ங்கற வழி முறையைப் பின்பற்றலாமாம்.

இது என்ன வழி முறைன்னா...

ஒரு குறிப்பிட்ட ரகசிய விசையை - (கீ) பயன்படுத்தி தகவல்களைச் சங்கேத வடிவில் அனுப்பறது... அடுத்த முனையிலே இந்தத் தகவல்களைப் பெறுகிறவர் வேறொரு விசையைப் பயன்படுத்தி, இந்த சங்கேத செய்தியை சாதாரண தகவலாக மாற்றிக் கொள்ள வேண்டியது... அவ்வளவு தான்.

தகவல் தொழில் நுட்பம் சம்பந்தமா கருத்தரங்கு ஒண்ணு நடந்துது... அதுலே என்ன சொல்றாங்கன்னா இரண்டாயிரமாவது ஆண்டில் சுமார் 21 லட்சம் கோடி ரூபாய் மதிப்புக்கு இன்டர்நெட் சாதனங்கள் மற்றும் சேவை வர்த்தகம் நடைபெறும் ன்னு சொல்றாங்க!

அப்படின்னா... இவ்வளவு மதிப்புள்ள ஒரு துறையிலே மலிந்துள்ள மோசடியைத் தடுக்கறதுக்கு எவ்வளவு எச்சரிக்கை உணர்வு தேவைப் படும்ங்கறதையும் கொஞ்சம் யோசிச்சுப் பாருங்க!

இப்ப உள்ள குழந்தைகளைப் பார்த்தா வருங்காலத்துலே அவங்க அப்படி ஒண்ணும் சுலபமா ஏமாந்துட மாட்டாங்கன்னு தான் தெரியுது!

ஒரு குழந்தை தெருவுலே விளையாடிக் கிட்டிருந்துது... ஒரு திருடன் வந்தான்... மெதுவா அந்தக் குழந்தைக்கிட்டே போயி "பாப்பா... உங்க வீட்டுலே நகையெல்லாம் எங்கே வச்சிருக்காங்கன்னு உனக்குத் தெரியுமா?" - ன்னான்.

"ஓ... தெரியுமே!" - ன்னுது அந்தக் குழந்தை.

"அப்படின்னா... எங்கே வச்சிருக்காங்கறதை என்கிட்டே சொல்லேன்... உனக்குச் சாக்லேட் வாங்கித் தாரேன்!" - ன்னான் திருடன்.

"நீ முதல்லே சாக்லேட் வாங்கிக் குடு... அப்புறமாச் சொல்றேன்!" னுது குழந்தை.

திருடன் பக்கத்துலே இருந்த கடைக்கு ஓடிப் போய் ஒரு சாக்லேட் வாங்கிக் கிட்டு வந்து குடுத்தான்.

இந்தக் குழந்தை அதை வாங்கிச் சாப்பிட்டுது...

"இம்...! இப்ப சொல்லுன்னான்!" - அவன்.

"இன்னொரு சாக்லெட் வேணும்!" - ன்னுது குழந்தை.

திருடன் மறுபடியும் ஓடிப்போய் வாங்கியாந்து குடுத்தான்.

இது வாங்கி சாப்பிட்டுது.

இப்படியே ஒரு ஏழெட்டு சாக்லேட் வாங்கிச் சாப்பிட்டுட்டு தண்ணி வேணும் ன்னுது. அதுவும் கொண்டாந்து குடுத்தான். அப்புறம் கேட்டான் "இப்ப சொல்லு பாப்பா... உங்க வீட்டுலே நகையெல்லாம் எங்கே வச்சிருக்காங்க... சொல்லு பார்க்கலாம்!" ன்னான் அந்தத் திருடன்.

இப்பத் தான் அந்தக் குழந்தை மெதுவா வாயைத் திறந்து, "அடகுக் கடையிலே வச்சிருக்காங்க!" அப்படின்னுது!



# 42. இன்டர்நெட் இல்லறம்

ஒரு கல்யாணம்ன்னு நடக்கணும்ன்னா பொண்ணும் மாப்பிள்ளையும் பக்கத்துப் பக்கத்துலே உட்காரணும். அப்பத் தான் தாலி கட்ட முடியும். மோதிரம் மாத்திக்க முடியும்... அல்லது மாலையாவது மாத்திக்க முடியும்.

அறிவியல் முன்னேற்றம்... இனிமே அந்த அவசியமும் வேண்டாம் ன்னு சொல்லுது.

ஆளுக்கு ஒரு ஊர்லே இருந்தா கூட 'இன்டர்நெட்' மூலமா கல்யாணம் பண்ணிக்கலாமாம்.

கல்யாணப் பத்திரிகை கூட அடிக்க வேண்டியதில்லை. 'செல்போன்' லேயே அழைப்பு விடுக்கலாம்.

கல்யாணம் விசாரிக்க வர்றவங்க கூட ரயில் ஏறி, பஸ் ஏறி கல்யாண மண்டபத்தைத் தேடி கண்டுபிடிச்சி வந்து சேர வேண்டிய அவசியம் இல்லே.

அவங்க அவங்க வீட்டுலேயே கம்ப்யூட்டர் முன்னாடி வந்து உக்கார்ந்தா போதும். அங்கே இருந்தே வாழ்த்து சொல்லிக்கலாம்.

நியூயார்க்லே ஜோய்ஸ் - எரிக் இவங்க இரண்டு பேரும் 'ஈமெயில்' மூலமா நண்பர்கள் ஆனாங்களாம். அப்புறம் நேர்லேயும் சந்திச்சிக்கிட்டாங்களாம்.

'நம்ம கல்யாணம் புது முறையிலே நடக்கணும்... ஏராளமான பேர் அதைப் பார்க்கணும்' - ங்கறது அவங்க ஆசை. அதனாலே-

'இன்டர்நெட்'டின் ஆன் லைன் வெட்டிங் மெகசின் வெப்சைட்டைத் தேர்வு செஞ்சாங்க.

அதுலே... மனசுலே தோன்றினதை கம்ப்யூட்டர் கீ போர்டில் அடித்து திருமண ஒப்பந்தம் செஞ்சுகிட்டாங்க.. மணப்பெண் அலங்காரம்லாம் பண்ணிக்கிட்டு அப்பா அம்மாவையும் அழைச்சிக் கிட்டு நியூயார்க்லே, டைம் சதுக்கத்தில்... அங்கே உள்ள ஒரு கம்ப்யூட்டர் முனையில் வந்து உட்கார...

மறுமுனையிலே புளோரிடாவுலே மணமகன் கம்ப்யூட்டர் முன்னாடி உட்கார்ந்திருக்கார்.

வெப்சைட்டில் இரண்டு பேரும் சந்திச்சாங்க.

கடைசி நிமிடத்தில் கூட உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் செல் போனில் அழைப்பு...

"எங்கள் திருமணத்துக்கு நீங்க அவசியம் வரணும்... உடனே உங்கள் கம்ப்யூட்டரில் வந்து எங்களை வாழ்த்துங்கள்" - அப்படின்னு!

மணமகள் கீபோர்டுலே அடிச்ச செய்தி என்ன தெரியுமா?

இந்த நன்னாளில் உன் தரப்பில் இருந்து எனது வாழ்க்கையை வாழ்வேன் என்று உறுதி அளிக்கிறேன். உனது உண்மையான அன்புக்கு எனது அழகான பரிசு இது தான்"

இது தான் மணமகள் ஜோய்ஸ் சுல்மான் அனுப்பிய செய்தி.

பதிலுக்கு மணமகன் எரிக் சோகன் அனுப்பிய செய்தி.

"ஜோய்ஸ், எனது அன்பை உனக்கு வெளிப்படுத்தும் நெருக்கமான செயலுக்கு வந்து விட்டேன். உன்னை நான் நேசிக்கிறேன். உன்னிடம் என்னை முழுமையாக ஒப்படைக்கிறேன்... வாழ் நாள் முழுவதும்!"

இந்த செய்திப் பரிமாற்றத்துக்குப் பிறகு திருமணம் முடிந்ததாக அறிவிக்கப்பட்டது.

இந்தசைட்டில் காதலர்களுக்கும் தம்பதிகளுக்கும் ஏராளமான அறிவுரைகள்.

இந்த சைட்டிற்கு மாசம் 15 லட்சம் வர்றதாக ஒரு கணக்கு.

ஒவ்வோர் ஆண்டும் ஜுன் மாதத்தின் மூன்றாவது சனிக் கிழமையன்று இந்த 'சைட்'லே திருமணங்கள் நடத்தி வைக்கிறாங்களாம்.

ஆண்டுக்கு 23 லட்சம் பேர் இந்த சைட்டின் மூலமா கல்யாணம் பண்ணிக்கலாம்ன்னு திட்டமிட்டு இருக்காங்களாம். பார்த்தீங்களா?

கம்ப்யூட்டர் ன்னு ஒண்ணு வந்து கல்யாணம்ங்கற ஒரு பெரிய விஷயத்தை எவ்வளவு சுலபமா ஆக்கிட்டுது பாருங்க!

இது மாதிரி கல்யாணங்கள் அதிகமாப் போச்சுன்னா நம்ம ஊர்லே சிலபேருக்கு ரொம்ப கஷ்டமா போயிடும்.

அப்படிப்பட்டவங்க யாரு தெரியுமா?

இந்தக் கதையைக் கேளுங்களேன்.

ஒரு கல்யாண மண்டபத்துலே கல்யாணம் விசாரிக்கப் போனவர்... விசாரிச்சுட்டுத் திரும்பி வந்துக்கிட்டிருக்கார்.

எதிர்லே வர்ற நண்பர் இவரை பார்த்து, "கல்யாணத்துக்குப் போயிட்டு வர்றியே...ஜோடிப் பொருத்தம் எப்படி?" ன்னு கேட்டார்.

"அவசரத்துலே எடுத்தேன்... ரெண்டும் ஒரே கால் செருப்பா போயிட்டுது!"

அப்படின்னார் அவர்.



# 43. குரல் வளம்

இசை விழாவுக்குப் போயிருந்தேன்.

ஒருத்தர் பாடிக்கிட்டிருந்தார். கணீரென்ற குரல்.

“அது எப்படிங்க... இந்த வயசுலேயும் அவருக்கு குரல் கெட்டுப் போகாமே இருக்கு?” - ன்னு கேட்டேன். பக்கத்துலே உட்கார்ந்திருந்த டாக்டர் ஒருத்தர் கிட்டே!

“வயசு ஏற ஏற குரல் மங்கிப் போறதாக நாம சொல்றது உண்டு. ஆனா அது அப்படி இல்லே... உண்மையிலேயே வயசுக்கும் குரல் மங்கிப் போறதுக்கும் சம்பந்தம் இல்லை!” - ன்னார் அவர்.

அதுக்கப்புறம் கச்சேரி முடிஞ்சதும் அவருகிட்டே கொஞ்ச நேரம் பேசி நிறைய விவரங்களைத் தெரிஞ்சிக்கிட்டேன்.

குரல் வளத்தை சரியா கவனிச்சிக்கிட்டிருந்தா 80 வயசைத் தாண்டினாக்கூட க்ணீர்ன்னு பேசலாமாம் - பாடலாமாம்!

சரி!

இந்த குரல் உதயமாகிறது எங்கே?

‘குரல் நாண்’ - ன்னு சொல்றோமே ‘Vocal Chord’ -அங்கேயிருந்து தான் இது ஆரம்பம்.

இணைந்த குரல் நாண் வழியா காற்று போகிற போது அதிர்வு ஏற்பட்டு ஓசை உண்டாகுது! குரல் நாணுக்கு அசையற தன்மை உண்டு. சுற்றியுள்ள

தசைகளே இந்த அசைவை ஏற்படுத்துதாம்! இந்த அசைவுக்குத் தகுந்த மாதிரி வேறே வேறே ஓசை உண்டாகி வெளியிலே வருது!

குரல் வளையிலே உதயமாகிற போது குரல் ஓசை ரொம்பக் குறைவாத் தான் இருக்கும். ஆனால் குரல் வளைக்கு மேலே வரும் போது வேறே வேறே உறுப்புகளால் இந்த ஓசை அதிகரிக்குது.

குரல் நாண் எப்படின்னா... கிராமங்கள்ளே சின்ன பிள்ளைங்க இரண்டு இலையை ஒட்டி வைச்சி ஊதும் போது சத்தம் வருமே... அது மாதிரி தான் சத்தத்தை உண்டாக்குது.

காற்று வெளியிலே வருகிற அழுத்தத்துக்குத் தகுந்த மாதிரி குரல் நாண் அசையுதா? அல்லது குரல் நாணின் அசைவுக்குத் தகுந்த மாதிரி காற்று வெளியிலே வருதா?

இதை இன்னமும் ஆராய்ச்சி பண்ணிக்கிட்டு இருக்காங்களாம்!

இருந்தாலும் குரல் நாணின் அசைவும், காற்று வெளியே வரும் அழுத்தமும் சேர்ந்து தான் குரல் ஓசை உண்டாகுதுங்கறது உண்மை.

இந்த ஓசையைத் தான் நாம வார்த்தைகளா மாத்தி எண்ணங்களை பரிமாறிக்கிறோம்!

பெரும்பாலும் வயசான காலத்துலே குரல் வளத்தை இழக்கறவங்க யாருன்னு பார்த்தா...

இளமைக்காலத்துலே மிக அதிகமான சத்தம் போடறவங்க தான்!

ஆசிரியர்கள், சந்தையிலே கூவி சத்தம் போட்டு வியாபாரம் செய்யவறங்க, மேடைப் பேச்சாளர்கள், மேடைப் பாடகர்கள், நாடக நடிகர்கள்... சினிமா நடிகர்கள்... அரசியல்வாதிகள்... இந்த பட்டியல்லே சேராத சில பேருக்கும் குரல் வளம் குறைஞ்சு போவுதேன்னு பார்த்தா... அவங்கள்லாம் வீட்டிலேயே அதிகமா சத்தம் போட்டுப் பேசுற பழக்கம் உள்ளவங்களா இருக்காங்களாம்.

குழந்தைகளை மிரட்டாதீங்க... அது கூட உங்க குரல் நாணைப் பாதிக்கும்!

குரல்வளத்தை அவசியம் காப்பாத்தணும்ன்னு நினைக்கிறவங்க செய்ய வேண்டியது என்ன?

சத்தம் போட்டுப் பேசறதைக் குறைச்சா மட்டும் போதாது! புகை பிடிக்கக் கூடாது. புகை பிடிக்கிறவங்க பக்கத்துலேயும் இருக்கக் கூடாது. மது அருந்தக் கூடாது. அதிக சூடான உணவு... காரமான உணவு... இதையெல்லாம் குறைக்கணும்! அமிலத் தன்மை இல்லாத உணவு தான் நல்லது. தொலைபேசியிலே பேசும் போது... அடுத்த ஊருக்கே அது நேரடியா கேக்கற அளவுக்கு சத்தம் போட வேண்டியதில்லை! அடிக்கடி கனைக்கறதை பழக்கமாக்கிக்க கூடாது. அதிக வீரியம் உள்ள (மென்தால்) மருந்துகளை அதிகமா சாப்பிடக் கூடாது.

பொதுவா பல பேர் தேவையில்லாமே வாயைத் திறந்து பேசறதைக் குறைச்சாவே போதும்! குரல் வளத்தைக் காப்பாத்திக்கலாம்.

சில ஆண்கள் பேசறதைப் பாருங்க... பெண் குரல் மாதிரி இருக்கும்.

கீச்சுக் குரல்!

இதையெல்லாம் சிகிச்சை மூலமா சரி செஞ்சுடலாமாம்!

தொலைபேசியிலே ரெண்டு பேரு பேசிக்கிட்டிருந்தாங்க.

"ஹலோ! இது பாபு வீடு தானே!" - அப்படின்னுது ஒரு குரல்.

"ஆமாங்க!" - ன்னுது இன்னொரு குரல்.

"என் பையன் ராமுவும் உங்க பையன் கூட தான் படிக்கிறான்!" - அப்படின்னுது இது.

"அப்படிங்களா ரொம்ப சந்தோஷம்!" - ன்னுது அது.

"உங்க குரல் குயில் மாதிரி இனிமையா இருக்குங்க... நீங்க பாபுவோட அம்மா தானே!" - அப்படின்னுது இது.

இதுக்கு அது, "இல்லீங்க! அப்பா!" - அப்படின்னுது!



# 44. முட்டாள் ஜனங்கள்

ஒரு பெரிய நினைவு மண்டபம்.

அதுக்கு முன்னாடி ஒரு அப்பாவும் பிள்ளையும் நின்னுக்கிட்டிருந்தாங்க.

அந்த வழியா போறவங்க - வர்றவங்கள்லாம் அந்த இடத்துலே நின்னு 'அது என்ன மண்டபம்' ன்னு விசாரிக்க ஆரம்பிச்சாங்க. அந்த அப்பாவும் பிள்ளையும் தான், வர்றவங்களுக்கெல்லாம் விவரம் சொல்லிக்கிட்டிருந்தாங்க. அதாவது... 'இந்த இடத்துலே ஒரு பெரிய மகான் சமாதி ஆயிருக்கார். அவர் சமாதி ஆன இடத்துலே இந்த நினைவு மண்டபத்தைக் கட்டியிருக்கோம்' - அப்படின்னாங்க ஊரு பூரா இந்த சேதி பரவுச்சி! நிறைய பேரு அந்த இடத்தைத் தேடி வர ஆரம்பிச்சாங்க. 'இங்கே வந்து கொஞ்ச நேரம் உக்கார்ந்துட்டுப் போனா மனசுக்கு ஒரு நிம்மதி கிடைக்குது! - ன்னாங்க.

அங்கேயிருந்த உண்டியல்லே நிறைய காசு போட்டுட்டுப் போனாங்க.

பணம் கிடு - கிடு - ன்னு நிறைய சேர ஆரம்பிச்சுது.

பணம் நிறைய சேர்ந்தவுடனே அந்த அப்பாவுக்கும் பிள்ளைக்கும் தகராறு வந்துட்டுது. பணம் சேர்ந்தாலே சொத்து தகராறு வரத் தானே செய்யும்!

பையன் அடிக்கடி நிறைய பணம் கேக்க ஆரம்பிச்சான்.

அப்பா பார்த்தார். யோசிச்சார். ஒரு முடிவுக்கு வந்தார். ஒரு நாள் பையனைக் கூப்பிட்டார்.

"இதோ பாருப்பா... நமக்குள்ளே தகராறு வேணாம். அப்பாவும் பிள்ளையும் இப்படி சண்டை போட்டுக்கிட்டா பார்க்கறவங்க தப்பா நினைப்பாங்க. அதனாலே நமக்குள்ளே சமரசமா இதைத் தீர்த்துக்குவோம். என்ன சொல்றே?" - ன்னார் அப்பா.

"சரி!" ன்னான் பையன்.

உடனே அந்த அப்பா என்ன பண்ணினார்...

மகன் கிட்டே கொஞ்சம் பணத்தைக் கொடுத்தார். தன்கிட்டே இருந்த ஒரு கழுதையையும் குடுத்தார்.

"இதை வச்சி நீ பிழைச்சிக்கோ!" ன்னு சொல்லி அனுப்பி வச்சுட்டார்.

மகன் அந்தக் கழுதையை இழுத்துக்கிட்டு அடுத்த ஊருக்குப் போனான். வழியிலேயே அந்தக் கழுதை செத்துப் போச்சி. உடனே என்ன பண்ணலாம்ன்னு யோசிச்சான். ஒரு ஐடியா பண்ணினான். அந்தக் கழுதையை ஒரு சாலை ஓரமா புதைச்சான். கையிலே இருந்த பணத்தை வச்சி அந்த இடத்துலே ஒரு கல்மண்டபம் கட்டினான்.

அந்த வழியா ரெண்டு பேர் வந்தாங்க. இது என்ன மண்டபம்ன்னு விசாரிச்சாங்க.

'இந்த இடத்துலே ஒரு பெரிய மகான் சமாதி ஆயிருக்கார்'. அப்படின்னான்.

இந்த சேதி ஊர் பூரா பரவுச்சி. நிறைய பேர் வந்து போக ஆரம்பிச்சாங்க. "இங்கே வந்தா மனசுக்கு ஒரு நிம்மதி கிடைக்குது!" ன்னாங்க. வர வர கூட்டம் அதிகமா வர ஆரம்பிச்சுது. உண்டியல்லே பணம் நிறைய சேர்ந்துட்டுது. நகையெல்லாம் கூட கழட்டி காணிக்கையா போட ஆரம்பிச்சாங்க. அப்பாவை விட மகன் பெரிய ஆளாயிட்டான். இதைக் கேள்விப் பட்டார் அப்பா. பையனைப் பார்த்துட்டு வரலாம்ன்னு ஒரு நாள் புறப்பட்டு வந்தார். பையன் 'ஓகோ'ன்னு இருந்தான். பங்களா - கார் எல்லாம் வந்துட்டுது.

"எப்படிடா இந்த அளவுக்கு ஆனே?' - ன்னு கேட்டார்.

"அப்பா எல்லாம் உங்க ஆசீர்வாதம் தான் அப்பா! நீங்க கொடுத்த மூலதனத்தை வச்சித் தான் இவ்வளவும் சம்பாதிச்சேன்" அப்படின்னான் பிள்ளை.

"அது எப்படி?" - ன்னு கேட்டார்.

"அப்பா... நீங்க ஒரு கழுதைக்குட்டியும் கொஞ்சம் பணமும் என்கிட்டே குடுத்து அனுப்பினீங்க! அதை எடுத்துகிட்டு வந்தேன். வர்ற வழியிலே அந்தக் கழுதை செத்துப் போச்சி. உடனே யோசனை பண்ணினேன். அந்தக் கழுதையை இந்த இடத்துலே புதைச்சேன். கையிலே இருந்த பணத்தை வச்சி மண்டபம் கட்டினேன். மகான் ஒருத்தர் சமாதியாயிருக்கார் - ன்னு வதந்தியை கிளப்பி விட்டேன். ஜனங்கள்லாம் ஏமாந்து போய் காசை

கொண்டாந்து கொட்டறாங்க... நான் பொழைச்சுக் கிட்டிருக்கேன்! - ன்னான்.

"இப்பதான்டா நீ என் பிள்ளை!" அப்படின்னு சொல்லி சந்தோஷப்பட்டார் அந்த அப்பா.

ஏன் அப்படி சொல்றீங்கன்னு கேட்டான் பையன்.

"கழுதைக் குட்டியை புதைச்சி மண்டபம் கட்டியிருக்கே நீ...! ஏற்கனவே நம்ம ஊர்லே நாம கட்டியிருக்கோமே... மண்டபம். அது இந்த கழுதையோட அம்மாவை புதைச்ச இடம்! மகான் சமாதி ஆயிருக்கார்ன்னு நானும் சும்மா 'கப்ஸா' தான் வுட்டுக்கிட்டிருக்கேன்!" அப்படின்னார் அப்பா.

முட்டாள் ஜனங்களை நினைச்சி அந்த ரெண்டு பேரும் சத்தம் போட்டு சிரிச்சாங்களாம்!

ரஷ்யாவுலே நடந்த ஒரு நாடகத்தோட கதை இது.

பெரியார் 1932லே ரஷ்யாவுக்குப் போனப்போ இதை ரொம்ப ரசிச்சிப் பார்த்தாராம்!

மனுஷனை மனுஷன் ஏமாத்தறது ரொம்ப சுலபம். என் கூட படிச்ச ஒருத்தன் திடீர்ன்னு ஒரு நாள் எல்லாருக்கும் அருள் வாக்கு சொல்ல ஆரம்பிச்சுட்டான்.

அவன் ஒரு ஆபிசுலேயும் வேலை பார்க்கறான். ஆபிசுலே உள்ளவங்கள்லாம் அவன் கிட்டே வந்து அருள் வாக்கு கேக்கறது வழக்கம்.

ஒரு நாள் நான் அவன் ஆபிசுக்குப் போய் அவன் கிட்டே பேசிக்கிட்டிருந்தேன். அப்போ அதே

ஆபிசுலே வேலை பார்க்கிற ஒருத்தர் அவன் கிட்டே வந்து,

“சுவாமி, என் மேசையிலே வச்சிருந்த பேனா திடீர்ன்னு காணாமே போயிட்டுது... அது திரும்பக் கிடைக்குமா எனக்கு?” அப்படின்னு கேட்டார்.

இவன் கண்ணை உருட்டிப் பார்த்துட்டு “அது உனக்குக் கிடைக்காது... புதுசா வேறே ஒண்ணு வாங்கிக்க... போ!” ன்னான்.

“சரி” - ன்னு அவரு போயிட்டார்.

அவரு போனதும் நான் மெதுவா இவனைப் பார்த்து-

“அது எப்படி... அது உனக்குக் கிடைக்காதுன்னு அவ்வளவு உறுதியா அவர்கிட்டே சொன்னே?” - ன்னு கேட்டேன்.

இவன் மெதுவா என் காது கிட்டே வந்து...

“அந்தப் பேனாவைக் கிளப்பினதே நான் தான்!” அப்படிங்கறான்.



# 45. நிகழ் காலம் நம் கையில்

ஒரு பெரிய மனோதத்துவ நிபுணர்.

3250 பேரை அவரு சந்திச்சார். அவங்க கிட்டேயெல்லாம் ஒரே கேள்வியைக் கேட்டார்.

"நீங்க எதுக்காக வாழறீங்க?"

இது அவர் கேட்ட கேள்வி.

அதுலே 92 சதவீதம் பேரு ஒரே மாதிரியான பதிலைத் தான் சொல்லியிருக்காங்க.

"நாளைக்கு நல்லபடியா வாழறதுக்காக நம்பிக்கையோட இன்னைக்கு காலம் தள்ளிக்கிட்டிருக்கோம்!" அப்படின்னு தான் அவங்க எல்லாரும் சொல்லியிருக்காங்க.

இந்த உலகத்துலே சந்தோஷமா வாழறவங்களை விட, சந்தோஷமா வாழப் போறோம்ங்கற நம்பிக்கையோட வாழ்ந்து கிட்டிருக்கிறவங்க தான் அதிகம்!

எதிர் காலத்துலே நிம்மதியா இருக்கணும்ங் கறதுக்காக இன்னைக்கு அவஸ்தை படறவங்க அதிகம்!

ஆனா கொஞ்சம் நிதானமா யோசிச்சிப் பாருங்க; 'எதிர்காலம்'ங்கறது உண்மையிலேயே கிடையாது! இது ஏதோ சித்தப் பிரமையிலே சொல்றதா நீங்க நினைச்சுடப்புடாது!

எதிர்காலம்ங்கறது ஒரு கற்பனை. அதுலே நீங்க வாழ முடியாது. அதுலே நீங்க வாழற போது அது உங்களுக்கு நிகழ்காலமாயிடுது!

இப்ப உதாரணத்துக்கு.

அடுத்த வருஷம் - இதே மாசம் - இதே தேதி.

அந்த நாள் இப்ப நமக்கு எதிர்காலம். அதை கற்பனையிலே தான் பார்க்க முடியும்.

அடுத்த வருஷம் அந்த நாள் வந்துட்டுதுன்னு வச்சுக்குங்க. அன்னைக்கு நாம வாழப் போறோம். நாம வாழற அந்த நாள் நமக்கு நிகழ்காலம்!

சரி... இப்படியே சொல்லி கிட்டுப் போனா எனக்கு திடீர்ன்னு இன்னைக்கு என்னமோ ஆயிட்டுதுன்னு யோசிக்க ஆரம்பச்சுடுவீங்க! அதனாலே இந்த கதையைக் கேளுங்க.

ஒரு பெரிய செல்வந்தர்.

முகத்தை ரொம்பவும் கம்பீரமா வச்சிக்கிட்டு வீட்டுக்குள்ளே நுழைஞ்சார். அதே நேரத்துலே ரொம்பவும் தீவிரமான சிந்தனையிலே இருந்ததா வேறே தோணிச்சி!

அவரு சம்சாரம் பாத்தாங்க

"என்னங்க என்னமோ ரொம்ப தீவிரமா சிந்திக்கிறது மாதிரி தெரியிது? இன்னிக்கு இவ்வளவு தாமதமா வேறே வர்றீங்க? என்ன காரணம்?" ன்னு கேட்டாங்க.

"அதுவா... நம்மளோட ஏழு தலைமுறைகளுக்கு தேவையான ஏற்பாடுகள்லாம் பண்ணிக்கிட்டி ருந்தேன். அது தான் நேரத்தோட வீட்டுக்கு வர முடியலே! என்னோட சிந்தனைக்கும் அது தான் காரணம்!" அப்படின்னார் அவர்.

அவரோட மனைவியோ அறிவாளி.

அதனாலே, "வரப்போற ஏழு தலைமுறை களைப் பத்தி இவரு இப்பவே கவலைப்படறது அறியாமை" ன்னு அந்த அம்மாவுக்கு தோணிச்சு!

கொஞ்ச நேரம் பேசாமே இருந்தாங்க! அதுக்கப்புறம் மெதுவா அவங்க கணவர்கிட்டே போனாங்க.

"இதோ பாருங்க! நம்ம வீட்டுக்கு வெளியே குடிசையிலே ஒரு சந்நியாசி இருக்கிறாரு... நீங்க போய் அவருகிட்டே இந்த சாப்பாட்டை குடுத்துட்டு வாங்களேன்!" னு சொன்னாங்க. அவரோ வேண்டா வெறுப்போடு கிளம்பினார். 'சரி குடு போயிட்டு வாரேன்' னு சொல்லிட்டு சாப்பாட்டை வாங்கிகிட்டு புறப்பட்டார்.

அந்த சந்நியாசிகிட்டே போனார்.

சந்நியாசி நிமிர்ந்து பார்த்தார்.

செல்வந்தர் கையிலே சாப்பாடு.

"நான் ஏற்கனவே என்னுடைய சாப்பாட்டை சாப்பிட்டு முடிச்சுட்டேனே!"ன்னார் சந்நியாசி.

"அப்படின்னா, இதை சாயந்தர சாப்பாட்டுக்கு வச்சிக்குங்களேன்!" - ன்னார் செல்வந்தர்.

சந்நியாசி மறுபடியும் நிமிர்ந்து பார்த்தார்!

புன்முறுவலோட சொன்னார்.

"சாயந்திர சாப்பாட்டைப் பத்தி நான் இப்பவே எதுக்காகக் கவலைப்படணும்?" ன்னார்.

சந்நியாசியோட இந்த செயல் பணக்காரருடைய சிந்தனையிலே ஒரு புது திருப்பத்தை உண்டு பண்ணிச்சு!

யோசிச்சிப் பார்த்தார்.

''சாயங்கால சாப்பாட்டை பத்தி கூட கவலைப் படாத இந்த சந்நியாசி தான் எவ்வளவு விசித்திரமானவர். நானோ ஏழு தலைமுறைக்காக இப்பவே ஏற்பாடு பண்ணிக்கிட்டிருக்கேன்! இவரோ அடுத்த வேளையைப் பத்தி கூட கொஞ்சமும் அலட்டிக்காமே இருக்காரே!''

செல்வந்தர் முகத்துலே சிரிப்பு வந்தது!

இந்தக் கதையிலேயிருந்து நாம புரிஞ்சிக்க வேண்டியது என்னன்னா...

நிகழ்காலம்ங்கறது தான் நம்ம கிட்டே இருக்கறது. அதுலே நல்லபடியா வாழறதுக்கு நாம கத்துக்கணும்! அதுக்காக எதிர்காலத்தை பத்தின பொறுப்பு நமக்குத் தேவையில்லேன்னு முடிவு கட்டிடப்புடாது! அது வேறே! இது வேறே!

இந்த தத்துவத்தை அரைகுறையா புரிஞ்சிகிட்ட ஒருத்தர் என்ன பண்ணினார் தெரியுமா?

தத்துவத்தை சொன்னவருகிட்டேயே 100 ரூவா கடன் வாங்கினார்.

இவரு கடனை குடுத்துட்டு ''எப்பத் திருப்பி தருவீங்க?'' ன்னு கேட்டார்.

''எதிர்காலத்துலே திருப்பித் தருவேன்... அதைப் பத்தி இப்பவே எதுக்கு நினைக்கணும்! மறந்துடுங்க!'' ன்னு சொல்லிபுட்டு புறப்பட்டு போயிட்டார்.



# 46. ஆடையைக் குறைத்த அற்புத நிகழ்ச்சி

*1921* ஆம் வருஷம்

செப்டம்பர் மாசம், *22*-ஆம் தேதி.

மதுரை மேலமாசி வீதியிலே உள்ள ஒரு வீடு.

அங்கே அன்றைக்கு நடந்த ஒரு அற்புத நிகழ்ச்சி, பின்னாடி உலக மக்களையெல்லாம் ஆச்சரியப்பட வச்சுது. இந்திய வரலாற்றுலேயே அது ஒரு முக்கியமான நிகழ்ச்சி. உலக மக்கள் கவனமெல்லாம் காந்திஜியின் பக்கம் திரும்பறதுக்குக் காரணமா இருந்த நிகழ்ச்சி அது.

கதர்த்துணி பிரச்சாரத்துக்காக காந்திஜி மதுரைக்கு வந்திருந்தார். சென்னை துணி வணிகர் சங்கத்தின் துணைத் தலைவர் ஒருத்தர். (ராம்ஜி கல்யாண் சேட்ஜி) அவருடைய வீடு மதுரை மேலமாசி வீதியிலே இருந்தது. அந்த வீட்டுலே தான் காந்திஜி தங்கியிருந்தார்.

அப்போ வயலுக்குப் போற உழவர்கள்லாம் சின்ன, சின்ன துண்டை இடுப்புலே கட்டிக்கிட்டு - கலப்பையைத் தூக்கிக்கிட்டுத் தெருவுலே நடந்து போறதை கவனிச்சார்.

ஏற்கனவே சேலத்துக்குத் தெற்கே பல பகுதிகள்லே ஆண்களும் பெண்களும் அரை குறை ஆடைகளோட உழைச்சிக்கிட்டிருக்கறதைக் காந்திஜி கண்ணாலே கண்டிருக்கார்!

இந்தியரின் சராசரி உடை இவ்வளவு தான்! மனசை என்னவோ பண்ணியிருக்கு... ராத்திரி பூரா அதைப் பத்தியே யோசனை...

22-9-21 வியாழக் கிழமை காலையிலே காந்திஜி எழுந்திரிச்சார். அவரு கூட தங்கியிருந்தவங்களைப் பார்த்து சொன்னார்.

"இன்று முதல் அரையிலே முழு அகலத் துண்டு தான் கட்டுவேன். குளிர் அதிகமா உள்ள காலங்கள்லே மட்டும் போர்வை ஒன்றை உபயோகப்படுத்துவேன். மத்தபடி மேலங்கியோ குல்லாவோ எதுவும் போட்டுக்க மாட்டேன். தற்காலிகமா இந்த ஏற்பாட்டை ஒரு மாசத்துக்கு ஏற்றுக் கொள்வேன். அதுக்குப் பிறகு - உசிதம் போல எண்ணிப் பார்த்து முடிவு செய்வேன்!" அப்படின்னார்.

அவருடைய குரல் உறுதியா இருந்துது. உடனே செயல்லே இறங்கினார். தம்முடைய பத்து முழ வேட்டி, மேலங்கி, உள் சட்டை, குல்லா எல்லாத்தையும் களைந்தார். வேட்டியிலிருந்து நாலு முழ துணியை எடுத்துகிட்டார். இதுக்கு உதவி செஞ்சவர் அன்றைக்கு விருதுநகர்லே பிரபல தொண்டரா இருந்த பழநிக்குமாரபிள்ளை!

வெட்டி எடுத்த துண்டை நீளவாக்குலே இரட்டையா மடிச்சார். அதை இடுப்புலே துண்டு மாதிரி கட்டிக் கிட்டார். தலையிலே சின்ன உச்சிக் குடுமி! அரையிலே சின்ன துண்டு! அண்ணல் காந்தி ஆண்டிக் கோலத்துலே காட்சியளித்தார்.

கூட இருந்தவங்களைப் பார்த்து,

"காரைக்குடிக்குப் புறப்படலாமே!" - ன்னார்.

அவருடைய நண்பர்களும் சீடர்களும் திகைத்துப் போய் நின்னாங்க! இந்த விரதம் நிரந்தரமாக ஆயிடுமோங்கற பயம் அவங்களுக்கு!

எப்படியோ இந்த விவரம் ராஜாஜிக்கும், அன்றைக்குப் பிரபலமா விளங்கிய தேசபக்தர் டாக்டர். சி.செ. சௌ. ராஜனுக்கு எட்டிச்சி!

உடனே ரெண்டு பேரும் ஓடி வந்தாங்க.

"வேண்டாமே இந்தக் கோலம்!" - ன்னாங்க. காந்திஜி தன்னுடைய முடிவுலே உறுதியா இருந்தார்.

ராஜாஜி என்னென்னமோ வாதம் பண்ணிப் பார்த்தார்.

"உங்களுடைய வாதத்துக்கு என்னாலே பதில் சொல்ல முடியலே! இருந்தாலும் நான் செய்யறது தான் சரிங்கறதுலே எனக்கு சந்தேகமில்லே! இன்றைக்கு அதிகாலை மூணு மணி இருக்கும்; நான் ஓரளவு விழிச்சிக்கிட்டேன். அதாவது உறக்கமும் விழிப்புமா இருந்த நிலையிலே எனக்கு இந்த எண்ணம் உண்டாச்சி! இது எனது அந்தராத்மாவின் ஆணை! அதை என்னாலே மீற முடியாது!" அப்படின்னு சொல்லி புட்டார் காந்திஜி.

கதர் பிரச்சாரத்துக்காக காரைக்குடிக்குக் கிளம்பினார். வாசல்லே நாலு மோட்டார் வண்டிகள் காத்துகிட்டிருந்தது.

வீதியிலே ரெண்டு பக்கமும் ஜனங்கள்...

காந்திஜி இடுப்புத் துணியோட மோட்டார் வண்டியிலே ஏறினார்.

நண்பர்களும் சீடர்களும் மக்களும் உடல் சிலிர்க்க அந்தக் காட்சியைப் பார்க்கிறாங்க... மோட்டார் வண்டி நகர ஆரம்பிக்குது. எப்பேற்பட்ட காட்சி அது.

சொக்கநாதப் பெருமானையே கூலியாளாக்கி மண் சுமக்க வச்ச மதுரை அல்லவா? அந்த மதுரை தான், காந்திஜி துறவிக் கோலம் கொள்றதுக்கும் காரணமா இருந்துது.

இது இன்றைக்கு எத்தனை பேருக்குத் தெரியும்?

ஒரு தடவை காந்தியும் நேருவும் சுற்றுப் பயணம் செஞ்சாங்க. ஒரு இடத்துலே நடந்து போய்க் கிட்டிருந்தாங்க.

குறுக்கே ஒரு வாய்க்கால்!

நேரு என்ன பண்ணினார் தெரியுமா? தன்னுடைய இளமைப் துடிப்பைக் காட்டறதுக்காக... கொஞ்ச தூரம் பின்னாடி போய் அங்கேயிருந்து வேகமா ஓடி வந்து அந்த வாய்க்காலைத் தாண்டினார்!

காந்திஜி அப்படி பண்ணலே... பக்கத்துலே இருந்த பாலம் வழியா அந்த வாய்க்காலைக் கடந்து வந்தார்.

நேரு காந்திஜியைப் பார்த்து சிரிச்சிக்கிட்டே,

"என்னை மாதிரியே நீங்களும் தாண்டி யிருக்கலாமே!" அப்படின்னார்.

அதுக்கு காந்திஜியும் சிரிச்சிக்கிட்டே,

"இரண்டு அடி முன்னேோற்றதுக்காக ஐந்து அடி பின்னாடி போவதா?" அப்படின்னார்.



# 47. இளமையாய் இருக்க

''எனக்கு இது நடக்கணும்... அது நடக்கணும்ன்னு வேண்டிக்கிறவங்க தான் இந்த உலகத்துலே அதிகம்!'' ஆனா ஒரு விஷயம் மட்டும்...

''இது எனக்கு நடக்கப் புடாது!'' ன்னு தான் எல்லாருமே ஆசைப்படறோம். அது என்ன விஷயம்?

வயசாகிற விஷயம் தான்.

வயசாகப் புடாதுங்கறது தான் நம்ம ஆசை!

ஆனா அது நம்ம கட்டுப்பாட்டுலே உள்ள விஷயமில்லே! ஆனா ஒண்ணு...

வயசானாலும் இளமையா இருக்க முடியும். அது நம்ம கையிலே தான் இருக்கு!

சரி...! ரொம்ப நாளைக்கு இளைமையாவும் சுறுசுறுப்பாகவும் இருக்கறதுக்கு என்ன வழி? நிபுணர்கள் இதுக்குன்னு சில யோசனைகளை சொல்லியிருக்காங்க.

முதல் விஷயம். உடம்பு குண்டாகாமே பார்த்துக்கணும். உடம்பு அளவா இருக்கிறவங்க உற்சாகமா இருக்காங்க. உடம்பு பெரிசா இருந்தா சர்க்கரை வியாதி, இதய நோய் இதெல்லாம் வர்றதுக்கான சான்ஸ் அதிகம்.

சரி... உடம்பைக் குறைக்கறது எப்படி?

சில பேரு இதுக்காக கலோரியைக் குறைக்கறதுக்கு முயற்சி பண்ணுவாங்க.

கொழுப்பைக் குறைக்கணும். அது தான் முக்கியம். உடற் பயிற்சியும் வேணும்.

பட்டாணி - பருப்பு - தானிய வகையெல்லாம் சாப்பிடலாம். வைட்டமின் E, C, A மூணும் அவசியம் தேவை. மஞ்சள் கலரா இருக்கிற பழங்கள் காய்கறிகள்லே பீட்டா கரோட்டின் (வைட்டமின் A) இருக்கு. மாம்பழம் - பப்பாளி - காரெட் - கீரை வகை தாராளமா சாப்பிடணும்.

உடம்பு, தசை, எலும்பு நல்லா இருக்க புரோட்டின் தேவை. ஆனா அது அதிகமாப் போனா மந்தமா - கனமா feel பண்ணுவோம். வயசான காலத்துலே அதிகமா வெயில்லே அலைய வேணாம்.

போதுமான தூக்கம் வேணும். தூக்கம் குறைஞ்சா 'டல்'லா ஆயிடுவோம்.

இந்த உலகத்துலே வயசான பிற்பாடும் ரொம்ப சௌக்கியமா சந்தோஷமா பல பேர் இருக்கிறாங் கள்லே, அப்படிப்பட்டவங்களை யெல்லாம் ஆராஞ்சி பார்த்தாங்களாம். அவங்கள்லாம் சும்மா இருக்கிறதில்லே. தானா ஏதாவது தொண்டு, தோட்ட வேலை இது மாதிரி ஏதாவது செய்யறவங்களா இருக்கறாங்களாம். இப்படி இருக்கிறவங்களுக்கு அதிகமான ரத்தம் மூளைக்குப் போவுது. அவங்களை சுறுசுறுப்பா இருக்க வைக்குது. புத்தி கூர்மையா இருந்தா அவங்க ரொம்ப நாளைக்கு சௌக்கியமா இருப்பாங்களாம்.

நிறைய டாக்டர்கள் என்ன சொல்றாங்கன்னா...

You will stay young if you think young.

இளமை எண்ணங்கள் உங்களை இளமையாக வாழ வைக்கும்.

நாற்பது வயசு ஆனவுடனே நான் வாழ்ந்து முடிச்சுட்டேன்னு பேசிக்கிட்டிருக்கப் புடாது!

வேலையிலேயிருந்து ரிட்டயர் ஆகி அறுபது வயசுக்கு மேலே 'இனிமே தான் எனக்கு வாழ்க்கையே ஆரம்பம்' - ன்னு சொல்றவங்களும் இருக்கிறாங்க!

எப்பவும் இளமை எண்ணத்தோட இருக்கப் பழகிக்குங்க சார்... அப்படியிருக்கப் பழகிக்கிட்டா உங்களுக்கு வயசாகிற களைப்பே வராது!

மூச்சு இழுத்து விடறது நுரையீரலுக்கு நல்ல பயிற்சி. முடிஞ்ச அளவுக்குக் காத்தை உள்ளே இழுத்து வெளியே விடுங்க.

ஒருத்தர் தன்னுடைய 70 வயசுலே இப்படி செஞ்சிக்கிட்டு, அதே நேரம் புகைப்பிடிக்கிற பழக்கத்தையும் விட்டுடறார்ன்னு வச்சிக்குங்க. அப்படியிருந்துட்டா அவரோட நிரையீரல் 40 வயசுகாரருக்கு இருக்கிற மாதிரி இருக்குமாம். சோம்பல் தளர்ச்சி இருக்காதாம். வயசான நாம களைப்பா இருக்கிறதுக்கு முக்கிய காரணமே நம்ம (Body System) உடம்புலே ஆக்சிஜன் குறையறது தான்! நுரையீரல் நல்லா இருந்தா இந்த குறை வராது. அதனாலே முதுமையை நீங்க வெல்லணுமா? அப்படின்னா...

சத்தான உணவு - தவறாத உடற்பயிற்சி - நல்ல மன நிலை இது மூணும் அவசியம்.

ஒரு கடற்கரையிலே மூணு தாத்தாக்கள். உக்காந்து பேசிக் கிட்டிருந்தாங்களாம். தங்களுடைய இளமையின் ரகசியம் என்னங்கறதைப் பத்தி

ஆராஞ்சிக்கிட்டிருந்தாங்க. அந்த மூணு பேர்லே கொஞ்சம் இளமையா தெரிஞ்சா ஒருத்தர். அவர் சொன்னார்.

“நான் சின்ன வயசுலே யிருந்தே சிகரெட் குடிக்கறதில்லே... அதனாலே தான் இப்ப நான் இப்படி இருக்க முடியுது!” ன்னார்.

அப்படின்னா இப்ப உங்க வயசு என்னன்னு கேட்டார். அடுத்தவர்.

‘80 முடிஞ்சி 81 ஆரம்பம்’ னனார் அவர்.

இன்னொரு தாத்தா சொன்னார் “நான் சின்ன வயதுலே யிருந்தே சிகரெட்டும் குடிக்கறதில்லே... மதுவும் அருந்தறதில்லே! அதனாலே தான் இப்ப நான் இப்படி இருக்க முடியுது!” ன்னார்.

“உங்க வயசு என்ன?”ன்னு கேட்டாங்க மத்தவங்க.

“90 முடிஞ்சி 91 ஆரம்பம்!” ன்னார்.

கடைசியா மூணாவது தாத்தா சொன்னார். “நான் சின்ன வயதுலேயிருந்தே சிகரெட்டு குடிப்பேன் - மது அருந்துவேன் - மாமிசம் சாப்பிடுவேன். எதுவும் தள்ளுபடி இல்லே! அதனாலே தான் இப்ப நான் இப்படி இருக்கேன்!” ன்னார்!

மத்த ரெண்டு பேருக்கும் ஆச்சரியம் “அப்படின்னா இப்ப உங்க வயசென்ன?” ன்னு கேட்டாங்க.

அவரு ரொம்ப நிதானமா, “இப்ப தான் 40 முடிஞ்சி 41 ஆரம்பம்!” அப்படின்னார்.

# 48. முதுமையில் மனநோய்

இன்று ஒரு தகவல் - லே மன நோயைப் பற்றி அடிக்கடி பேசிக்கிட்டிருக்கோம்!

ஏன்? னு எனக்கும் தெரியலே... தற்செயலா அடிக்கடி இதைப் பத்தி பேசறாப்போல ஆயிடுது!

சின்னப் பிள்ளைங்களுக்கு மனசு எப்படி பாதிக்கப்படுதுங்கறதைப் பத்தி ஒரு நாள் பேசிக் கிட்டிருந்தோம்.

வயசானவங்களுக்கு மனசு எப்படி பாதிக்கப் படுதுங்கறதைப் பத்தி இன்னைக்குப் பேசப் போறோம்!

மன நோய்ங்கறது ஒரு பொதுவான நோய் தான்...

இது எல்லாருக்கும் வர்றதுக்கு வாய்ப்பு இருக்கு... இருந்தாலும் இளமையின் தொடக்கத் திலேயும், முதுமையின் தொடக்கத்திலேயும் இது அதிகமா ஏற்படறதுண்டாம்.

வயசான காலத்துலே இது ஏன் அதிகமா வருது தெரியுமா? அந்த சமயத்துலே மூளையோட செயல்திறன் பாதிக்கப்படுது. அதனாலே மத்த வங்களை விட இவங்களுக்கு அதிகமா மன நோய் வர்றதுக்கு வாய்ப்பு இருக்கு!

அது வரைக்கும் தனியா சுதந்திரமா இருந்தவங்க.. வயசானதுக்கப்புறம் அடுத்தவங்களை எதிர் பார்த்து இருக்க வேண்டிய சூழ்நிலை. சமூக ரீதியா

பார்த்தாலும், பொருளாதார ரீதியா பார்த்தாலும், உடல் நல ரீதியா பார்த்தாலும் இவங்கள்லாம் மற்றவர்களை சார்ந்திருக்க வேண்டிய நிலை! சுறுசுறுப்பா எல்லா வேலையும் செஞ்சிட்டிருந்தவங்க... சும்மாவே உக்கார்ந்திருக்க வேண்டிய சூழ்நிலை!

இதனாலே தான் மனசு கெட்டுப் போவுது!

முதியவர்களுக்கு ஏற்படற மனநிலை பாதிப்பை மூணு வகையா பிரிக்கிறாங்க!

ஒண்ணு - மனக்குழப்பம் - Confusion.

ரெண்டு - அறிவுத்திறன் வீழ்ச்சி - Dementia

மூணாவது - மனத்தளர்ச்சி நோய் - Depression.

இரத்தக் குழாய்கள்லே ஏற்படற மாற்றங்களாலே மூளைக்குத் தேவையான சத்து குறைஞ்சு போவுது! அதனாலே மூளை சரிவர வேலை செய்யாமே ஒரு விதமான குழப்பம் ஏற்பட்டுப் போவுது. இந்த நிலைமையிலே, நல்லா இருக்கிற ஒருத்தர் திடீர்னு தம்முடைய சுற்றுப் புறத்தையே மறந்துடுவார்.

நாம எங்கேயிருக்கிறோம் - என்ன செய்யிறோம் - நம்மை சுற்றி என்ன நடக்குது? யார் யார் இருக்காங்க...?

ஒண்ணும் புரியாது!

நேரம் காலம் இடம் தெரியாமே அவரும் குழம்புவார். அடுத்தவங்களையும் குழப்புவார்! இல்லாததை இருக்கிறதா நினைப்பார்... பயந்த நிலையிலேயே காணப்படுவார். இந்த நிலை சில நொடிகள் முதல் சில மணி நேரம் வரைக்கும் நீடிக்கலாம். அப்புறம் சரியாயிடும்!

இப்படி ஏற்படறதுக்கு என்ன காரணம் தெரியுமா?

மூளைக்குப் போற ரத்தம் திடீர்னு குறைஞ்சு போறது!

தூக்க மாத்திரை, நரம்புத் தளர்ச்சிக்குக் கொடுக்கிற மாத்திரை இது மாதிரி சில மருந்துகளாலேயும் மனக் குழப்பம் உண்டாகும்! உடம்புலே மற்ற பாகங்கள்லே நோய்க் கிருமிகள் பாதிப்பு இருந்தாலும் மனக் குழப்பம் வரும்...

அடிப்படைக் காரணம் என்னன்னு கண்டு பிடிச்சி அதுக்குத் தகுந்த மாதிரி சிகிச்சை குடுக்கணும்!

அறிவுத் திறன் வீழ்ச்சின்னு சொல்றோம்லே - Dementia.

அது எதனாலே வருதுன்னு இன்னமும் சரியா கண்டு பிடிக்க முடியலே! அதனாலே இதுக்குத் தகுந்த சிகிச்சையும் கிடையாது. 40 வயசுக்குப் பிறகு மூளை செல்கள் வீழ்ச்சியடைய ஆரம்பிக்குது. தொடர்ந்து வயசு ஆக ஆக அறிவுத் திறனுக்கு உறைவிடமான மூளைச் செல்கள் மேலும் வீழ்ச்சியடையுது! அதனாலே அறிவுத் திறன்லேயும் வீழ்ச்சி ஆரம்பமாயிடுது!

நோயாளியின் மனப்போக்கை குடும்பத்துலே உள்ளவங்க எல்லாரும் நல்லா புரிஞ்சிக்கிட்டு அதுக்குத் தகுந்த மாதிரி நடந்துக்கணும். அது தான் நாம அவருக்கு செய்யக் கூடிய பெரிய உதவி!

மனத் தளர்ச்சி நோய் இருக்கே Depression!

அது எப்படி தெரியுமா?

இந்த நோயாலே பாதிக்கப்பட்டவங்க எந்தக் காரணமும் இல்லாமே மனம் தளர்ந்து போய்டுவாங்க! கவலைப்படுவாங்க! அவங்க பேர்லேயே அவங்களுக்கு நம்பிக்கை இருக்காது. அது மட்டுமில்லே! ஏதோ ஒரு பெரிய தப்பு பண்ணிட்டதாக அவங்களே நினைச்சிக்கிட்டுக் கஷ்டப்படுவாங்க. தங்களைத் தாழ்வா நினைச்சிக்குவாங்க... 'அடுத்தவங்களுக்கு நாம சுமையா இருக்கிறோமே'-ன்னு நினைச்சி ஏங்குவாங்க!

"நம்ம உடம்பு கெட்டுப் போச்சு... நம்மளை யாரோ தண்டிக்கப் போறாங்க!" இப்படி நினைச்சிக்கிட்டு மனசுக்குள்ளே போராடுவாங்க... பல சமய்ங்கள்லே இது மாதிரி நினைப்புனாலே தற்கொலை பண்ணிக்கறதுக் கூட முயற்சி பண்ணுவாங்க!

எதுலேயும் ஆர்வம் இருக்காது! பசி குறையும்! அதனாலே சாப்பாடும் குறையும்! உடம்பு இளைக்கும்! முகத்துலே ஒரு விதமான வெறுப்புணர்ச்சி வெளிப்படும். ராத்திரியிலே தூக்கம் வராமே கஷ்டப்படுவாங்க!

இந்த மனத்தளர்ச்சி நோய்க்கு இப்ப நல்ல மருந்துலாம் இருக்கு! அதுலேயே குணமாயிடும்... சில பேருக்கு மட்டும் மின் சிகிச்சை தேவைப்படும்.

ஆகக்கூடி வயசான காலத்துலே உடம்பையும் மனசையும் நல்லா வச்சிக்க வேண்டியது அவசியம். உடம்பு நல்லா இருந்தா மனசும் நல்லா இருக்கும்! சத்துள்ள ஆகாரம் சாப்பிடணும்.... முதுமையின் எதிரி

தனிமை! அதைத் தவிர்க்கணும்... பேச்சுத் துணைக்கு யாரையாவது தயார் பண்ணிக்கணும்! சூழ்நிலைக்கு ஒத்துப் போகணும்.

ஒரு பாட்டி தன்னுடைய கணவரை அழைச்சிக்கிட்டு டாக்டர்கிட்டே வந்தாங்க.

''டாக்டர்! இவரைக் கொஞ்சம் கவனிச்சிப் பாருங்க! யாரையாவது எதிர்லே பார்த்துட்டா உடனே பேச ஆரம்பிச்சுடறாரு!'' அப்படின்னாங்க!

''அது ஒண்ணும் தப்பில்லேயே! தனிமையைத் தவிர்க்கிறதுக்காக யாரையாவது எதிர்லே பார்த்தா கொஞ்சம் பேசியிருப்பார்!'' அப்படின்னார் டாக்டர்.

அதுக்கு அந்தப் பாட்டி,

''அப்படி இல்லே டாக்டர்! யாராவது மனுஷாளை எதிர்லே பார்த்துப் பேசினா பரவாயில்லை! முகம் பார்க்கற கண்ணாடியை எதிர்லே பார்த்தா கூட உடனே பேச ஆரம்பிச்சுடறார்! அதனாலே தான் உங்க கிட்டே அழைச்சிக்கிட்டு வந்தேன்!'' அப்படின்னாங்க.



# 49. நல்ல பண்புகள்

ஒரு நண்பர் வந்தார்.

"நல்ல பண்புகள் - ன்னு சொல்றாங்களே... அப்படின்னா என்ன சார்?"

அப்படின்னு கேட்டார்.

எனக்குத் தூக்கி வாரிப் போட்டுது...!

'இது கூட தெரிஞ்சிக்காமே இவ்வளவு நாள் இருந்துட்டாரே!' ன்னு நினைச்சேன்.

அதனாலே தான் அவரு நமக்கு நண்பரா வந்து சேர்ந்திருக்கார்ன்னு தோணிச்சி!

அதுக்கப்புறம் அவரை உக்கார வச்சி பேசிக் கிட்டிருந்தேன்.

எது எதெல்லாம் நல்ல பண்புகள் அப்படிங் கறதைப் பத்தி நபிகள் நாயகம் சொல்லியிருக்கார்.

அவர் நமக்கு சொல்லியிருக்கிற நற்பண்புகள் என்னென்ன தெரியுமா?

— ஒற்றுமையுடன் இருப்பது.

— நல்ல காரியங்கள் செய்வது.

— தர்மம் செய்வது.

— சலாம் சொல்ல முந்திக் கொள்வது.

— நோயாளிகளைச் சென்று காண்பது.

— நல்லவரா கெட்டவரா என்று பாராமல் பிரேத ஊர்வலத்தில் கலந்து கொள்வது.

— முஸ்லீமா - முஸ்லீம் அல்லாதவரா என்று பாராமல் அயலாருடன் அன்புடன் நடந்து கொள்வது.

— முதியவர்களுக்கு மரியாதை செய்வது.

— மன்னிப்பது.

— சண்டை சச்சரவுகளைத் தீர்த்து வைப்பது.

— கோபத்தை அடக்குவது.

— விலக்கப்பட்டதைத் தவிர்ப்பது.

— உறவினர்களிடம் அன்பாய் நடந்து கொள்வது.

— கர்வம் கொள்ளாமல் இருப்பது.

இது எல்லாம் நற்பண்புகள் - அப்படின்னு நபிகள் நாயகம் சொல்லியிருக்கார்.

இந்த பண்புகள் எல்லா மனிதர்களுக்கும் இருந்துட்டுதுன்னா நாம கஷ்டப்பட வேண்டிய அவசியமே இல்லே!

ஒற்றுமையா இருக்கணும்ங்கறதை ஒரு பண்பாவே வளர்த்துக்கிட்டோம்ன்னா - அப்புறம் நீ வேறே - நான் வேறேங்கற நினைப்பே வராது!

நல்ல காரியங்களையே செய்யணும். தீய காரியங்களைச் செய்யப்புடாது!

தர்மம் செய்யணும். அது ஒரு கடமை.

எதிர்லே ஒருத்தரைப் பார்க்கறோம்... அவர் சொல்றதுக்கு முன்னாடி நாம முந்திக்கிட்டு அவருக்கு 'சலாம்' சொல்லணும். அது ஒரு சிறந்த பண்பு.

ஒருத்தர் உடம்பு சுகமில்லாமே இருக்கார்ன்னு கேள்விப்பட்டா உடனே அவரைப் போய் பாாக்கணும். அது ஒரு பண்பு.

ஒரு பிரேத ஊர்வலம் போவுதுன்னு வச்சிக்குங்களேன்... செத்துப் போனவர் நல்லவரா கெட்டவரான்னுலாம் பார்த்துக்கிட்டிருக்காமே அந்த ஊர்வலத்துலே கலந்துக்கணும். அது தான் சிறந்த பண்பு.

அந்த ஆளு நமக்கு வேண்டாதவன்... நாம என்னத்துக்குப் போகணும்? - அப்படின்னு நினைக்கப்புடாது!

முஸ்லீமா - முஸ்லீம் அல்லாதவரான்னு பார்க்காமே அயலார்கிட்டே அன்பா நடந்துக்கறதும் ஒரு நற்பண்புங்கறார் - நபிகள் நாயகம்!

வயசானவங்களை அலட்சியப்படுத்தக் கூடாது. அவங்களுக்கு மரியாதை கொடுக்கணும். அவங்ககிட்டே பணிவா நடந்துக்கணும். அவங்களை மதிக்கணும்.

மன்னிக்கறது இருக்கு பாருங்க... அது ரொம்பப் பெரிய விஷயம். மனுஷனுக்கு அந்தப் பண்பு ரொம்ப முக்கியம்.

சண்டை சச்சரவுகளைத் தீர்த்து வைக்கறது ஒரு சிறந்த குணம்.

கோபப்படக் கூடாது. கோபத்தை அடக்கணும். வேண்டாத விஷயங்களை யெல்லாம் விட்டுடணம். அதாவது விலக்கப்பட்டதை யெல்லாம் தவிர்க்கணும்! சொந்தக்காரங்க கிட்டே அன்பா நடந்துக்கணும். அது ஒரு சிறந்த பண்பு.

எந்த நிலைமையிலும் கர்வம் கொள்ளக் கூடாது. இது எல்லாம் நற்பண்புகள் - அப்படின்னு சொல்லி நபிகள் நாயகம் அடையாளம் காட்டறார்.

நாமெல்லாம் அதைப் புரிஞ்சி நடந்துகிட்டா இந்த உலகத்துலே நல்ல விதமா வாழலாம்.

புரிஞ்சிக்கலேன்னா... கஷ்டம் தான்.

இப்ப உதாரணத்துக்கு சண்டை சச்சரவுகளைத் தீர்த்து வைக்கிறது ஒரு நல்ல பண்புன்னு இப்ப பேசிக்கிட்டோம்... ஆனா இன்றைக்கு காலம் எப்படி இருக்குங்கறதுக்கு ஒரு உதாரணம் சொல்றேன் கேளுங்க!

ஒரு நடுத்தெருவுலே - ஒரு அடிதடி சண்டை நடக்குது. சுத்தி ஏகப்பட்ட கூட்டம். அந்தக் கூட்டத்து நடுவுலேயிருந்து ஒரு ஆள் தப்பிச்சி வெளியிலே வந்தான். அவன் சட்டை துணி மணியெல்லாம் கிழிஞ்சி தொங்குது... வசமா அடி வாங்கியிருப்பான் போல இருக்கு... அவனைக் கூப்பிட்டு நான் அட்வைஸ் பண்ணினேன்.

"ஏம்பா இது மாதிரி சண்டை போட்டுக்கறீங்க? சமாதானமா போங்க அது தான் நல்லது!" ன்னேன்.

"அட போய்யா... நான் சண்டை போட்டவன் இல்லே... அதைத் தீர்த்து வைக்கப் போனவன்... இப்படி ஆயிட்டேன்!" அப்படின்னு சொல்லிபுட்டு அங்கேயிருந்து வேகமா நடந்து போறான்!



# 50. கோபம் - ஒரு விளக்கம்

"எனக்கு யாரைப் பார்த்தாலும் எரிச்சலா வருது சார்"

அப்படின்னு சொல்லுவார் ஒருத்தர்.

அவர் எப்பவும் கோபத்துலேயே இருக்கக் கூடிய ஒரு ஆசாமி!

இப்படிப்பட்டவங்களை யாரும் நெருங்க மாட்டாங்க... இவங்களுக்கு இருக்கிற பேரும் போயிடும்... புகழும் போயிடும்.

மகாவீரர் என்ன சொல்றார் தெரியுமா?

'கோபம் வந்துட்டா மனுஷனுக்கு பிறத்தியாருடைய குணநலன்கள் தெரியறதே இல்லை'... - ங்கறார்.



அது மட்டுமில்லே...

'கோபம் வர்றப்போ... நமக்குப் பிரியமானவங்க கூட ஓர் இமைப்பொழுதுலே பகைவர்களா ஆயிடறாங்க...' அப்படிங்கறார்.

தீ என்ன பண்ணுது? எரியக் கூடிய பொருள்களை எரிச்சுட்டுத் தான் அவிஞ்சி போயிடுது... அது மாதிரி கோபம் என்ன பண்ணுதுன்னா மனுஷனை அழிச்சுட்டு அதுவும் அடங்கிப் போயிடுது.

மகாவீரருடைய இந்தக் கருத்தை விளக்கற மாதிரி சுவாமி சின்மயானந்தர் ஒரு கதை சொல்லியிருக்கார்;

ஆபீஸ்லே உத்தியோகம் பார்க்கற ஒருத்தர், காலையிலேயிருந்து கடுமையான வேலை... பலவிதமான பிரச்சனைகள்... அந்த சமயம் பார்த்து மானேஜர் அவரைக் கூப்பிட்டார். இவரைப் பிடிச்சி வாங்கு... வாங்குன்னு வாங்கிட்டார். இவரு முகத்தை 'உம்' முன்னு வச்சிக்கிட்டு தன் 'சீட்' டுக்கு வந்தார். வேலை ஓடலே! யாரைப் பார்த்தாலும் கோபமா வந்தது. அட்டெண்டர் மேலே சீறி விழுந்தார். அந்த ஊழியரும் எதிர்த்துப் பேசலே... முகத்தைத் திருப்பிக்கிட்டுப் போயிட்டார். மானேஜர் எப்ப புறப்படுவார்ன்னு பார்த்துக்கிட்டிருந்தார்... அவரு கிளம்பின உடனே இவரு செருப்பை மாட்டிக்கிட்டுக் கிளம்பினார். வழக்கமா வீட்டுக்கு பஸ்லே போறவர். நடந்தே கிளம்பிட்டார். மனசு குமுறிக்கிட்டே இருக்கு! நேர்லே எதிர்த்துப் பேச முடியாத மானேஜரை மனசுக்குள்ளேயே எதிர்த்து சண்டை போட்டுக்கிட்டே வந்தார்.

வீட்டு வாசல்லே அவரோட குழந்தைகள் விளையாடிக்கிட்டிருந்தாங்க... தூரத்துலே அப்பா வர்றதைப் பார்த்ததும் அப்பா வந்தாச்சு - அப்பா வந்தாச்சு - ன்னு சொல்லிக்கிட்டே உள்ளே ஓடிப் போய் அம்மா கிட்டே சொன்னாங்க.

அந்த அம்மா ஜன்னல் வழியா இவரைப் பார்த்தாங்க... ரொம்ப கோபமா வர்றது தெரிஞ்சிது...

இந்த நேரம் பிள்ளைங்க வாசல்லே சத்தம் போட்டு விளையாடிக்கிட்டு இருந்தா அடிச்சாலும் அடிச்சுடுவார்ன்னு பயந்துகிட்டு பிள்ளைங்களை பக்கத்து வீட்டுக்கு அனுப்பி வச்சுட்டாங்க. அவரு வந்தார். வாசல்லே பிள்ளைங்க சத்தம் இல்லே. அமைதியா இருந்தது. அவருடைய கோபத்துக்கு

வடிகால் கிடைக்கலே... சத்தம் போட்டா தானே திட்ட முடியும்? வாசல் கேட் திறந்து வைக்கப்பட்டிருந்துது... அது மூடியிருந்தாலும் 'ஏன் திறந்து வைக்கலே' ன்னு சத்தம் போடலாம். அதுக்கும் சான்ஸ் இல்லே. வீடு சுத்தமா... துப்புரவா பெருக்கி வைக்கப்பட்டிருந்துது. அந்தந்த சாமான் அந்தந்த இடத்துலே இருந்தது. அதனாலே "என்ன இது... வீடு இருக்கிற லட்சணம்..." ன்னு சத்தம் போடலாம்ன்னா அதுக்கும் சந்தர்ப்பம் இல்லே!

அவரு வழக்கமா உட்கார்ற நாற்காலிக்கு மேலே மின்விசிறி சரியான அளவுக்குப் போடப்பட்டிருந்துது. ஐந்து நிமிஷம் உக்கார்ந்தார். அப்புறம் எழுந்திரிச்சிப்போய் உடைகளை மாத்திக்கிட்டார். குழாயடியிலே தண்ணீர் எடுத்து வைக்கப் பட்டிருக்கு... பக்கத்துலே ஒரு செம்பு.

கால் கழுவிக்கறதுலேயும் குறை ஏதும் இல்லே.

மனைவிக்கிட்டே கோபிக்கறதுக்கு வழியே இல்லே... திரும்பி வந்தார். நாற்காலியிலே உட்கார்ந்தார். எதிர்லே ஒரு ஸ்டூல்... அதுமேலே காப்பி வைக்கப்பட்டிருக்கு...

அதுவும் சரியான சூட்டுலே இருந்துது... ரொம்ப ஆறவும் இல்லே... ஆவி பறக்கவும் இல்லே...

இங்கேயும் அவராலே எரிஞ்சிவிழ முடியலே! என்ன பண்றது?

காப்பியை எடுத்து மெதுவா சாப்பிட ஆரம்பிச்சார். சர்க்கரை இல்லே! அப்பாடா சான்ஸ் கிடைச்சுட்டுது...

"அடியே... எங்கே தொலைஞ்சு போனே...!" -ன்னு கத்தினார்.

"என்ன வேணும்!" -ன்னு சமையல் கட்டுலேயிருந்து நிதானமா கேட்டாங்க அந்த அம்மா!

"வெளியே வந்து கேக்கறதுதானே... நாள் பூரா கஷ்டப்பட்டு உழைச்சுட்டு வந்திருக்கேன். எனக்கு காப்பி குடுக்கிற லட்சணம் இதுதானா? ஏன் சர்க்கரைப் போடலே... உங்க பாட்டன் வீட்டு சொத்தா குறைஞ்சு போயிடும்?" -ன்னு காட்டு கத்தா கத்த ஆரம்பிச்சுட்டார்.

அந்த அம்மா அலட்டிக்காமே நடந்து வந்தாங்க...

கோப்பையிலே கிடந்த ஸ்பூனாலே காப்பியைக் கலக்கி விட்டுட்டு ஸ்பூனை எடுத்துக்கிட்டுப் பேசாமே போயிட்டாங்க.

இவரு இப்ப காப்பியை எடுத்து குடிச்சார்... இனிப்பு அளவா இருந்துது..!

சர்க்கரை அடியிலே கிடந்திருக்கு, அதை கலக்காமே குடிச்சிருக்கார்... அவ்வளவுதான்!

வாழ்க்கையிலே மகிழ்ச்சிங்கறது இப்படித்தான் மறைஞ்சி கிடக்கு... காப்பிக்கு அடியிலே சர்க்கரை கிடக்கறது மாதிரி...! அதை உண்மையா அனுபவிச்சி சந்தோஷப் படணும்ன்னா...

மனசை அப்பப்போ சோதனை பண்ணி கலக்கி அந்த இனிமையை வெளியிலே கொண்டு கிட்டு வர வேண்டியிருக்கு!

அப்படிங்கறார் சுவாமி சின்மயானந்தர்.

"கோபம் வந்துட்டா மனுஷனுக்கு பிறத்தியாருடைய குணநலன்கள் தெரியறதே இல்லே!" - ங்கற மகாவீரர் வாக்கு எவ்வளவு உண்மைங்கறது இந்தக் கதையிலே யிருந்து தெரியுதா இல்லையா?

ஒருத்தர் சொன்னார்.

"சார்... எனக்குக் கல்யாணம் ஆகி ஏழு வருஷம் ஆகுது. என் மனைவி கோபத்துலே என்னை எவ்வளவு தான் திட்டினாலும்... பதிலுக்கு நான் திட்டினதே இல்லே...!" அப்படின்னார்.

"அது எப்படி முடியுது உங்களாலே?" - ன்னேன்.

"பதிலுக்கு நான் திட்டறதுக்கு இது வரைக்கும் எனக்கு சந்தர்ப்பமே கிடைக்கலே... அவ நிறுத்தினா தானே நான் ஆரம்பிக்க முடியும்!" அப்படின்னார்.



# 51. இல்லாமல் இருத்தல்!

ஒரு பேராசிரியர்.

அவர் ஒரு சமயம் ஒரு குருவைத் தேடி வந்தார்.

ஜப்பானிய குரு. அவர் பெயர் நான்-இன் Nan-In

அவருகிட்டே பேசணும்... விவரங்களைத் தெரிஞ்சிக்கணும் -ங்கற ஆசை.

அந்த குரு ஒரு குடிசையிலே இருந்தார்.

இந்தப் பேராசிரியர் ரொம்ப தூரம் நடந்து அந்த குடிசைக்கு வந்து சேர்ந்தார்.

குரு பார்த்தார்.

"நீங்க ரொம்பவும் களைப்பா காணப்படுறீங்க... கொஞ்சம் இளைப்பாறுங்க... உங்களுக்குத் தேநீர் தயார் பண்றேன்... ஒரு கோப்பை தேநீர் சாப்பிட்டு அதுக்கப்புறம் நாம கலந்துரையாலாம்!'' அப்படின்னு சொல்லிட்டு தேநீர் தயாரிக்கறதுக்காக வெந்நீர் கொதிக்கவச்சார். அதே சமயம் பேராசிரியரையும் லேசா கவனிச்சார்.

ஒருபக்கம் தண்ணீர் கொதிக்குது. இன்னொரு பக்கம் பேராசிரியரும் கொதிச்சிக்கிட்டிருக்கார்.

தேநீர் பாத்திரத்துலே யிருந்தும் சத்தம் வந்துக் கிட்டிருக்கு...

பேராசிரியர் கிட்டேயிருந்தும் சத்தம் வந்துக்கிட்டிருக்கு.

ஏன்னா அவரு தனக்குள்ளேயே பேசிக் கிட்டிருந்தார்.

அதாவது இந்த குருகிட்டே என்ன கேக்கறது...

எப்படி கேக்கறது... எங்கேயிருந்து ஆரம்பிக்கிறது. அப்படின்னு தன்னைத் தானே தயார் பண்ணிக் கிட்டிருக்கார்.

அந்தப் பக்கம் தேநீரும் தயாராயிட்டுது.

அந்த குரு சிரிச்சிக்கிட்டே இதையெல்லாம் கவனிச்சார். அதுக்கப்புறம் ஒரு கோப்பையிலே தேநீரை ஊற்ற ஆரம்பிச்சார்.

பேராசிரியர் கோப்பையை கவனிச்சிக்கிட்டே இருக்கார்.

கோப்பை நிரம்பி வழிய ஆரம்பிச்சுது.

'நிறுத்துங்க'-ன்னு கத்தினார் பொறுக்க முடியாமே!

"கோப்பையிலே இனிமே கொஞ்சம் கூட ஊற்ற முடியாது... உங்களுக்கு என்ன ஆச்சு?" -ன்னார்.

இப்போ அந்த குரு சொல்றார்:

இதே நிலைமையிலே தான் இப்ப நீங்களும் இருக்கறீங்க...

நீங்களும் உங்க சொந்த கருத்துக்களாலும் எண்ணக் கோட்டைகளாலும் நிறைஞ்சு இருக்கறீங்க... நீங்க உங்க கோப்பையை காலி செய்யாத வரைக்கும் நான் என்னத்தை உங்களுக்குப் புதுசா கொடுத்துட முடியும்?"- ன்னார்.

கோப்பை நிரம்பிட்டுது... இனிமே கொள்ளாது ங்கற விழிப்புணர்வு அந்தப் பேராசிரியருக்கு

இருந்தது... ஆனா தன்னைப் பற்றிய விழிப்புணர்வு அவருக்கு இல்லை!

அவரு தன்னுடைய சொந்தக் கருத்துக்கள்... கோட்பாடுகள்... தத்துவங்கள்... இவற்றால் நிரப்பப்பட்டு பொங்கி வழிஞ்சிக்கிட்டிருக்கார்.

அதனாலே அந்த குரு என்ன சொன்னார்-ன்னா...

"நீங்கள் ஏற்கனவே அதிகம் அறிந்துள்ளீர்கள்... நான் உங்களுக்கு எதையும் கொடுக்க முடியாது!"-ன்னார்.

"என்னைத் தேடி வர்றதுக்காக நீங்க ரொம்பவும் சிரமப் பட்டிருக்கீங்க...வீணா பிரயாணம் பண்ணி வந்திருக்கீங்க... நீங்க உங்க கோப்பையை கொஞ்சம் காலியா வச்சிருந்தா நான் அதுலே கொஞ்சமாவது ஊற்ற முடியும்!"- அப்படின்னார்.

'கோப்பையை காலி செய்' - ன்னார்.

"மனதைக் காலி செய்!" -ன்னு அர்த்தம். ஏன்னா அங்கே நான் என்கிற ஆணவம் பொங்கி வழிஞ்சிக்கிட்டிருக்கு! ஆணவம் அங்கே இருக்கிற வரைக்கும் வேறே எதையும் அங்கே கொண்டு போய் சேர்க்க முடியாது. கோப்பையைக் காலி செய்... இல்லேன்னா அதை வீசி எறிஞ்சுடு - என்கிறார் ஓஷோ.

கோப்பையை எறிஞ்சுடுன்னு சொன்னா அதுக்குப் பொருள்... "நான் வெறும் புறமாக இருக்கிறேன் என்கிற உணர்வு கூட இல்லாமல் இருக்க வேண்டும்!" என்பதுதான்.

ஒருதடவை ஒரு சீடன் போதிதர்மர் கிட்டே வந்தானாம்.

“குருவே..! நீங்க என்னை வெறுமையா இருக்கச் சொன்னீங்க... நான் இப்போ வெறுமையானவன் ஆகிவிட்டேன்... நான் திரும்பவும் என்ன செய்யணும்?”-ன்னு கேட்டிருக்கான்.

போதி தர்மர் ஒரு கம்பை எடுத்தார் ... அவன் தலையிலே அடிச்சார். அப்புறம் சொன்னார்:

“போய் அந்த வெற்றுத் தன்மையையும் எறிஞ்சுட்டு வா!”- ன்னார்.

“நான் காலியா இருக்கேன் -னா அதிலேயும் ‘நான்’ இருக்கு இல்லையா... அந்த நான் காலியாக இருக்க முடியாது... ஆகவே நீ வெறுமையானவன் என்று கூற முடியாது!”- அப்படிங்கறது அவரோட கருத்து.

நம்ம ஆள் ஒருத்தன். ஒரு குருகிட்டே போனான்.

“எதுவுமே இல்லாமே காலியா வரணும்... அப்பதான் உனக்குச் சொல்லிக் குடுப்பேன்!”- னார் குரு.

“அப்படித்தான் வந்திருக்கேன்!”- னான்.

“சரி... முதல்லே குருதட்சணையை வை!”-ன்னார் அவர்.

“அதுவும் இல்லாமேதான் வந்திருக்கேன் குருவே!” அப்படின்னான் இவன்.



# 52. வாழ்வின் இயல்பு

கிரேக்க தேசத்துலே ஒரு ராஜா இருந்தார்.

ஒரு மாதிரியான ராஜா.

பிடிவாத குணம் - பைத்தியக்காரத்தனம்... ரெண்டும் அவர்கிட்டே உண்டு.

அந்த மன்னர் கிட்டே ஓர் அழகான கட்டில்... தங்கத்தாலே செஞ்சது அந்தக் கட்டில். விலை உயர்ந்த வைரம்லாம் அதிலே பதிச்சி வச்சிருந்தாங்க... அதுலே மரமே கிடையாது... எல்லாம் தங்கம்... வைரம் வைடூரியம்... அவ்வளவு விலை உயர்ந்த கட்டில் எங்கேயுமே கிடையாது.... வேறே யாருகிட்டேயும் கிடையாது. அப்பேற்பட்ட அபூர்வமான கட்டில்...

அந்த ராஜா தனக்குன்னு சில கொள்கைகளை வச்சிருந்தார்.

அரண்மனைக்கு யாராவது முக்கியமான விருந்தினர்கள் வந்தா... அவங்களை அந்த கட்டில்லே படுக்க வைப்பார். ஆனா ஒரு விஷயம். வர்ற விருந்தினரோட உயரம் அந்தக் கட்டில் நீளத்துக்குச் சரியா இருக்கணும்... படுத்தா, கூட - குறைச்சலா இருக்கக் கூடாது. அப்படி ஒரு ஒழுங்கு முறையை அவர் எதிர்பார்க்கறவர். யாராவது ஒரு விருந்தினர் வந்தா... அன்றைக்கு ராத்திரியே அந்தக் கட்டில்லே படுக்க அனுமதி கொடுப்பார். வர்ற ஆசாமி அந்தக்

கட்டிலை விட நீளமா இருந்தார்ன்னு வச்சிக்குங்க... கட்டிலுக்குத் தகுந்த மாதிரி காலை வெட்டி விடச் சொல்லுவார்...

ஏன்னா... அந்தக் கட்டில் விலை உயர்ந்தது. அதை மாத்த முடியாது. அதனாலே கட்டிலுக்குத் தகுந்த மாதிரி ஆளை மாத்திபுடுவார். அங்கே கட்டில் தான் முக்கியம்... மனிதன் முக்கியமில்லே! அப்படித்தான்... பல சமயங்கள்லே நமக்கு வாழ்வு முக்கியமாத் தெரியறதில்லே. சட்ட திட்டங்கள் தான் முக்கியமாத் தெரியுது!

பொதுவா ஒரு அளவை வச்சித்தான் கட்டில் தயார் பண்ண முடியும்...

ஒரு சராசரி மனிதனின் அளவு அது. சராசரிங்கறது... உதாரணத்துக்கு... பத்து பேர் உயரத்தைக் கூட்டி பத்தாலே வகுத்து வர்ற எண் கணக்கின் ஒரு கற்பனை வடிவம் அது. அந்த வகையிலே தான் அந்தக் கட்டில் தயார் செய்யப்பட்டிருக்கு. ஆனா... சராசரி உயரமுள்ள மனிதன்ங்கறது கணக்குலே வேணும்ன்னா இருக்கலாம்... நடை முறையில் இருக்க முடியாது. அது கணக்குலே ஏற்பட்ட ஒரு கற்பனை அளவு. அந்தக் கற்பனை அளவுக்கு நூறு சதவீதம் 'கரெக்டா' ஒரு விருந்தாளி வரணும்ன்னு எதிர்பார்க்கறது... சரியா இருக்குமா?

சரி!

அந்தக் கட்டிலை விட நீளம் குறைச்சலா அதாவது உயரம் குறைச்சலான ஒரு ஆசாமி வந்துடறார்ன்னு வச்சுக்குங்க... அப்பவும் அந்த ராஜா சும்மா இருக்க மாட்டார். அதுக்கின்னே அரண்மனையிலே சில பலசாலிகளை வச்சிருக்கார். அவங்களை கூப்பிட்டுக்கிட்டு வருவார். வந்த விருந்தாளியைக் கையைக் காட்டி விடுவார்.

தலைப் பக்கம் நாலு பேர் - கால் பக்கம் நாலு பேர் அவரைப் பிடிச்சி... பலங் கொண்ட மட்டும் இழுக்கச் சொல்லுவார். கட்டில் அளவுக்கு கரெக்டா பொருந்தர அளவுக்கு நீட்டச் சொல்லுவார். உடம்பு என்ன கம்பியா... தட்டி நீட்டறதுக்கு?

வர்ற விருந்தினர் நல்ல முறையிலே படுத்து ஆனந்தப் படணும்ன்னு தான் அந்த ராஜா நினைக்கிறார். ஆனா கட்டிலுக்குத் தகுந்த மாதிரி அவரு நீளம் இருக்கணும்ன்னு நினைக்கறதுனாலே எவ்வளவு இடைஞ்சல்!

இது அரசனின் தவறில்லை.. ஒழுங்கு முறையின் தவறு அப்படிங்கறார் ஒரு பெரியவர் (ஓஷோ)

வாழ்க்கையை நெறிப் படுத்தறதுங்கறது வேறே! கட்டுப் படுத்தறதுங்கறது வேறே! ஒழுங்கு முறையைத் திணிக்கிறேன்னு சொல்லிக்கிட்டு பலபேர் வாழ்வையே இழந்துடறாங்க. வாழ்வின் இயல்பு ஆனந்தம்... மகிழ்ச்சி! அந்த மகிழ்வை அடையணும்ன்னா திறந்த மனசோட செயல்படணும். இது தெரியாததுனாலே நம்மள்லே பல பேர்

வாழ்க்கையின் முக்கியமான சில பகுதிகளை இழந்துடறோம்!

நம்மள்லே சில பேர் வேறே மாதிரி...

ஒரு ஆஸ்பத்திரி... ஆப்ரேஷன் நடந்து முடிஞ்சுது... அதுக்கப்புறம் தான் நர்ஸ் அவசரமா ஓடி வந்து சொல்லிச்சு... "டாக்டர்... இந்த பேஷன்டுக்கு கால்லே தான் கட்டி... ஆனா நீங்க மூளையிலே கட்டின்னு நினைச்சி தலையிலே ஆப்ரேஷன் பண்ணிட்டீங்க... மூளை ஆபரேஷன் பண்ண வேண்டிய நோயாளி 15 ஆம் நம்பர் பெட்லே இருக்கார்...!" அப்படின்னுது.

டாக்டர் பார்த்தார்..."பரவாயில்லே... அதனாலே என்ன... கட்டிலை மாத்திட்டா போச்சு! இவரைக் கொண்டு போய் 15 ஆம் நம்பர் பெட்லே போட்டுடு! சரியா போயிடும்!" - அப்படின்னார்.



# 53. நாயின் நல்ல பண்புகள்

உங்களுக்கு கடவுள் பக்தி உண்டா?- ன்னு கேட்டார் ஒருத்தர்.

உண்டு - ன்னு சொன்னார் இன்னொருத்தர். அப்படின்னா நாய்க்கிட்டே இருக்கிற நல்ல பண்புகள்லாம் உங்க கிட்டேயும் இருக்கணும் - ன்னார் அவர்.

இவருக்கு அதிர்ச்சியாயிட்டுது... ஒண்ணும் புரியலே... ‘என்னங்க திடீர்ன்னு இப்படி சொல்லி புட்டீங்களே’- ன்னார். நான் ஒண்ணும் கிண்டலுக்காக அப்படிச் சொல்லலே... வலிமார்களின் வரலாறு படிச்சேன். அதுலே ஹஸன் பஸரி (ரஹ்) சொல்றார்.

‘நாய்க்கிட்டே பத்து நல்ல பண்புகள் உண்டு. இறை நம்பிக்கை உள்ளவர்கள் கிட்டேயும் அந்த பத்து நல்ல பண்புகள் இருக்க வேண்டியது அவசியம்’ - ங்கறார்.

சரி... அப்படியென்ன பத்து நற்பண்புகள் நாய்கிட்டே?

முதல் பண்பு: அது பசித்திருக்கும். பசித்திருத்தல் - ங்கறது நல்லவர்களின் நற்பண்பு.

இரண்டாவது: அது தங்கறதுக்கு குறிப்பிட்ட இடம் கிடையாது. இந்த பண்பு... இறை ஆதரவு பெற்றவர்களின் அடையாளம்!

மூணாவது: அது ராத்திரியிலே கொஞ்ச நேரம் தான் தூங்கும்... இது இறை காதலர்களின் நற்பண்பு.

நாலாவது: அது செத்தால் அனந்தரம் கொள்ளும் பொருள் அதுகிட்டே கிடையாது. இது துறவிகளின் அடையாளம்.

அஞ்சாவது: எஜமான் எத்தனை தடவை அடிச்சி விரட்டினாலும் அவனை விட்டு விலகாது. உண்மை ஆன்மிக மாணவர்களின் வழக்கம் இது.

ஆறாவது: அது பூமியில் தாழ்ந்த இடத்தையே பொருத்திக் கொள்ளும். தாழ்மையுடையோர் நற்பண்பு இது.

ஏழாவது: நாய்... அதோட இடத்தை வேறொன்று ஆக்கிரமித்துக் கொண்டால்... அது வேறே ஒரு இடத்துலே போய் படுத்துக்கும்! இறை நாட்டமுள்ளோர் நற்பண்பு இது.

எட்டாவது: எத்தனை தடவை விரட்டி அடிச்சாலும் அதன் முன்னாடி ஒரு ரொட்டித் துண்டைக் காட்டினால் நட்பால் வருமே ஒழிய வினயத்துடன் வராது. இது பக்திமான்களின் நற்பண்பு.

ஒன்பதாவது: உணவைக் கண்டால் அது தொலைவில் அமர்ந்து வழி பார்த்துக் கொண்டிருக்கும். இது ஏழைகளின் நற்பண்பு.

பத்தாவது: அது ஒரு இடத்தை விட்டுக் கிளம்பி விட்டால் மறுபடியும் அந்த இடத்தைத் திரும்பிப் பார்க்காது.

இது விசாரமுடையவர்களின் குணம். ஆகக்கூடி நாய்கள்கிட்டேயிருந்தும் நல்லவர்கள் கற்றுக் கொள்ளக் கூடிய நற்பண்புகள் இருக்கா...? இல்லையா...?

ஆனா நாம என்ன செய்யறோம்? அடுத்தவங்களைத் திட்டறதுக்குத் தான்... நாய்ங்கற வார்த்தையை உபயோகப்படுத்திக்கிறோம். அவன் கிட்டே பேச்சுக் கொடுக்காதே... நாய் மாதிரி வள்ளுன்னு விழறான்! - அப்படின்னு சொல்றது உண்டு!

ஒருத்தர் விதம் விதமா நாய் குட்டிகள் வளர்த்துக்கிட்டிருந்தார்.

பல்வேறு இனங்கள்... வெவ்வேறு ஜாதிகள்... வெளிநாட்டு வகையிலாம் கொண்டாந்து வச்சி விற்பனை பண்ணிக்கிட்டிருந்தார். எல்லாத்தையும் வீட்டுக்குள்ளேயே வச்சி வளர்த்துக்கிட்டிருந்தார். அவருகிட்டே ஒரு நாய்க்குட்டி விலைக்கு வாங்கறதுக்காகப் போனார் ஒருத்தர்.

"சார்... ஒரு நல்ல ஜாதி நாய்க் குட்டி வேணும்... எஜமான விசுவாசம் அதிகமா இருக்கணும்... எப்பவும் என்னை விட்டுப் பிரியவே கூடாது... அப்படிப்பட்ட குணமுள்ள ஒரு குட்டியை நீங்களே பார்த்து தேர்ந்தெடுத்துக் குடுங்க!" - ன்னார்.

"அப்படின்னா அதோ உங்களுக்கு வலது பக்கம் கட்டிப் போட்டிருக்கேனே... கருப்பா... அந்த குட்டியை எடுத்துக்கிட்டுப் போங்க!" ன்னார் அவர்.

"இதுக்கு எஜமான் விசுவாசம் அதிகமா?" ன்னு கேட்டார் இவர்.

"ஆமாங்க... வளர்க்கறவங்க கிட்டே ரொம்பப் பிரியமா இருக்கும்... பிரியவே பிரியாது!" அப்படின்னார் அவர்.

"அது எப்படி அவ்வளவு உறுதியா சொல்றீங்க?" - ன்னார்.

இது வரைக்கும் இந்த நாய்க்குட்டியை ஏழு பேர்கிட்டே வித்திருக்கேன்...! அழைச்சிக்கிட்டுப் போன அடுத்த நாளே இங்கே ஓடி வந்துடுது!" அப்படின்னார் அவர்.



# 54. அடிமைகள்...

அலுவலகப் பணியாளர்கள் சில பேரைப் பாருங்க... எப்பப் பார்த்தாலும் வேலை... வேலை...ன்னு அங்கேயும் இங்கேயும் ஓடிக்கிட்டே இருப்பாங்க... பார்த்தா... அவங்க வாழ்க்கையையே அந்த வேலைக்கு அர்ப்பணிச்சுட்டது மாதிரி தெரியும்!

உண்மையிலே அது ஒரு 'போதைக் கோளாறு' அப்படிங்கறாங்க உளவியல் நிபுணர்கள்.

'வேலை போதை' - அப்படின்னு அதுக்குப் பேர் கொடுக்கறாங்க! தவறாகப் புரிந்து கொள்ளப்பட்ட போதைகள்லே இதுவும் ஒண்ணு - ங்கறாங்க அவங்க.

இப்படி ஓடி ஆடிக்கிட்டிருக்கிறவங்களைப் பார்த்துட்டு மத்தவங்க தவறா புரிஞ்சிக்கிறாங்களாம்.

சார் ரொம்ப திறமைசாலி... கடினமா உழைக்கக் கூடிய சாமர்த்தியம் உள்ளவர் - ன்னு நினைச்சுடறாங்க.

சாருக்கு தொழில் மேலே அவ்வளவு பக்தி... மதிப்பு.. அப்படின்னுலாம் அதுக்கு புறச்சாயம் பூசிடறாங்க. ஆனா உண்மையிலே அது ஒரு போதைக் கோளாறு. இது தான் உளவியல் நிபுணர்கள் முடிவு. சரி இந்தக் கோளாறு உள்ளவங்க ஏன் இப்படி வேலை வேலைன்னு அலையறாங்களாம் தெரியுமா? தாங்க முடியாத குற்ற உணர்வு... இயலாமை... தாழ்வு மனப்பான்மை... பாதுகாப்பின்மை... இதை யெல்லாம் மூடி மறைக்கறதுக்காகத் தான் அப்படி

நடந்துக்கறாங்களாம்! இதனாலே என்ன ஆகுது? அதிக உழைப்பு... அதிக சாதனைகளை உருவாக்கணும்ங்கற தணியாத தாகம், தனது தேவைகளுக்காக தன்னை வருத்திக்கறது... இப்படி இது எல்லாம் அதோட சேர்ந்துக்குது.

அலுவலகத்துலே வேலை பார்க்கறவங்க மட்டும் தான் - னு இல்லே. பல தனிப்பட்ட மனிதர்கள்... நிர்வாகிகள்... விற்பனையாளர்கள்... குடும்பத்தலைவிகள்... பள்ளி செல்லும் பிள்ளைகள்... இவங்கள்லாம் கூட வேலை போதை அடிமைத் தனத்துக்கு ஆளாகியிருக்கிறாங்க. அதுக்கான... நோய் அறிகுறிகளை அவங்ககிட்டே பார்க்க முடியுதாம்...

ஆனா ஒண்ணு... இப்படிப்பட்டவங்களுக்கு அலுவலகங்கள்லே மேலதிகாரிகள்கிட்டே நல்ல பேர் கிடைக்கும்... பள்ளிப் பிள்ளைகளுக்கு பாராட்டு கிடைக்கும். பரிசு கிடைக்கும். வகுப்புலே மதிப்பெண்கள் அதிகம் கிடைக்கும். அலுவலகங்கள்லே சம்பள உயர்வு... பதவி உயர்வு.... கிடைக்கும். அந்த வகையிலே அவங்க சாதனையாளர்கள் தாம்! ஆனாலும்- மருத்துவர்கள் அவங்களைப் பார்க்கிற பார்வை வேறே. என்ன சொல்றாங்க தெரியுமா அவங்களைப் பற்றி? "இவர்கள்... தங்கள் மீது கொள்ளும் அக்கறை குறித்த எதிர்மன உணர்வுகளின் பழக்க போதையர்கள் - அடிமைகள்!" - அப்படிங்கறாங்க.

பிறரைச் சார்ந்து வாழ்தல் - ன்னு சொல்றோமே... அதுவும் ஒரு போதை அடிமைத் தனம் தானாம். ஆனா இதுக்கான அறிகுறிகள் வேறே மாதிரி இருக்கும். பிறரைச் சார்ந்து வாழ்கிற மனிதர்கள்

பாதுகாப்பு உணர்வு பற்றிய இயல்புக்கு மாறான விறைப்பு நிலையிலே இருப்பாங்க...

ஆக்கிரமிப்பு மனப்பான்மைகளையும் பிறரின் வாழ்வில் ஒவ்வொரு காட்சியையும் கட்டுப்படுத்த வேண்டிய கட்டாயத்தில் இருக்க வேண்டியவர்களாகவும் இருக்காங்க. பிறரைச் சார்ந்து ஒட்டி வாழ்வதிலிருந்து வெளியேறவோ பிரித்துக் கொள்ளவோ இவர்களாலே முடியாது! எங்கும் எவரிடத்திலும் அதிகாரம் செலுத்த முற்படுவதை இவங்களாலே கட்டுப்படுத்த முடியாது. இதுவும் ஒரு வகை போதை அல்லது அடிமைத்தனம் - ங்கறாங்க நிபுணர்கள். வாழ்க்கையை உள்ளபடியே எதிர் கொள்ள இயலாமையின் விளைவு தான் பொதுவா பல கோளாறுகளுக்கும் காரணம்.

ஒரு சிக்கல் குறித்து தனது இயலாமையை ஒப்புக் கொள்ளும் போது அடிமைத்தனத்திலிருந்து மீட்சி கிடைக்கும். அப்படிப்பட்ட ஒரு விடுதலை தான் இன்றைக்குப் பல பேருக்குத் தேவைப்படுது!

அலுவலகப் பணியாளர் ஒருத்தருக்குத் திடீர்னு உடம்பு சுகமில்லாமே போச்சு... மெடிக்கல் லீவு (மருத்துவ விடுப்பு) போட்டுட்டு ஆஸ்பத்திரியிலே படுத்து இருந்தார். அலுவலகத்துலே இருந்த சக ஊழியர்கள்லாம் சேர்ந்து போய் அவரை ஆஸ்பத்திரியிலே பார்த்தாங்க. இவங்களைப் பார்த்ததும் அவரு ஓ... ன்னு கண்ணீர் விட்டு அழ ஆரம்பிச்சுட்டார்.

“அழாதீங்க சார்... சீக்கிரம் குணமாயிடுவீங்க!” ன்னு ஆறுதல் சொன்னாங்க.

"நான் என் உடம்பைப் பத்தி நினைச்சி அழலேங்க... ஆபீஸ்லே நான் பார்த்துக்கிட்டிருந்த வேலையெல்லாம் அப்படி அப்படியே கிடக்குமே... அதை நினைச்சி அழறேன்! ன்னார்.

இவர் இப்படி சொன்னவுடனே வந்தவங்கள்லாம் அழ ஆரம்பிச்சுட்டாங்க!

"நீங்க ஏன் அழறீங்க?" - ன்னு கேட்டார் இவர்.

"ஆபீஸ்லே உங்க வேலை எதுவாயிருந்தாலும் அதையெல்லாம் செஞ்சு முடிக்க நாங்க தயாரா இருக்கோம். ஆனா இதுவரைக்கும் ஆபீஸ்லே நீங்க என்ன வேலை செய்துகிட்டிருந்தீங்க - ங்கறது எங்க யாருக்குமே புரியலே... அதனாலே தான் அழறோம்!" - அப்படின்னாங்க!



# 55. எப்பவும் பிஸி

எனக்குத் தெரிஞ்ச நண்பர் ஒருத்தர்.

ஒரு ஆபீஸ்லே வேலை பார்க்கறார். அப்படி ஒண்ணும் பெரிய நெருக்கடியான வேலை எதுவும் இல்லே. இருந்தாலும் எந்த நேரம் போய்ப் பார்த்தாலும் ரொம்ப 'பிஸி' யா இருக்கறதாகக் காட்டிக்குவார். அப்படி ஒரு சுபாவம் அவருக்கு!

'சார்... உங்களைத் தான் பார்த்துட்டுப் போகலாம்ன்னு வந்தேன்'... அப்படின்னு சொன்னா போதும். உடனே 'கொஞ்சம் இருங்க!' ன்னு சொல்லிபுட்டு மேசை மேலே கிடக்கற ஃபைல்களை எல்லாம் எடுத்துப் பரபரன்னு திருப்புவார். அடுக்குவார். யாருக்காவது போன் பண்ணுவார். மறுபடியும் வைப்பார்... எடுப்பார்... இப்படி ஏதாவது பண்ணிபுட்டு... "ம்! இப்ப சொல்லுங்க... என்ன விஷயம்" - ம்பார்.

வெளியிலேயிருந்து யாராவது ஃபோன் பண்றாங்க - ன்னு வச்சிக்குங்க... போனை எடுத்து உடனே பேசறதில்லே... கையிலே கொஞ்சம் நேரம் எடுத்து அப்படியே சும்மா வச்சிருக்கிறது... அதுக்கப்புறம் பேசறது... அப்பத்தான் இவரு ரொம்ப பிஸியா இருக்காருன்னு ஃபோன் பண்றவங்க நினைப்பாங்களாம்.

இப்படிப்பட்டவங்களை நீங்களும் சில இடங்கள்லே பார்த்திருக்கலாம்.

பிஸியா இருக்கறதா நடிக்கறது இருக்கு பாருங்க... இந்தப் பழக்கம் இப்படியே நீடிச்சிதுன்னா... பின்னாடி பெரிய மனநோயாளியா கூட ஆகலாம்ன்னு நிபுணர்கள் சொல்றாங்க. இவங்க நடிக்கிறாங்க - ங்கறதைப் புரிஞ்சிக்கிறவங்க... இவங்களை கேலியா பார்ப்பாங்க... அப்படிப் பார்க்கறது கண்ணிலே பட்டுட்டா இன்னமும் மனசுக்கு வருத்தமா போயிடும்!

இப்படி, பரபரப்பா இருக்கிறதாக நடிக்கிறாங்களே... இவங்களைப் பத்தி மனோதத்துவ நிபுணர்கள் என்ன சொல்றாங்க தெரியுமா?

இவங்கள்லாம் பதவியிலே அவங்க விரும்பற காரியங்களையும் அந்தஸ்தையும் பெற முடியாத சூழ்நிலையிலே தங்களுடைய 'ஈகோ' வைக் காப்பாத்திக்கறதுக்காக இப்படி செய்யறாங்களாம்.

மனுஷனுடைய மனம் இது மாதிரி சந்தர்ப்பங்கள்லே ஏதாவது சில காரணங்களை கற்பிச்சிக்கிட்டு சமாதானம் அடையுமாம்! பரீட்சையிலே பாஸாகாத மாணவர்கள் ஆசிரியர்களை குறை சொல்றது இருக்கு பாருங்க... அது கூட இப்படித் தானாம்.

இதை... 'மனதின் தற்காப்பு சாதனங்கள்' அப்படின்னு சொல்றாங்க. Defence Mechanism! பிஸியா இருக்கறதாகக் காட்டிக்கறதும் அப்படிப்பட்ட ஒரு வகை பரபரப்பு தானாம்!

ஒருத்தருக்கு அவருடைய பதவியிலே உரிய அங்கீகாரம் கிடைக்கலே... அப்படிப்பட்ட நிலையிலே இப்படி பரபரப்பா இருக்கறதாக

நடிச்சிக்கிட்டு... அதை அடைஞ்சதாகத் திருப்திப் பட்டுக்குவார்! Alcoholic ன்னு சொல்றோம்லே... அது மாதிரி இந்தக் குணத்தை Workaholic ன்னும் சொல்லலாம்!

இது மாதிரி ஆசாமிகள்லாம்... மனநலம் மருத்துவர்கள்கிட்டே போயி... விஷயத்தைச் சொல்லி... ஆரம்பத்திலேயே குணப்படுத்திக்கறது நல்லது.

இனிமே யாராவது உங்ககிட்டே நான் இருபத்து நாலு மணிநேரமும் 'பிஸி' ன்னு சொன்னா... அல்லது எப்பவும் பிஸியா இருக்கறது மாதிரி நடிச்சாங் கன்னா... அவங்களை கொஞ்சம் கவனிச்சிப் பாருங்க...

சரி... இந்த நிலைமையை தவிர்க்கறது எப்படி?

ஒருத்தரை எந்த நாற்காலியிலே (பதவியிலே) கொண்டு கிட்டுப் போய் உக்கார வச்சாலும்... அந்த நாற்காலிக்குப் பொருத்தமா தன்னை மாத்திக்கணும். வேலையைக் கத்துக்கணும். பதவிக்குரிய வேலை நல்லா பழக்கப்பட்டுப் போச்சுன்னா இந்த போலித் தனமான நடிப்புக்கு அவசியமில்லாமே போயிடும்!

ஒரு நாள் காலை 10 மணி...

எப்பவும் பிஸியா இருக்கறதாக சொல்லிக்கிற ஒரு ஆபீசர் ஆபீசை விட்டு அவசரமா வெளியே ஓடிவந்துக்கிட்டிருந்தார். "என்ன சார்... இது... எல்லாரும் அவசரமா ஆபீசுக்கு வர்ற நேரம் இது... நீங்க அவசரமா வெளியே ஓடி வர்றீங்களே?" -ன்னேன்.

“தினமும் கையோட கொண்டு வர்ற ஒரு முக்கியமான விஷயத்தை இன்னைக்கு வீட்டுலேயே விட்டுட்டு வந்துட்டேன். அது தான் நான் அவசரமா போறேன்...!” - னார்.

“அதுக்கு ஏன் இப்படி ஓடணும்... பேசாமே உங்க ஸ்கூட்டரை எடுத்துக்கிட்டுப் போக வேண்டியது தானே...!” - ன்னேன்.

“நான் வீட்டுலே விட்டுட்டு வந்ததே என்னுடைய ஸ்கூட்டர் தானே சார்... அதை எடுத்துக்கிட்டு வரத்தான் ஓடறேன்!” அப்படின்னு சொல்லிபுட்டு வேகமா ஓடி மறைஞ்சார்.



# 56. ஞானியர் நிலை!

ஒரு குரு இருந்தார்! ஜென் குரு!

அவருகிட்டே ஒரு பழக்கம். வேறே என்ன... அப்பப்ப கொஞ்சம் திருடுவார்... அவ்வளவு தான்! பெரிசா ஒண்ணும் திருட மாட்டார்...! அவரு ஈடுபடறதுலாம் சின்ன சின்ன திருட்டு தான்!

அடுத்தவங்களுக்குச் சொந்தமான சின்ன சின்ன பொருள்களை திருட வேண்டியது - மாட்டிக்க வேண்டியது - சிறைக்குப் போக வேண்டியது - விடுதலையானதுக்கு அப்புறம் மறுபடியும் திருட்டு... இதுவே பழக்கமா போச்சு அவருக்கு!

அவருடைய சீடர்களுக்கு இது ஒரு பெரிய புதிர். நம்ம குரு ஒரு பெரிய ஞானி. அவரு இப்படி பண்றாரே - ன்னு நினைக்கறப்ப ரொம்ப ஆச்சரியமா இருந்துது. ஏன் இப்படி பண்றார் - ன்னு ஒண்ணும் புரியலே... பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாங்க... ஒரு நாள் கேட்டே புட்டாங்க!

"ஏன் சுவாமி இப்படி பண்றீங்க? செருப்பைக் கூட திருடணுமா நீங்க? உங்களுக்கு என்ன தேவைங்கறதை எங்ககிட்டே சொன்னா ஒரு செருப்பு கடையையே வாங்கியாந்து குவிச்சுட மாட்டோமா? ஏன் இப்படி பண்றீங்க? என்ன ஆச்சு உங்களுக்கு?" அப்படின்னு கேட்டாங்க.

அதுக்கும் ஒரு சிரிப்பு தான்! சிரிச்சிக்கிட்டே பேசாமே போயிட்டார் குரு!

அதுக்கப்புறமும் அவரு வழக்கத்தை நிறுத்தலே... திருடுறது - மாட்டிக்கறது - ஜெயிலுக்குப் போறது! சீடர்கள் கேட்டா... சிரிச்சிக்கிட்டே போயிடறது! இப்படி அவரு காலம் ஓடிப் போச்சு! கடைசியிலே ஒரு நாள் அவரு மரணப் படுக்கையிலே கிடக்கிறார். பக்கத்துலே அவரு சீடர்கள்லாம் சுற்றி நின்னுக்கிட்டிருக்காங்க!

இப்பவாவது நம்ம குரு உண்மையைச் சொல்ல மாட்டாரா? அப்படின்னு நினைச்சிக்கிட்டு... அந்தப் பழைய கேள்வியையே திரும்பவும் கேட்டாங்க.

"சுவாமி! இப்பவாவது சொல்லுங்களேன்! நீங்க அடிக்கடி திருடிப்புட்டு ஏன் ஜெயிலுக்குப் போனீங்க...! அந்த செயலுக்கு என்ன காரணம்? அதுலே உள்ள மர்மம் என்ன?" - அப்படின்னு கேட்டாங்க.

"அதுலே பெரிய ரகசியம் ஒண்ணும் இல்லே... சாதாரண விஷயம் தான்!" அப்படின்னார் குரு.

இவங்களுக்கு இன்னமும் ஆச்சரியம்! 'என்னது... சாதாரண விஷயமா...?' அப்படி நினைச்சி குழம்பிப் போய் நின்னாங்க.

இப்ப அந்த குரு சொல்றார்.

"வேறே ஒண்ணுமில்லேப்பா... நான் அடிக்கடி சிறைக்குள்ளே போகணும்ன்னு ஆசைப்பட்டேன். அதனாலே தான் திருடினேன். உள்ளே இருக்கறவங்களை சந்திச்சிப் பேசி... அவங்களுக்கு நல்ல வழி காட்டணும்ன்னு ஆசைப்பட்டேன். அதுக்கு இதை விட சிறந்த வழி வேறே எதுவும் எனக்குத் தோணலே! அதனாலே தான் சின்ன சின்ன திருட்டுகள் செஞ்சேன். என்னுடைய பயம்லாம்

என்னன்னா 'எங்கே மாட்டிக்காமே போயிடுவோமோ?' - ங்கறது தான்! மாட்டிக்கிட்டாத்தானே உள்ளே போக முடியும்! எனக்குத் தண்டனை குடுக்கற நீதிபதியும் ரொம்ப நல்லவர்.... ஒவ்வொரு தடவையும் ஆறு மாசத்துக்குக் குறையாமே தண்டனை குடுத்துடறார். உள்ளே எனக்கு ஒரே சந்தோஷம் தான். நிறைய பேர் திருந்தி வெளியே வர்றதுக்கு நான் உதவி பண்ணியிருக்கேன்!'' அப்படின்னார்.

உண்மையான ஞானிக்கு அரண்மனையும் ஒண்ணு தான் - சிறைச்சாலையும் ஒண்ணு தான் அப்படிங்கறதை தன்னுடைய வாழ்க்கை மூலமா நிரூபிச்சிக் காட்டினவர் அந்த குரு!

நம்ம ஆளு ஒருத்தன்.

''அவனும் கொஞ்சம் வித்தியாசமான ஆள் தான்! அடிக்கடி திருடுவான் - மாட்டிக்குவான் - ஜெயிலுக்குப் போவான் என்னப்பா இப்படி பண்றியே - ன்னு கேட்டா...

''ஜெயில்ங்கறது எனக்கு மாமனார் வீடு மாதிரி சார்'' அப்படிம்பான்.

நிஜமாவா அப்படிச் சொல்றே - ன்னு கேட்டா...

''ஆமாம் சார்... என்னுடைய மாமனாரும் அங்கே தான் ஆயுள் தண்டனை கைதியா இருக்கார்!'' அப்படிங்கறான்!



# 57. அழுவது நல்லது

ஒருத்தருக்கு அழணும் போல இருக்கு-ன்னு வச்சிக்குங்க... உடனே தனியா ஒரு இடத்துலே உக்கார்ந்து அழ ஆரம்பிச்சுடலாம்!

அவருக்கே... சிரிக்கணும் போல இருக்கு-ன்னு வச்சிக்குங்க... உடனே தனியா உக்கார்ந்து சிரிக்க ஆரம்பிச்சுடப்புடாது!

பார்க்கறவங்க சந்தேகப்படுவாங்க...

நல்லாத்தானே இருந்தான்... இன்னைக்கு இப்படி உக்கார்ந்து சிரிக்கிறானே...ன்னு யோசிப்பாங்க!

ஆனா எப்படி இருந்தாலும்...

வாய்விட்டுச் சிரிக்கறது எப்படி உடம்புக்கு நல்லதோ அதுமாதிரியே வாய்விட்டு அழறதும் உடம்புக்கு நல்லதுதானாம்!

உளவியல் வல்லுநர்கள் அப்படித்தான் சொல்றாங்க!

பொதுவா நாம என்ன நினைக்கிறோம்...

அழறது கோழைத்தனத்தின் அடையாளம்-ன்னு நினைக்கிறோம். அதுமட்டுமில்லே...ஆண்கள் அழுதா அது அவங்களுக்குக் கேவலம்-ன்னு வேறே நினைக்கிறோம்.

காலங் காலமாகப் பரப்பப்பட்டு வரும் ஒரு தவறான நம்பிக்கை இது- அப்படின்னு உளவியல் வல்லுநர்கள் சொல்றாங்க.

வயிற்றுக்குத் தேவையில்லாத பொருள் வாந்தியா வெளியிலே வந்துடுது. அதுமாதிரி...

மனசுக்குத் தேவையில்லாத ஒண்ணு அழுகையா வெளியிலே வருது.

அவ்வளவுதான்!

மனசுக்குள்ளே அடக்க முடியாத அதிர்ச்சிகள் சேரும்போது அது அழுகையா வந்துடுது. அது மகிழ்ச்சியான அதிர்ச்சியா இருந்தாலும் சரி! அடக்க முடியாத அதிர்ச்சிகளை வெளியே கொட்டிவிடுகிற முயற்சிதான் அழுகை!

வாய்விட்டு அழுது... உணர்ச்சிகள் வெளியே போயிட்டா... மனச் சுமை குறைஞ்சுடுது!

ஆண்-பெண் எல்லாருக்குமே இது பொருந்தும். உண்மையிலேயே உணர்ச்சிகளை அடக்கி வைக்க முயற்சி பண்ணினா அதனாலே பல தீய விளைவுகள் உண்டாகக் கூடிய வாய்ப்பு உண்டு.

அதனாலே...

வாய்விட்டுச் சிரிக்கிறது மாதிரி வாய்விட்டு அழுதுடணும்! அதுதான் நல்லது!

ஆனா அப்படி அழுதா பார்க்கறதுக்கு நல்லா இருக்காது... அதனாலே தனியா உக்கார்ந்து அழுதுட்டு...அப்புறமா கண்ணைத் துடைச்சிக்கிட்டு வந்துடலாம்.

நிபுணர்கள் இப்படி சொல்லிட்டாங்களே... ங்கறத்துக்காக எதுக் கெடுத்தாலும் முகத்தை சோகமா வச்சிக்கிட்டு அழறதுக்குத் தயாரா இருக்கணும்ன்னு அர்த்தம் பண்ணிக்கப்புடாது.

எப்பவாவது அதிர்ச்சியான செய்தி கிடைக்கிறப்போ அழுது அந்த மன அழுத்த நிலையிலேயிருந்து தப்பிக்கலாம்.

அதோட விட்டுடணும். அதுதான் நல்லது!

இருந்தாலும் அழுகையிலே எத்தனையோ ரகம் உண்டு.

ஓர் இளைஞன் அழுதுகிட்டிருந்தான்.

“ஏம்பா அழறே?”-ன்னு கேட்டார் ஒருத்தர்.

“எங்க தாத்தா இறந்துட்டார்...” -ன்னான்.

“உங்க தாத்தாவுக்கு என்ன வயசு?”-ன்னார்.

“95”- ன்னான்.

“அதுதான்...முழுசா வாழ்ந்துட்டுத்தானே போயிருக்கார் இதுக்குப் போய் அழுதுகிட்டு இருக்கியே!”-ன்னார் இவர்.

“நான் அவரு செத்துப் போனதுக்காக அழலே சார்... எம்ப்ளாய்மெண்ட் எக்சேஞ்ச்லேயிருந்து இன்னைக்கு அவருக்கு இன்டர்வியூ கார்டு வந்திருக்கு...

அதை கண்ணாலே பார்க்க அவருக்கு குடுத்து வைக்கலையே... அதை நினைச்சி அழறேன்!” அப்படின்னான்!.



# 58. முதலுணர்வு

ஒரு பத்துபேரை சந்திச்சி...

"உங்களுக்கு வாழ்க்கையிலே எது முக்கியம்?"-ன்னு கேட்டுப்பாருங்க...

சிலபேர் சொல்லுவாங்க...

"எனக்குப் பணம்தான் முக்கியம்!"-பாங்க.

சிலபேர்..."அன்புதாங்க முக்கியம்!"-பாங்க.

சிலபேருக்கு புகழ்தான் முக்கியமாகத் தெரியும்.

நம்மகிட்டே ஒரு கருத்து அல்லது உணர்வு இருக்குமாம். அதுதான் நம்முடைய எல்லா நடவடிக்கைகளுக்கும் உந்துதலா அமையுதாம். மன இயல் நிபுணர்கள் சொல்றாங்க.

பணம்தான் பிரதானம் ன்னு வாழ்ந்து கிட்டிருக்கிறவங்க பலபேர் உண்டு.

அவங்களுக்கெல்லாம் பணம்தான் எல்லாம்.

நிறைய பணம் சம்பாதிக்கணும்... அதை செலவு செய்யணும். இதுதான் அவங்களுடைய வாழ்க்கையா அமையும்.

அவங்க எல்லாத்தையுமே பணத்தைக் கொண்டுதான் எடை போடுவாங்க. மற்றதைப் பத்தியெல்லாம் கவலைப்படமாட்டாங்க.

வேற சிலபேர் எப்படின்னா...

அவங்களுக்கு அன்புதான் பிரதானம்.

பணம்-பதவியெல்லாம் அதற்கு அப்புறம்தான்.

இவங்கள்லாம் அன்புக்காக எதையும் செய்ய தயாரா இருப்பாங்க.

இன்னும் சிலபேர் எப்படின்னா...

அவங்களுக்குப் புகழ்தான் பிரதானம்...

எப்படியாவது புகழ் பெறணும்...அதுதான் அவங்க இலட்சியமா இருக்கும். புகழுக்காக எதையும் செய்ய தயாரா இருப்பாங்க.

இதுமாதிரி... ஒரு மனிதனுடைய எல்லா நடவடிக்கைகளையும் பாதிக்கின்ற ஆற்றல் மிக்க ஓர் உணர்வு அவன் கிட்டே இருக்கும்.

அதுக்குப் பேருதான்; முதலுணர்வு.

ஒரு மனிதனை ஆராயணும் ன்னா... அவனுடைய முதலுணர்வு என்னங்கறதை கண்டு பிடிக்கணும்.

தன்னையறிதல் - ன்னு சொல்றாங்கள்லே ... அதாவது நம்மையே நாம் ஆராய்ந்து பார்க்கறது...

அதுவும் ரொம்ப முக்கியம்.

நம்மையே நாம் ஆராய்ந்து பார்த்தால்... நம்முடைய முதலுணர்வு என்னங்கறதை நம்மாலே கண்டு பிடிச்சுட முடியும்.

நம்முடைய முதலுணர்வைப் பொறுத்துத்தான் நம்முடைய விருப்பு வெறுப்புகள் அமையும், அதனாலே...

நாம எப்படிப்பட்ட ஆள்- ங்கறதை நாமளே புரிஞ்சிக்கறது நல்லது.

இப்ப நீங்க ஒவ்வொருத்தருமே தனியா உக்கார்ந்து யோசிச்சிப் பாருங்க...

நீங்க பணத்துக்கு முக்கியத்துவம் கொடுக்கிற ஆளா?

அன்புக்கு முக்கியத்துவம் கொடுக்கிற ஆளா?

புகழுக்கு முக்கியத்துவம் கொடுக்கிற ஆளா?

உங்க முதலுணர்வு என்னங்கறதைப் புரிஞ்சிக்கிறது பலவிதத்துலே உதவியா இருக்கும்.

அதுமட்டுமல்ல...

தினமும் நாம எத்தனையோ பேர்கிட்டே பழக வேண்டியிருக்கு.

அவங்களுடைய 'முதலுணர்வு' என்னங்கறதை கண்டுபிடிச்சுக்கிட்டா.... அவங்களோட பழகறது நமக்குச் சுலபமாயிடும்.

சில ஆசாமிகளை இப்படி ரகம் பிரிக்கறது ரொம்ப கடினம்.

ஒருத்தர் லஞ்சம் வாங்கிட்டார்...

அவருக்குப் பணம்தான் முக்கியம்-ன்னு முடிவு பண்ணிட்டேன். ஆனா அவரு அதை ஒத்துக்கலே...

“எனக்கு அன்புதான் சார் முக்கியம்... அன்புக்காக எதையும் செய்வேன்!” - அப்படின்னார்.

“அப்படின்னா எதுக்காக பணம் வாங்கினீங்க அந்த ஆளுகிட்டே?”-ன்னு கேட்டேன்.

இதுக்கு அவரு சொல்றாரு;

“அந்த ஆளு வெறுமனே கிட்டே வந்து ‘இந்தாங்க’ பணம்-ன்னு குடுத்திருந்தா வாங்கியிருக்க மாட்டேன் சார்... அதை ரொம்பவும் பணிவா அன்பா என்கிட்டே கொடுத்தார்...

அந்த அன்புக்குக் கட்டுப்பட்டு தான் அதை வாங்கிக்கிட்டேன்!”

அப்படின்னார்!



# 59. ஆயுள் அதிகமாக

இந்தியாவுலே ஒரு மனிதனுடைய சராசரி ஆயுள் காலம்...

ஆணுக்கு 67, பெண்ணுக்கு 70.

அதுசரி...இதுலே ஏன் இந்த மூணு ஆண்டுகள் வித்தியாசம்?

ஆண்களின் ஆயுள் காலம் பெண்களைவிட மூணு வருடங்கள் குறைவா இருக்கறதுக்கு என்ன காரணம்?

ஒரு இதய நோய் சிகிச்சை நிபுணர் என்ன சொல்றார் ன்னா...ஆண்கள்லே பலபேர் பீடி... சிகரெட் குடிக்கிறாங்க... அதுதான் காரணம்ங்கறார்.

மனிதனின் 'ஆயுள்'-ங்கறோம். மனிதனின் 'வாழ்நாள்'-ங்கறோம். இது ரெண்டுக்கும் வித்தியாசம் உண்டு.

நோய் நொடி எதுவும் வராமே இருந்தா மனிதன் 80 வயசுக்கும் மேலே நல்லபடியா வாழலாம்...

இது மனிதனுடைய வாழ்நாள்!-Life Expectancy

ஆனா மனிதனுடைய ஆயுள்-ங்கறது பரம்பரையைப் பொருத்த விஷயம்... மரபு அணுக்களைப் பொருத்த விஷயம்!

இதெல்லாம் ஒரு பக்கம் இருக்கட்டும்...

இந்த உலகத்துலே இருக்கிறவங்க... இன்னும் ஒரு 10, 15 வருஷம் கூடுதலா இங்கே வாழணும் ன்னா அதுக்கு ஏதாவது வழி உண்டா?

நவீன மருத்துவ ஆய்வுகள் அதுக்கு 10 வழிகளைச் சொல்லியிருக்கு!

அது என்னங்கறதை இப்ப பார்க்கலாம்!

முதல்லே... ஒரு நாளைக்கு ஒரு வேளை உணவை முழுமையா மனநிறைவோட சாப்பிடுங்க!

ரெண்டாவது... தினமும் ஒரே மாதிரியான உணவு வேண்டாம். நாளுக்கு நாள் சாப்பாடு வித்தியாசமா இருக்கிறது நல்லது. தினமும் பழம்- காய்கறிகள் அதிகமா சாப்பிடணும்!

மூணாவது கருத்து: வாரத்துக்கு ரெண்டு தடவையாவது மீன் மாதிரியான கடல் உணவு நல்லதாம்.

சைவ உணவுக்காரர்கள் இதைக் காதுலே வாங்கிக்க வேணாம்!

நாலாவது கருத்து: மது அருந்த வேணாம்!

அஞ்சாவது கருத்து: தினமும் ஒரு வேளையாவது பால் சாப்பிடுங்க!

ஆறாவது கருத்து: என்னன்னா... உடல் எப்பவும் இயங்கிக் கிட்டிருக்கிற மாதிரி... ஏதாவது

செஞ்சிக்கிட்டே இருக்கணும்... சும்மா சோர்ந்து போய் ஒரு மூலையிலே உட்கார்ந்துடப்புடாது! உடற் பயிற்சி நல்லது!

ஏழாவது கருத்து: தாகம் எடுக்கற அளவுக்கு கடுமையான உடற்பயிற்சி வேணாம்!

எட்டாவது கருத்து: உணவில் அதிகமா மாமிசக் கொழுப்புச் சத்து (Animal fat)சேராமே பார்த்துக்கணும்!

ஒன்பதாவது கருத்து: வாரத்துக்கு 2 அல்லது 3 தடவைக்கு மேலே அசைவம் சாப்பிட வேணாம்!

பத்தாவது கருத்து: உடல் எடை அதிகமாகாமே பார்த்துக்கணும்! கோபம் மாதிரியான உணர்ச்சிகளுக்கு அடிக்கடி இடம் கொடுக்க வேணாம்!

இந்தப் பத்துக் கருத்துக்களும்... மருத்துவ ஆராய்ச்சி மூலமா கண்டு பிடிக்கப்பட்ட புதிய கருத்துக்கள். அதனாலே இதை மனசுலே வச்சிக்கிட்டு அதுக்குத் தகுந்த மாதிரி நடந்துகிட்டா...

வழக்கத்தை விட அதிகமா ஒரு 10, 15 ஆண்டுகள் இந்த உலகத்துலே வாழ முடியும்-ங்கறாங்க மருத்துவ நிபுணர்கள்.

நம்மள்லே பலபேருக்கு இந்த உலகத்துலே அதிக நாள் வாழணும்ங்கறதை விட...

அதிக நாள் இளமையா இருக்கணும்ங்கறதுலே தான் ஆசை! ரெண்டு வயசானவங்க பேசிக் கிட்டிருக்காங்க.

வயசு ஆக ஆக உடம்புலே பலம் குறைஞ்சு போயிடுது சார்... அதுதான் கவலையா இருக்கு -ன்னார் ஒருத்தர்.

இன்னொரு வயசானவர் சொன்னார்!

“எனக்கு அப்படி இல்லே சார்... சின்ன வயசுலே எனக்கு என்ன பலமோ அதே அளவு பலம்தான் இப்பவும் இருக்கு!”-ன்னார்.

“அது எப்படி?”- ன்னு ஆச்சரியமா கேட்டார் அவர்.

அதுக்கு இவர் பதில் சொன்னார்:

“எங்க வீட்டுலே ஒரு பெரிய அம்மிக்கல்லு உண்டு சார்! சின்ன வயசுலே என்னாலே அதைக் கொஞ்சம் கூட அசைக்க முடியாது...

இப்பவும் என்னாலே அதைக் கொஞ்சம் கூட அசைக்க முடியலே சார்!”

அப்படின்னார்.



# 60. நிம்மதி எங்கே?

அந்த காலத்துலே ஒரு ஞானி இருந்தார்.

அவர் பேர் டயோஜனிஸ். ஆற்றங்கரை மணல்லே சும்மா படுத்திருந்தார்.

அலெக்சாண்டர் இந்தியாவுக்குப் புறப் பட்டப்போ அவரைப் போய் பார்த்தார்.

ஞானி அவரைப் பார்த்து, “நீ எங்கே போறே? எதுக்காகப் போறே?”-ன்னு கேட்டார்.

“நான் ஆசியா மைனரை வெல்லப் போகிறேன்!”-ன்னார் இவர்.

“அதுக்கப்புறம் என்ன செய்யப் போறே?” -ன்னார்.

“இந்தியாவை வெல்வேன்!”-ன்னார்.

“அதுக்கப்புறம்?”-ன்னு கேட்டார் அந்த ஞானி.

“உலகத்தையே வெல்வேன்!”-ன்னார் அலெக்சாண்டர்.

“உலகம் பூரா ஜெயிச்சதுக்கு அப்புறம் என்ன செய்யப் போறே?”- அப்படின்னு அவர் மறுபடியும் கேட்டார்.

“அதுக்கப்புறம் நான் நிம்மதியா ஓய்வெடுப்பேன்!”-னார் அலெக்சாண்டர்.

இந்தப் பதிலைக் கேட்டதும் ஆற்று மணல்லே படுத்திருந்த அந்த ஞானி சத்தம் போட்டுச் சிரிச்சார்.

கொஞ்ச தூரத்துலே படுத்திருந்த தன்னுடைய நாயைக் கூப்பிட்டார். அது அவரு பக்கத்துலே வந்து நின்னுது. ஞானி அந்த நாய்கிட்டே சொன்னார்.

“பார்த்தியா...இவர் சொல்றதை? உலகத்தையெல்லாம் ஜெயிச்சதுக்கு அப்புறம் இந்த மனிதர் ஓய்வு எடுக்கப் போறாராம்! ஆனா நாம ரெண்டுபேரும் இங்கே ஒரு சின்ன இடத்தைக் கூட ஜெயிக்காமே நிம்மதியா ஓய்வு எடுத்துக்கிட்டிருக்கோம்!”

-அப்படின்னார்.

நாய்கிட்டே இப்படி சொல்லிபுட்டு அதுக்கப்புறம் அலெக்சாண்டரைப் பார்த்து சொன்னார்.

“இதோ பாருப்பா... ஓய்வுதான் உன்னுடைய கடைசி இலட்சியம் ன்னா இந்த அழகான ஆற்றங்கரையிலே எங்களோட நீ இப்பவே சேர்ந்துக்கலாமே! கடைசியிலே ஓய்வு எடுக்கறதுக்காக வேண்டி, ஏன் உலகம் பூரா துன்பத்தையும் துயரத்தையும் உண்டாக்கணும்? இப்பவே இங்கேயே நீ ஓய்வு எடுக்கலாமே!”-ன்னார். இதைக் கேட்டதும் அலெக்சாண்டர் ஒரு மாதிரியா ஆயிட்டார்.

“நீங்க சொல்றது அறிவு பூர்வமாகத்தான் இருக்கு... ஆனா நான் இப்ப ஓய்வு எடுக்க முடியாது... முதல்லே உலகத்தை ஜெயிச்சுட்டு வர்றேன்...!” -ன்னார்.

“உலகத்தை ஜெயிக்கறதுக்கும் ஓய்வு எடுக்கறதுக்கும் சம்பந்தம் எதுவும் இருக்கிறதாகத் தெரியலையே...!”-ன்னார் அவர்.

"நீங்க சொல்றது நியாயம் தான்... ஆனாலும் நான் ஏற்கனவே புறப்பட்டாச்சு... பாதியிலே பின் வாங்க வழியில்லே!" -ன்னார்.

ஞானி சொன்னார்."நீ பாதி வழியிலே திரும்பத்தான் போறே! ஏன்னா...பயணம் முடிஞ்ச பிறகு யார்தான் இதுவரைத் திரும்பி வந்திருக்காங்க?" அப்படின்னார்.

ஞானி சொன்ன தீர்க்கத் தரிசனம்தான் பலிச்சுது.

நாடு திரும்பும்போது பாதி வழியிலேயே அலெக்சாண்டர் இறந்து போனார்.

இந்த நிகழ்ச்சியை சொல்ற ஒரு பெரியவர் (ஓஷோ) வாழ்வின் உண்மைகளை விளக்குறார்.

"எல்லா அலெக்சாண்டர்களுமே செத்துத்தான் போறாங்க... பாதி வழியிலே...!"-அப்படிங்கறார் அவர்.

அவங்க செல்வங்களைச் சேர்க்கிறாங்க... ஆனா அதை அனுபவிக்க அவங்களுக்கு நேரம் கிடைக்கிறதில்லை.

அப்படிப்பட்டவங்க... எல்லா இசைக் கருவிகளையும் சேகரிச்சுடறாங்க...

சரியான தருணத்துலே அதையெல்லாம் வாசிக்கிற சக்தியை அவங்க இழந்துடறாங்க...

கடைசியிலே வெறுங்கையோட ஒண்ணும் செய்ய முடியாமே அவங்கள்லாம் அழ ஆரம்பிச்சுடறாங்க. இன்றைக்குப் பலபேர் வாழ்க்கையிலே இதுதான் நடந்துகிட்டிருக்கு.

கைக்கு எட்டின தூரத்துலே இருக்கிற நிம்மதியைத் தேடி கழுத்தைச் சுத்தி வந்துகிட்டிருக்கோம்.

அப்படி வந்து சேர்றதுக்குள்ளே நிம்மதி காணாமே போயிடுது...

இந்தக் காலத்துலே ஒருத்தர்...

ஒருநாள் நடு ராத்திரி...

ஒரு சாலை வழியா வந்துக்கிட்டிருந்தார். வழியிலே ஒருத்தர்... அவரைப் பார்த்தார்... "யார் நீங்க? இந்த ராத்திரி வேளையிலே எங்கே இப்படி போறீங்க?" -ன்னு கேட்டார்.

"வாழ்க்கையிலே நிம்மதி இல்லாமே போயிடிச்சு... இப்ப நான் நிம்மதியைத் தேடித்தான் போய்க்கிட்டிருக்கேன்...!" - அப்படின்னார் அவர்.

"அப்படின்னா என்னோட வாங்க... இங்கேயிருந்து 5 கிலோ மீட்டர் தூரத்துலே ஒரு ஆஸ்ரமம் இருக்கு... அங்கே ஒரு சாமியார் இருக்கார். அவருகிட்டே போனா நமக்கு நிம்மதி கிடைக்கும்!" -ன்னார் இவர்.

இதுக்கு அவரு சொன்னார்:

"நல்லா பாருப்பா... நான்தான் அந்த சாமியார்... அங்கேயும் இப்ப நிம்மதி இல்லே... போலீஸ் விசாரணை ஆரம்பமாயிட்டுது... அதுதான் புறப்பட்டுட்டேன்!" - அப்படின்னார்.



# 61. செயற்கைப் பூச்சிகள்!

ஒரு சின்ன எறும்பு.

அது பாட்டுக்குப் பேசாமே ஒரு இடத்துலே உக்கார்ந்திருக்கு.

அது இருக்கிற இடத்தைத் தாண்டி யாராவது போனா திடீர்ன்னு ஓடிவந்து தாக்குது... விரட்டுது... இது எப்படி சாத்தியம்?

விஷயம் என்னன்னா... அது நிஜமான எறும்பு இல்லே... செயற்கை எறும்பு! அது ஒரு ரோபோட்!

அமெரிக்காவுலே உள்ள மாசாசூஸெட்ஸ் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னாலஜி...

அங்கே உள்ள ஆய்வுக் கூடத்துலேதான் இதுமாதிரி செயற்கைப் பூச்சிகளை உருவாக்கறாங்க!

இவங்க உருவாக்கியிருக்கிற செயற்கை எறும்புக்கு ஜென்கிஸ் -ன்னு பேரு...

இந்த ரோபோட் எறும்பு... கொஞ்சம்கூட செயற்கைத்தனம் இல்லாமே இயற்கையா சாதாரணமா போவுது... வருது! நடக்குது... திரும்புது... முன்னாடி போறவரைத் தாக்குது.

ஒரு பெரிய கம்ப்யூட்டருக்குப் பதிலா... ஒரு சின்ன மைக்ரோ புராசசர் இந்தப் பணிகளைச் செய்யறதுனாலே இதைப் பார்க்கறதுக்கு ஒரு உயிருள்ள எறும்பு மாதிரியே இருக்கு... அது மாதிரியே வேலை செய்யுது!

இதுமாதிரி எறும்பு மட்டும் இல்லே... எத்தனையோ விதமான பூச்சிகளை அங்கே உள்ள விஞ்ஞானிகள் உருவாக்கறாங்க... எதுக்காக?

வீட்டு வேலைகள் செய்யறதுக்காக! அறுவைச் சிகிச்சைகள் செய்யறதுக்காக! செவ்வாய் கிரகத்துக்குப் போய் ஆராய்ச்சி செய்யறதுக்காக!

இங்கே உள்ள விஞ்ஞானிகளின் முக்கியமான நோக்கம் என்ன தெரியுமா?

ஒரு செயற்கையான உயிரை... இரும்பு உடம்புகளுக்குக் கொடுக்கறது! அதுகளை இந்த உலகத்துலே உலவ விடறது!

அது மூலமா ஆக்கபூர்வமான பணிகளைச் செய்யறது! அதுதான் குறிக்கோள்.

முதல்லே அவங்க உருவாக்கினதுக்குப்பேரு ஆலன். அது ஒரு துடைப்பம் - Vaccuum Cleaner.

இது சாவி குடுத்த பொம்மை மாதிரி... சுவத்துலே உள்ள ஒட்டடைகளை சுத்தம் செய்யும்... கதவுகிட்டே போகும்... அதுலே உள்ள தூசுகளைத் துடைக்கும். அவ்வளவுதான்!

அந்த ஆய்வுக் கூடத்துலே தயாரான ரெண்டாவது ரோபோட் - ஹெர்பெர்ட்!

இதுக்கு வேலை என்ன தெரியுமா?

அந்த ஆய்வுக் கூடத்துலே அங்கங்கே இருக்கிற காலி சோடாபாட்டில்களை சேகரிச்சிக்கிட்டு வர்றது!

இதுமாதிரி இயந்திரப் பூச்சிகளை அனுப்பி சந்திரன்லேயும் செவ்வாய் கிரகத்துலேயும் ஆய்வுகள் நடத்தலாம்னு யோசிக்கிறாங்க.

அதுக்காகவே இவங்க என்ன பண்றாங்கன்னா... இந்த இயந்திரப் பூச்சிகளின் ஒவ்வொரு பகுதியையும் ரொம்ப நுணுக்கமா தயாரிக்கிறாங்க...

நுண்ணிய உணர்திறன் கொண்டதா செய்யிறாங்க... நுணுக்கமா செய்திகளைச் சேகரிக்கிற வகையிலே வடிவமைக்கிறாங்க.

ஜென்கிஸ் -ங்கற எறும்பு இந்த வகையிலேதான் வடிவமைக்கப்பட்டிருக்கு!

அட்டிலா -ங்கற சக்திவாய்ந்த ரோபோட்டையும் விண்வெளி ஆய்வுக்காக வடிவமைச்சிருக்காங்க!

"ஒவ்வொரு கம்ப்யூட்டர் சில்லும் எழுந்திரிச்சி நடக்கணும்... அதுதான் எங்களுடைய கனவு... அந்த கனவு விரைவில் நனவாகும்!" - அப்படிங்கறார் அங்கே உள்ள ஒரு விஞ்ஞானி.

நம்ம எறும்புகளைப் பற்றி ஒரு கதை உண்டு. அதாவது...

ஒரு பெரிய யானை மிரண்டு போயி ஓடிவந்துக்கிட்டு இருந்துதாம்.

வழியிலே ஒரு சின்ன எறும்பு நின்னுக் கிட்டிருந்துது. அது அந்த யானையைப் பார்த்து - "ஏன் இப்படி பயந்து ஓடிவந்துக் கிட்டிருக்கே...?" -ன்னு கேட்டுது.

அதுக்கு அந்த யானை சொல்லிச்சி...

'ஒரு பூனை என்னை துரத்திக்கிட்டு வருது... அதுதான் பயந்து ஓடிவந்துக்கிட்டிருக்கேன்!' -ன்னுது.

அதுக்கு இந்த எறும்பு சொல்லிச்சாம்:

"அதுக்காகவா பயப்படறே... இனிமே பயப்படாதே... பேசாமே என் பின்னாடி வந்து ஒளிஞ்சிக்கோ!" அப்படின்னுதாம்!



# 62. தவளையால் முடியும்!

அமெரிக்க ஆராய்ச்சியாளர்கள் சிலபேர் கனடா நாட்டுலே உள்ள ஒரு காட்டு வழியா போய்க் கிட்டிருந்தாங்க!

அங்கே ஒரு காட்சியைப் பார்த்தாங்க!

அதாவது பனிக்கட்டிகள்லே தவளைகள் உறைந்து போன நிலையிலே இருந்ததைப் பார்த்தாங்க.

தவளையின் உடல் கெடாமே அப்படியே இருக்கு... காலைப் பிடிச்சி அலட்சியமா தூக்கினா... அது கண்ணாடி மாதிரி உடைஞ்சுடுது! அவ்வளவு தூரம் பனிக்கட்டியோட கட்டியா உறைஞ்சு போயி கிடக்கு!

அதுமாதிரி உறைஞ்சு கிடக்கிற ஒரு தவளையை எடுத்து கொஞ்சம் சூடு படுத்தினா அது துள்ளிக் குதிக்க ஆரம்பிச்சுடுது!

அப்பத்தான் அதெல்லாம் உயிரோட இருக்கற விவரம் அவங்களுக்குப் புரிஞ்சுது!

அதுக்கப்புறம் அதைப்பத்தி தீவிரமா ஆராய ஆரம்பிச்சுட்டாங்க!

கனடா நாட்டுக் காடுகள்லே உள்ள ஒரு நாலுவிதமான தவளைகள்... இதுமாதிரி குளிர் காலத்துலே உறைஞ்சுடுது! மறுபடியும் பனி உருகறப்போ உயிர்த்தெழுந்து தாவிக் குதிச்சி ஓட ஆரம்பிச்சுடுது.

பனிக்கட்டி அளவுக்குக் கட்டியா உறைஞ்சு போகிற தவளைகள் மறுபடியும் உயிர்வந்து ஓடறது எப்படி? உறையும்போது தவளைகள் சாகாமே இருக்கறது எப்படி?

இந்தத் தவளைகள்லாம் அதுக்கு ரெண்டு வகையான உத்திகளைக் கடைபிடிக்குதாம்!

தவளை உடம்புலே செல்கள் இருக்குல்லே... அந்த செல்களுக்கு உள்ளேயும் வெளியேயும் தண்ணீர் உண்டு. உள்ளே இருக்கிற தண்ணீர் உறையறதில்லே!

அதுக்குக் காரணம் எத்திலீன் கிளைகால் (Ethylene Glycol) அப்படிங்கற சர்க்கரைப் பொருள். இதை தவளையின் உடம்புலே உள்ள செல்கள் உற்பத்தி செய்துடுது.

இது செல்வரிசைக்கு வெளியே திரைமாதிரி படர்ந்துடுது. அது குளிர் உள்ளே போறதை தடுத்துடுது!

ஒரு தவளை உறைநிலையை அடையறப்போ அது உடம்புலே ஏராளமான அளவு 'எத்திலீன் கிளைகால்' உற்பத்தி செய்யப்படுது. அதனாலே தவளையின் எடையே 5ல் 1 பங்கு அதிகமாயிடுது.

சாதாரணமா 125 கிராம் எடையுள்ள தவளை அந்த சமயத்துலே 150 கிராம் எடை இருக்குமாம்.

உறைஞ்சுபோன தவளையின் இதயம் சுருங்கி விரியறதில்லே! அப்படியே நின்னுடுது! ரத்த ஓட்டமும் நின்னுடுது! நுரையீரல் சுருங்கி விரியறதில்லே! அதனாலே தவளையின் சுவாசமும் நின்னுடுது!

கிட்டத்தட்ட செத்துப் போனது மாதிரிதான்! அந்த நிலையிலே தவளை பனிக்கட்டித் துண்டு மாதிரி ஆயிடும்!

சரி! மனிதனை இதுமாதிரி உறைய வச்சி மறுபடியும் உயிர் கொடுக்க முடியுமா?

தவளை உடல்லே உற்பத்தியாகிற அந்த 'எத்திலீன் கிளைகால்'ங்கற சர்க்கரைப் பொருள் மனித உடம்புலேயும் உற்பத்தி ஆகுது! ஆனா போதுமான அளவுக்கு உற்பத்தியாறதில்லே!

தவளையின் ரத்தம் இந்தப் பொருளை ஏற்றுக் கொள்கிற மாதிரி மனித ரத்தம் ஏற்றுக் கொள்றதில்லை.

ஒரு லிட்டர் தவளையின் ரத்தத்தில் 80 கிராம் எத்திலீன் கிளைகால் இருந்தாலும் அதனாலே தீய விளைவு எதுவும் ஏற்படறதில்லை!

ஆனா மனித உடம்புலே ஒரு லிட்டர் ரத்தத்துலே எத்திலீன் கிளைகால் 4 கிராமை தாண்டினாவே அவரு நீரிழிவு நோயாளியா ஆயிடறார்.

அதனாலே தவளையாலே முடியறது மனிதனாலே முடியலே!

இதுக்கு வேறே வழி ஏதாவது கண்டுபிடிக்கணும்.

ஆராய்ச்சி நடந்துகிட்டுதான் இருக்கு.

ஒரு காலத்துலே மனுஷனையும் பனிக்கட்டி மாதிரி உறைய வச்சி... மறுபடியும் உயிர்த்தெழ வைக்க முடிந்தாலும் முடியும்!

போன நூற்றாண்டுலே 'எட்மண்ட்'னு ஒரு எழுத்தாளர் இருந்தார். அவரு ஒரு நாவல் எழுதினார். 'Man with broken car' -ன்னு பேரு அதுக்கு.

நெப்போலியன் படை ரஷ்யா மீது படையெடுத்துப் போகும். கடுமையான குளிர்.

பிரான்ஸ் படை அங்குலம் அங்குலமா முன்னேறும். ஒரு படைப்பிரிவின் கர்னல் ஒருத்தர் திடீர்ன்னு கீழே விழுவார். உடல் விறைச்சுடும். மூச்சு நின்னுடும். அவர் இறந்துட்டதா நினைச்சி அப்படியே போட்டுட்டுப் போயிடுவாங்க.

இருபது வருஷம் கழிச்சி பூமியைத் தோண்டறவங்க பார்வையிலே பனிக்கட்டியாலே மூடியிருக்கிற அந்த கர்னல் உடம்பு கிடைக்கும். சுற்றுப்புற வெப்பம் காரணமா பனிக்கட்டி உருகும். கர்னலுக்கு உயிர் வந்துடும்!

எட்மண்ட்ங்கற எழுத்தாளரின் கற்பனையிலே உருவான இந்த கதை... உண்மையிலேயே சாத்தியமானாலும் அது ஆச்சரியப்படறதுக்கில்லே!

நம்ம ஆசாமி ஒருத்தன் திடீர்ன்னு... குளிர் தாங்காமே சுருண்டு விழுந்துட்டான்! டாக்டர் வந்து பார்த்தார்... நாடித்துடிப்பு இல்லை! “ஆள் செத்துட்டான்!”-ன்னு சொல்லிபுட்டுப் போயிட்டார்.

இவனைத் தூக்கிக்கிட்டு சுடுகாட்டுக்குப் போறாங்க! பாதி வழியிலேயே இவன் பாடையிலே முழிச்சிக்கிட்டு எழுந்திரிச்சி உக்கார்ந்துகிட்டு...

“டேய்! நான் இன்னும் சாகலே... உயிரோடதான் இருக்கேன்!” -ங்கறான்.

அவனை தூக்கிட்டு வந்த நாலு பேர்லே ஒருத்தன் அவன் தலையிலே தட்டி...

“டேய்! டாக்டரே சொல்லிட்டாரு நீ செத்துட்டதா! அவரை விட நீ விஷயம் தெரிஞ்சவனா? பேசாமே படுடா!”

அப்படின்னு சொல்லிட்டு - வேகமா நடக்க ஆரம்பிச்சானாம்!



# 63. நடப்பது நடக்கட்டும்!

ஒரு ஊர்லே ஒருத்தன் இருந்தான்.

சாதாரண ஆளுதான். குதிரை வண்டி ஓட்டிக்கிட்டிருந்தான். எலும்பும் தோலுமா ஒரு குதிரை. ஓட்டையும் உடைசலுமா ஒரு வண்டி. இதுதான் அவன் சொத்து. இதை வச்சே அவன் காலம் தள்ளிக்கிட்டிருந்தான்.

ஒருநாள் அவன் அந்த வண்டியிலே எங்கேயோ போயிட்டுத் திரும்பி வந்துக் கிட்டிருந்தான், அப்போ அந்த குதிரை ஒரு இடத்துலே கால் தடுமாறி கீழே விழுந்துட்டுது. கால் முறிஞ்சு போச்சு.

ஊர்லே உள்ளவங்கள்லாம் அவனைப் பார்த்து இரக்கப்பட்டாங்க.

“ஐயோ பாவம்... இப்படி ஆயிட்டுதே... இனிமே எப்படித்தான் பிழைப்பு நடத்தப் போறியோ...!” ன்னு சொல்லி பரிதாபப்பட்டாங்க.

ஆனா இவனோ கொஞ்சம் கூட பதட்டப்படலே...

“நடக்கறது நடக்கட்டும்! பார்க்கலாம்!” ன்னு சொல்லிப்புட்டு அவன் பாட்டுக்குப் போயிட்டான்.

கிராமத்து ஜனங்களுக்கு ரொம்ப ஆச்சரியம்...

இவனுடைய அமைதி- நிதானம்-அலட்டிக்காத தன்மை- இதுதான் அவங்க ஆச்சரியத்துக்குக் காரணம்.

அவங்க என்ன பண்ணினாங்க ... காட்டுக்குப் போய் புதுசா ஒரு குதிரையைப் பிடிச்சி கொண்டுகிட்டு வந்து அவன்கிட்டே பரிசா கொடுத்துட்டாங்க.

இதை சிலபேர் பார்த்தாங்க. அவங்க என்ன சொன்னாங்க தெரியுமா?

“நீ கொடுத்துவச்சவன் ... மோசமான குதிரைக்குப் பதிலா நல்ல குதிரையே உனக்குக் கிடைச்சுட்டுதே!”-ன்னாங்க.

இப்பவும் அவன் அலட்டிக்கலே.

“நடக்கறது நடக்கட்டும்... பார்க்கலாம்!” ன்னு சொல்லிப்புட்டுப் பேசாமே போயிட்டான்.

கொஞ்ச நாளாச்சு... என்ன நடந்தது தெரியுமா?

காட்டுலேயிருந்து பிடிச்சிக்கிட்டு வந்த குதிரை ஒருநாள் காட்டுக்கே ஓடிப்போச்சு.

“ஐயோ பாவம் ... நாம குடுத்த குதிரையும் அவனை விட்டுட்டுப் போயிட்டுதே!” ன்னு ஜனங்க பரிதாபப்பட்டாங்க.

இப்பவும் அந்த ஆளு பொறுமையா “நடக்கறது நடக்கட்டும் பார்க்கலாம்!” ன்னு சொல்லிபுட்டான்.

மறுபடியும் கொஞ்சநாள் ஆச்சு.

ஓடிப்போன குதிரை இன்னும் ஒரு ஐந்தாறு குதிரைகளையும் சேர்த்துக்கிட்டுத் திரும்பி வந்தது. உடனே பார்த்தாங்க ஊர் ஜனங்க.

“நீ கொடுத்துவச்சவன் ...அஞ்சாறு குதிரை சேர்ந்து கிடைச்சுடுத்தே உனக்கு!”-ன்னாங்க.

இப்பவும் அந்த ஆளு பதட்டப்படலே. வழக்கமா சொல்றது மாதிரியே சொன்னான்.

அதுக்கப்புறம் ஒருநாள்.

அந்த வண்டிக்காரனனின் ஒரே மகன் ... அந்த அஞ்சாறு குதிரைகளையும் நல்லா கவனிச்சிக் கிட்டிருந்தான். வண்டியிலே பூட்டறதுக்குப் பழக்கிக்கிட்டிருந்தப்போ ... ஒரு முரட்டுக் குதிரை கொடுத்த உதையிலே அவன் கால் முறிஞ்சு போச்சு.

"ஐயோ உன் பிள்ளைக்கு இப்படி ஆயிட்டுதே! -ன்னு ஊர் ஜனங்க பரிதாபப்பட்டாங்க.

அப்பவும் இவன் 'நடக்கறது நடக்கட்டும்' ன்னு சொல்லிபுட்டு மகனை கவனிச்சிக்கிட்டிருந்தான்.

அதுக்கப்புறம் திடீர்ன்னு ஒருநாள் அந்த தேசத்துலே போர் ... அடுத்த தேசத்துலேயிருந்து படையெடுத்துக்கிட்டு வந்துட்டாங்க!

"வீட்டுக்கு ஒரு ஆள் வரணும் சண்டை போடறதுக்கு!" ன்னு ராஜா உத்தரவு போட்டார்.

வண்டிக்காரன் பிள்ளைக்கு கால் ஒடிஞ்சதுனாலே சண்டைக்கு போக வேண்டிய அவசியமில்லாமே போச்சு.

அவனுக்கும் வயசானதுனாலே ... போக வேண்டிய கட்டாயமில்லே!

இப்பவும் அவனைப் பார்த்து ..." நீ ரொம்பவும் குடுத்துவச்சவன்!" -னாங்களாம்.

இவனும் வழக்கம் போலவே 'நடக்கறது நடக்கட்டும் பார்க்கலாம்' ன்னு சொல்லிக்கிட்டே அவன் வேலையைப் பார்த்துக்கிட்டிருந்தானாம்.

இது ஒரு கதை. வீட்டுலே தாத்தாக்கள் பாட்டிகள் சொல்ற கதை.

கதை ஒரு மாதிரியா தெரிஞ்சாலும் இதுலேயிருந்து நாம தெரிஞ்சிக்க வேண்டிய ஒரு கருத்து ... தத்துவம் சொன்னா ... வாழ்க்கையிலே சுக துக்கங்களை நாம சமமா பார்க்கப் பழகிக்கணும்ங்கறதுதான்.

நடக்கறது நடக்கட்டும் ன்னு சொல்லிக்கிட்டு நாம பாட்டுக்கு பேசாம படுத்துத் தூங்கலாம் -ன்னு இதுக்கு அர்த்தம் பண்ணிக்கப்புடாது.

ஒரு குதிரை பந்தயம் நடந்துக்கிட்டிருந்தது.

ஒருத்தன் ஒரு குதிரை மேலே பணம் கட்டினான்.

அது ஜெயிக்கலே!

பக்கத்துலே இருக்கறவர் சொன்னாராம்;

“நீ பணம் கட்டினியே ... அந்தக் குதிரை ஓடவே இல்லே ... அது பாட்டுக்கு நடந்து போவுது பார்!”-ன்னாராம்.

அதுக்கு இவன்:

“நடக்கறது நடக்கட்டும்!”

அப்படின்னானாம்!



  